ஸர்வ வேதாந்த ஸித்தாந்த
ஸார ஸங்கிரஹம் - 5

"ஸ்ரீ சங்கர க்ருபா அனுபந்தம்'

21/5

அகிலபாரத சங்கரஸேவா ஸமிதி வெளியீடு

॥ श्रीः ॥

# श्री जगद्गुरुग्रन्थमाला–२६







# ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலா

26

21/5

அகிலபாரத சங்கரஸேவா ஸமிதி வெளியீடு

॥ श्रीः ॥



"एषा शंकरभारती विजयते निर्वाणसौख्यप्रदा"

# श्री जगद्गुरुग्रन्थमाला–२६

## सर्ववेदान्तसिद्धान्तसारसंग्रहः

(पञ्चमः अंशः)



# ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலா–26

## ஸர்வவேதாந்த ஸித்தாந்த ஸாரஸங்க்ரஹம்

(ஐந்தாம் பகுதி)

ஸ்ரீ வாணீ விலாஸ் பிரஸ்,
ஸ்ரீரங்கம்.

1973



॥ श्रीगुरुभ्यो नमः ॥

# ॥ समर्पणम् ॥

श्रीमच्छंकरदेशिकस्य महिता मूर्तिद्वयी या स्थिता
तत्रैका हि तिरोबभूव विजने केदारनाथस्थले ।
अन्या वर्णमयी तु भाष्यनिचयस्तोत्रप्रबन्धात्मना
सर्वत्रैव समुज्ज्वला विजयते ताभ्यां तनुभ्यां नमः ॥ १ ॥

यस्तत्रास्ति लघुप्रबन्धनिचयः स्तोत्राणि भूयांसि वा
तेषां द्राविडभाषयाऽनुवदनं विद्वद्वरैः कारितम् ।
श्रीमच्छंकरसेविनी सुसमितिः सम्यक्प्रकाश्याधुना
विद्यातीर्थपदे समर्पयति तत् लोकोपकारक्षमम् ॥ २ ॥

शंकरगुरुसंस्थापितसर्वजगद्वन्द्यशारदापीठम् ।
शंकरसेवासमितिः प्रकरणमालार्पणादलंकुरुते ॥ ३ ॥

शंकरगुरुवररचितप्रकरणमालां शुभानुवादयुताम् ।
शंकरपरंपरागतविद्यातीर्थे समार्पिपत्समितिः ॥ ४ ॥

शंकरसेवारसिकाः शांकरसिद्धान्तसारसर्वस्वम् ।
शंकरसेवासमितिप्रकटनमालां सदाऽपि सेवन्ताम् ॥ ५ ॥

# பதிப்புரை

ஸ்ரீ தக்ஷிணாம்னாய சிருங்கேரி ஸ்ரீசாரதா பீடாதிபதி ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ மஹாஸ்வாமிகள் அவர்களின் பரமாநுக்ரஹத்தை முன்னிட்டு ஸ்ரீ சங்கர ஸேவா ஸமிதியால் வெளியிடப்பட்டுவரும் ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலாவில் இது 26-வது மலராகும். இதில் ஸர்வவேதாந்த ஸித்தாந்த ஸாரஸங்க்ரஹத்தின் கடைசிப் பகுதியும் (சுலோகம் 866 முதல் 1006 முடிய), ப்ரஹ்மஜ்ஞாநாவளீமாலா, காசீ பஞ்சகம், ப்ரச்நோத்தரரத்நமாலிகா என்ற மூன்று சிறிய ப்ரகரணங்களும் அடங்கியுள்ளன.

ஸர்வவேதாந்த ஸித்தாந்த ஸாரஸங்க்ரஹம் என்ற பெரிய ப்ரகரணம் முழுவதற்கும் தமிழில் பொழிப்புரையும் ஆங்காங்கு விசேஷமான கருத்துரையும் எழுதித் தந்த ஸ்ரீ ஞானாநந்தபாரதீ ஸ்வாமிகளுக்கு நம் ஸமிதியின் சார்பில் வந்தனங்களை ஸமர்ப்பித்துக்கொள்கிறேன். இதற்குப் பதவுரையும் ப்ரஹ்மஜ்ஞாநாவளீமாலா, காசீ பஞ்சகம், ப்ரச்நோத்தரரத்நமாலிகா இவைகளுக்குப் பதவுரை, கருத்துரைகளையும் எழுதித்தந்ததுடன், அச்சுக்குத் தயார் செய்துகொடுத்து மிகுந்த கவனத்துடன் பிழையில்லாமல் புஸ்தகம் வெளிவருவதற்கு மிகுந்த உதவிபுரிந்த ஸ்ரீ K. S. வெங்கடராம சாஸ்திரிகள் (உதவி ஆசிரியர் 'ஸ்ரீசங்கர க்ருபா') அவர்களுக்கும், அழகிய முறையில் அச்சிட்டுத்தந்த ஸ்ரீரங்கம் ஸ்ரீவாணீ விலாஸம் அச்சகத்தாருக்கும் ஸமிதியின் சார்பில் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

*K. V. சுப்பரத்னம் அய்யர்,*
பொதுக்காரியதரிசி,
அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி.

# முன்னுரை

ஸ்ரீ ஜகத்குரு கிரந்தமாலாவின் 26வது மலரில் ஸர்வ வேதாந்த ஸித்தாந்த ஸாரஸங்க்ரஹத்தின் கடைசிப் பகுதியில் (சுலோகம் 866 முதல் 1006 முடிய) ஆரம்பத்தில் ஸமாதியைப் பற்றி விரிவாக வர்ணிக்கிறார். ஆந்தரமான மூன்று ஸமாதிகள் (ஸவிகல்பகம் இரண்டு, நிர்விகல்பகம் ஒன்று ஆக மூன்று) பாஹ்யமான மூன்று ஸமாதிகள், இந்த ஆறு ஸமாதிகளும் முமுக்ஷுக்களுக்கு அவசியமானது என்று கூறி நிர்விகல்பக ஸமாதியின் எட்டு அங்கங்களையும் ஸமாதியின் விக்னங்களையும் வர்ணித்து குரு உபதேசத்தை முடிக்கிறார். இவ்வுபதேசத்தைப் பெற்று சிஷ்யன் ஸமாதியில் அமர்ந்து நிதித்யாஸனம் செய்து ஆத்ம ஸாக்ஷாத்காரம் பெற்றான். பிறகு குருவைத் தேடியடைந்து ஸ்வானுபவத்தைக் கூறி ஜீவன்முக்த விதேஹமுக்த லக்ஷணங்களைக் கேட்கிறான்.

குருவும் வாஸிஷ்டத்தில் கூறப்பட்ட சுபேச்சை முதலான ஏழு பூமிகைகள், ஜாக்ரத் ஜாக்ரத் முதலான பத்து நிலைகள், ஏழு பூமிகைகளுக்கும் ஜாக்ரதாத்யவஸ்தைகளுக்கும் உள்ள ஸம்பந்தம் இவைகளைக்கூறி, பிறகு ஜீவன்முக்த லக்ஷணம், விதேஹ முக்த ஸ்வரூபம், முக்தி இவைகளை வர்ணிக்கிறார். பிறகு குருவும் சிஷ்யனும் ஜீவன் முக்தர்களாக ப்ரஹ்மானந்தானுபவத்துடன் தனித்தனியாக ஸஞ்சரித்தார்கள் என்று கூறி இந்த கிரந்தத்தை பூர்த்தி செய்கிறார்.

விவேகசூடாமணிக்கு வியாக்யானம்போல் அமைந்துள்ள இந்நூலில் கூறப்பட்ட பல விஷயங்களை விவேகசூடாமணியிலும் ஆசார்யாளுடைய வேறு சில பிரகரணங்களிலும் காணலாம். இதுமட்டுமல்ல. சில சுலோகங்களும் ஒரேமாதிரியாக பல பிரகரணங்களில் காணப்படுகிறது.

22வது மலரில் இந்நூலை அச்சிடத்துவக்கும்பொழுது அச்சுப் புஸ்தகத்திலுள்ள பாடங்களையனுசரித்தே தமிழ் உரை எழுதப் பட்டது. சில இடங்களில் பாடங்களில் தவறு இருப்பதாகத் தோன்றியபோதிலும் வேறு மாத்ருகை கிடைக்காததால் பாடத்தை மாற்ற முடியாமல் ஏதோ ஒருவாறு தமிழ் உரை

எழுதி அச்சிடப்பட்டது. 24வது மலர் அச்சாகிக்கொண்டிருக்கும்பொழுது ஆந்திர தேசத்திலிருந்து ஸேது யாத்திரைக்காக வந்த ஸ்ரீவேமூரி ஸீதாராம சாஸ்திரிகள் என்ற வித்வான் ஸ்ரீ ஞானனந்தபாரதீ ஸ்வாமிகளை தர்சிக்க தென்கரைக்கு வந்தார். இவர் ஆந்திர தேசத்தில் இந்நூலின் பல மாத்ருகைகளைப் பார்த்து நன்கு சோதித்து சுத்தமான பாடங்களைக் குறித்து வைத்திருந்தார். 24வது மலரின் பின்பாதியிலும், 25, 26 மலர்களிலும் அந்த சுத்தமான பாடங்களைச் சேர்த்து இதையனுஸரித்த தமிழுரையும் அச்சிடப்பட்டது. 22, 23வது மலர்களும் 24வது மலரின் முன்பாதியும் ஏற்கெனவே அச்சாகிவிட்டபடியால் அவற்றில் இந்த சுத்த பாடங்களைச் சேர்க்க முடியாமல் போய்விட்டது. அவற்றிலுள்ள சுத்த பாடங்கள் வாசகர்களுக்குத் தெரிவதற்காக இம்மலரில் வேறோர் பக்கத்தில் சேர்க்கப்பட்டுள்ள சுத்தாசுத்த பாடத்தில் சுத்த பாடங்கள் காட்டப்பட்டுள்ளன. இதில் கண்டபடி திருத்திக்கொள்வதுடன் இதற்குத்தக்கபடி தமிழ் உரையை மாற்றிக்கொள்ளவேணும்.

(1) சு. 42. இதில் 'योषिति वा पदार्थे' என்பது ஸங்கதமாக இல்லை. 41வது சுலோகத்திலுள்ளதை தவறுதலாக இதிலும் எழுதிவிட்டார்கள். 'विचारशीलानां' என்று மாற்றி விசாரிக்கும் ஸ்வபாவமுள்ளவர்களான (அதன் தன்மையை) அறிந்தவர்களுக்கு போக்யமில்லை என்று மாற்றிக்கொள்ள வேண்டும்.

(2) சு. 82. 'सेतौ' என்பதற்கு "ஈதிபாதையுடன் கூடிய இடத்திலோ" என்று அர்த்தம் கொள்ளவேண்டும்.

(3) சு. 84. वसु धान्यभोग - பணம், தான்யம் இவற்றின் போகம்.

(4) சு 92. बन्धभेदे महान् असिः - நிர்வேதம் பந்தத்தை பிளப்பதில் பெரிய கத்தி.

(5) சு. 231. वस्तुं - வஸிப்பதற்கு.

(6) சு 373. शुद्धं परात्मतत्त्वम् - சுத்தமான பரமாத்ம தத்வத்தை.

(7) சு. 374. मनोऽप्रसादः - மனதிற்குத் தெளிவில்லாமை.

21 சுலோகங்கள் கொண்ட ப்ரஹ்மஞானுவளீமாலையில் ப்ரஹ்மஞானிகளின் ஸ்வாநுபவம் நன்கு வர்ணிக்கப்படுகிறது. ப்ரஹ்மாநுசிந்தனத்தில் சொல்லியிருப்பதுபோல் இந்த சுலோகங்களை அர்த்தாநுஸந்தானத்துடன் சொல்லிவந்தால் தேஹாத்மபாவம் விலகி க்ரமமாக ப்ரஹ்மாத்மபாவம் ஸித்திக்கும். இம்மாதிரியான ப்ரஹ்மவித்துக்களின் ஸ்வாநுபவ வர்ணனத்தை ஆசார்யாளின் பல ப்ரகரணங்களில் காணலாம்.

5 சுலோகங்கள் கொண்ட காசீ பஞ்சகத்தில் ஆத்மஞானியிடம் காசிக்ஷேத்ரமும் தீர்த்தமும் தேவதையும் குடிகொண்டு இருப்பதைக் காட்டுகிறுர்.

67 சுலோகங்கள் கொண்ட கேள்வி பதில் ரூபமாக அமைந்த ப்ரச்நோத்தர ரத்னமாலிகையில் இவ்வுலகில் நல் வாழ்க்கை நடத்துவதற்கும் சிரேயஸ்ஸையடைவதற்கும் ஒவ்வொருவரும் கடைப்பிடிக்கவேண்டிய நன்முறைகளை உபதேசிக்கிறுர். இதைப்புரிந்துகொண்டு இதன்படி வாழ்க்கை நடத்திவந்தால் சித்த சுத்தி ஏற்படுவதுடன் ஸாதுக்களின் கூட்டத்தில் போற்றப்படுவான்.

*K. S. வெங்கடராம சாஸ்திரிகள்,*
*உதவி ஆசிரியர், "ஸ்ரீ சங்கர க்ருபா".*

## விஷயாநுக்ரமணிகை


| | | |
|---|---|---|
| சப்தாநுவித்த ஸவிகல்ப ஸமாதி | ... | 515 |
| நிர்விகல்பஸமாதி | ... | 520 |
| மூன்று பாஹ்யஸமாதி நிருபணம் | ... | 523 |
| பாஹ்ய த்ருச்யாநுவித்த ஸவிகல்பஸமாதி | ... | 524 |
| பாஹ்ய சப்தாநுவித்த ஸவிகல்பஸமாதி | ... | 532 |
| பாஹ்ய நிர்விகல்ப ஸமாதி | ... | 536 |
| ஆறு ஸமாதிகளின் அப்யாஸ காலம் | ... | ,, |
| ஸமாதிகளின் பலன் | ... | 538 |
| நிர்விகல்ப ஸமாதியே யோகம் | ... | 542 |
| இந்த யோகத்தின் எட்டு அங்கங்கள் | ... | 543 |
| ஸமாதி விக்னங்கள் | ... | 548 |
| குருவின் உபதேசத்தால் சிஷ்யனுக்கு ஆத்மநிஷ்டை | ... | 550 |
| சிஷ்யன் செய்யும் குருஸ்துதி | ... | 551 |
| சிஷ்யன் ஸ்வாத்மாநுபவத்தைக்கூறுதல் | ... | 553 |
| ஜீவன்முக்த-விதேஹமுக்த விஷயமாக சிஷ்யனின் கேள்வி | ... | 557 |
| குரு ஞான பூமிகைகளை நிருபணம் செய்தல் | ... | 558 |
| ஜாக்ரத் ஜாக்ரத் முதலான 9 நிலைகளை வர்ணித்தல் | ... | 564 |
| ஏழு பூமிகைகளுக்கும் ஜாக்ரத் முதலான அவஸ்தைகளுக்கும் ஸம்பந்தம் | ... | 570 |
| விதேஹ முக்தி | ... | 573 |
| ஜீவன் முக்த லக்ஷணம் | ... | 575 |
| விதேஹ முக்த ஸ்வரூபம் | ... | 582 |
| மோக்ஷ ப்ராப்தி | ... | 593 |
| குரு சிஷ்ய ஸம்வாதோபஸம்ஹாரம் | ... | 594 |
| க்ரந்தத்தின் முடிவு | ... | 596 |
| ப்ரஹ்மஞானவளீமாலா | ... | 1-12 |
| காசீ பஞ்சகம் | ... | 13-18 |
| ப்ரச்நோத்தர ரத்னமாலிகா | ... | 19-61 |

## சுத்தாசுத்த பாடங்கள்

| பக்கம் | வரி | அசுத்தம் | சுத்தம் |
|---|---|---|---|
| 8 | 27 | संपत्तिः | सुसंपत्तिः |
| ,, | 28 | सिद्धिः | संसिद्धिः |
| 31 | 16 | योषिति वा पदार्थे | विचारशीलानाम् |
| 38 | 51-வது 52-வது சுலோகங்களை இவ்வாறு மாற்றி வாசிக்கவேண்டும். | | |

दूरस्वेक्ष्याग्निशिखां पतङ्गो रम्यत्वबुद्ध्या विनिपत्य नश्यति ।
कामेन कान्तां परिगृह्य तद्वज्जनोऽप्ययं नश्यति नष्टदृष्टिः ॥ ५१ ॥

मांसास्थिमज्जामलमूत्रपात्रं स्त्रियं स्वयं रम्यतयैव पश्यति ।
यदा तदा नष्टदृगेष सूक्ष्मं कथं निरीक्षेत विमुक्तिमार्गम् ॥ ५२ ॥

| | | | |
|---|---|---|---|
| 59 | 11 | அணையிலோ | ஈதிபாதையுடன் கூடிய இடத்திலோ |
| 60 | 21 | वसुधानु | वसुधान्य |
| 67 | 11 | बन्धभेदो महानसौ | बन्धभेदे महानसिः |
| 81 | 28 | प्राप्तकाले | प्राप्तिकाले |
| 125 | 7 | मुपकृता | मुपकृदुदिता |
| 146 | 10 | वस्तु | वस्तुं |
| 213 | 21 | श्रोत्रत्वक् | श्रोत्रं च त्वक् |
| 234 | 26 | बन्धं | शुद्धं |
| 235 | 12 | मनःप्रसादः | मनोऽप्रसादः |
| 296 | 15 | जरादि | जराधि |
| 335 | 18 | इति वदति | इति हि वदति |

(அ) இருவிதமான ஸவிகல்ப ஸமாதிகளில் முதலாவதான த்ருச்யாநுவித்த ஸமாதியை விளக்கிவிட்டு இரண்டாவதான சப்தானுவித்த ஸமாதியை விவரிக்கிறார்:—

शुद्धोऽहं बुद्धोऽहं प्रत्यग्रूपेण नित्यसिद्धोऽहम् ।
शान्तोऽहमनन्तोऽहं सततपरानन्दसिन्धुरेवाहम् ॥ ८६६ ॥

சுத்தோஹம் புத்தோஹம் ப்ரத்யக்ரூபேண நித்ய
ஸித்தோஹம் ।
சாந்தோஹம் அநந்தோஹம் ஸதத பராநந்த
ஸிந்துரேவாஹம் ॥

अहं-நான், शुद्धः-சுத்தன் अहं-நான், बुद्धः-புத்தன், अहं-நான், प्रत्यग्रूपेण-பிரத்யகாத்மஸ்வரூபமாக, नित्यसिद्धः-எப்பொழுதும் ஸித்தனாக இருப்பவன், अहं-நான், शान्तः-சாந்தன், अहं நான், अनन्तः-முடிவு இல்லாதவன், अहं-நான், सतत-எப்பொழுதுமுள்ள, परानन्दसिन्धुरेव-பேரா நந்தக் கடல்தான்.

நான் சுத்தன் தோஷமற்றவன், அறிவுள்ளவன். நான் தேஹாதிகளேக்காட்டிலும் வேருன பிரத்யகாத்மஸ்வருபமாக இருப்பதால் உற்பத்தி நாசமில்லாமல் எப்பொழுதும் இருப்பவன். காமாதிகள் அடங்கி சாந்தனுயிருப்பவன். முடிவு இல்லாதவன் எப்பொழுதுமுள்ள பேராநந்த ஸமுத்ரம் நான். (866)

आद्योऽहमनाद्योऽहं वाङ्मनसासाध्यवस्तुमात्रोऽहम् ।
निगमवचोवेद्योऽहं अनवद्याखण्डबोधरूपोऽहम् ॥ ८६७ ॥

ஆத்யோஹம் அநாத்யோஹம் வாங்மநஸாஸாத்ய
வஸ்து மாத்ரோஹம் ।
நிகம வசோ வேத்யோஹம் அநவத்யாகண்ட
போதரூபோஹம் ॥

अहं-நான், आद्य-முதலிலுள்ளவன், अहं-நான், अनाद्यः-காரணமற்றவன், अहं நான், वाङ्मनसासाध्य-வாக்கினுலும்

மனத்தாலும் அடையமுடியாத, वस्तुमात्रः-வஸ்துஸ்வரூப மாகமட்டும் இருப்பவன், अहं-நான், निगमवचोवेद्यः- உபநிஷத் வாக்யங்களால் அறியத்தக்கவன், अहं-நான், अनवद्य-தோஷமில்லாத, अखण्डः-பிரிவுபடாத, बोधरूपः- ஞானஸ்வரூபம்.

நான் எல்லாவற்றிற்கும் முதலில் இருப்பவன் இதனால் எனக்குக் காரணம்கிடையாது நான் காரணமற்றவன் காரண மென்பது காரியத்துக்கு முன்னால் இருக்கும்.

यतो वाचो निवर्तन्ते अप्राप्य मनसा सह

என்று சுருதியில் கூறியுள்ளபடி சொல்லுக்கும் மனத்திற்கும் எட்டாத் ப்ரஹ்மவஸ்துவாக மாத்திரம் இருப்பவன் நான். ஆனாலும் உபநிஷத்திலுள்ள மஹாவாக்யங்களால் லக்ஷணையால் அறியத்தக்கவன் களங்கமில்லாத பூர்ணமான ஞானஸ்வரூபம் நான். (867)

विदिताविदितान्योऽहं मायातत्कार्यलेशशून्योऽहम् ।
केवलदृगात्मकोऽहं संविन्मात्रः सकृद्विभातोऽहम् ॥ ८६८ ॥

விதிதாவிதிதாந்யோஹம் மாயா தத்கார்ய லேச
சூந்யோஹம் ।
கேவல த்ருகாத்மகோஹம் ஸம்வின்மாத்ர: ஸக்ருத்
விபாதோஹம் ॥

अहं-நான், विदिताविदितान्यः-அறியப்பட்டது அறியப் படாதது இவ்விரண்டு விதமான வஸ்துக்களைக் காட்டிலும் வேறானவன், अहं-நான், मायातत्कार्यलेशशून्यः-மாயை அதன் கார்யம் இவைகளின் லேசமுமில்லாதவன். अहं-நான், केवलदृगात्मकः-தனிப்பட்ட ஞானஸ்வரூபன், अहं-நான், सकृद्विभातः-ஒரே தடவையாக பிரகாசித்துக் கொண்டிருக்கும், संविन्मात्रः - சைதன்ய ஸ்வரூபமாக மட்டுமிருப்பவன்.

நான், அறியப்பட்ட பொருள் அறியப்படாத பொருள் இவ்விரண்டிற்கும் வேறுபட்டவன். அறியப்பட்டது கார்யம்.

அறியப்படாதது காரணம். இவ்விரண்டிலும் நான் சேர்ந்தவனல்ல நான் கார்யமும் அல்ல காரணமும் அல்ல மேலும் அறியப்பட்டது ஹேயம் அறியப்படாதது. உபாதேயம் தன்னைக்காட்டிலும் வேறான வஸ்துதான் ஹேயமாகவோ உபாதேயமாகவோ இருக்கும். ஆத்ம ஸ்வரூபம் ஹேயமுமல்ல உபாதேயமுமல்ல. மாயையோ, இதன் காரியங்களோ லவலேசமும் என்னிடம் இல்லை. அறிகிறவனுடைய அறிவு தான் என் ஸ்வரூபம். சுத்த சைதன்ய ஸ்வரூபன் நான். ஒரே தடவையாக பிரகாசிக்கிறவன் நான். உலகில் ஒரு வஸ்து பிரகாசிக்க ஆரம்பித்தால் அதற்குப் பின்னால் மறைவும் பிரகாசமும் மாறிமாறி வந்து கொண்டிருக்கும். ஆனால் அக்ஞானம் நீங்கி ஒருதடவை பிரஹ்மம் பிரகாசிக்க ஆரம்பித்தால் அது தொடர்ந்து பிரகாசித்துக்கொண்டே இருக்கும். இதற்கு மறைவோ மறுபடியும் பிரகாசமோ கிடையாது. (868)

अपरोऽहं अनपरोऽहं बहिरन्तश्चापि पूर्ण एवाहम् ।
अजरोऽहं अक्षरोहं नित्यानन्दोहं अद्वितीयोऽहम् ॥ ८६९ ॥

அபரோஹம் அநபரோஹம் பஹிரந்தச்சாபி பூர்ண
ஏவாஹம் ।
அஜரோஹம் அக்ஷரோஹம் நித்யாநந்தோஹம்
அத்விதீயோஹம் ॥

अहं - நான், अपरः - மேலானவனல்ல, अहं - நான், अनपरः-தாழ்ந்தவனுமல்ல, अहं-நான், बहिः வெளியிலும், अन्तश्चापि-உள்ளேயும், पूर्ण एव-நிறைந்தவன் தான், अहं-நான், अजरः-மூப்பு இல்லாதவன், अहं நான், अक्षरः-நாசமில்லாதவன், अहं - நான், नित्यानन्दः - அழியாத ஆநந்த ரூபமாயிருப்பவன், अहम् நான், अद्वितीयः-இரண்டாவது வஸ்து இல்லாதவன்.

நான் மேல்பட்டவனுமல்ல. கீழ்ப்பட்டவனுமல்ல. வெளியிலும் உள்ளேயும்கூட நிறைந்திருப்பவனும் நான்தான். ஜரையில்லாதவன் நான். நாசமில்லாதவன் நான். அழிவற்ற ஆனந்தம் நான். என்னைக்காட்டிலும் வேறு இரண்டாவது வஸ்து கிடையாது. (869)

प्रत्यगभिन्नं अखण्डं सत्यज्ञानादिलक्षणं शुद्धम् ।
श्रुत्यवगम्यं तथ्यं ब्रह्मैवाहं परं ज्योतिः ॥ ८७० ॥

ப்ரத்யகபிந்நம் அகண்டம் ஸத்ய ஞானதி லக்ஷணம் சுத்தம் ।
ச்ருத்யவகம்யம் தத்யம் ப்ரஹ்மைவாஹம் பரம் ஜ்யோதி: ॥

प्रत्यगभिन्नं-பிரத்யகாத்மாவைக் காட்டிலும் வேறுபடாததாயும், अखण्डं-கூறுகளற்றதும், सत्यज्ञानादिलक्षणं-ஸத்யம், ஞானம் முதலியவைகளை ஸ்வரூபமாக உடையதும், शुद्धं-சுத்தமானதும், श्रुत्यवगम्यं-உபநிஷத்துக்களால் அறியத்தக்கதும், तथ्यं-உண்மையானதும், परंज्योतिः-மேலான ஜ்யோதி ஸ்வரூபமானதுமான, ब्रह्मैव-பிரஹ்மமே, अहं-நான்.

ப்ரத்யக் ஆத்மாவிடமிருந்து வேறுபடாமல் ப்ரத்யகாத்ம ஸ்வரூபமாகவே இருக்கிறதாயும் துண்டுபடாததாயும், ஸத்யம் ஞானம் முதலியதை ஸ்வரூபமாக உடையதாயும், சுத்தமாயும், வேதத்திலேயே அறியத்தக்கதாயும், வாஸ்தவமாயிருக்கும் பதார்த்தமாயும், உத்தமமான ப்ரகாசரூபமாயும் இருக்கிற ப்ரஹ்மமேதான் நான். (870)

एवं सन्मात्रगाहिन्या वृत्त्या तन्मात्रगाहकैः ।
शब्दैः समर्पितं वस्तु भावयेत् निश्चलो यतिः ॥ ८७१ ॥

ஏவம் ஸந்மாத்ர காஹின்யா வ்ருத்த்யா தன்மாத்ர காஹகை: ।
சப்தை: ஸமர்பிதம் வஸ்து பாவயேத் நிச்சலோ யதி: ॥

एवं இவ்வாறு, सन्मात्रगाहिन्या-ஸத்ரூபமான பிரஹ்மத்தை மட்டுமே விஷயமாகக்கொண்ட, वृत्त्या-விருத்தியால், तन्मात्रगाहकैः – அதைமட்டுமே அறிவுறுத்துகிற, शब्दैः - சப்தங்களால், समर्पितं-குறிப்பிடப்பட்ட, वस्तु-வஸ்துவை, यतिः யதியானவர், निश्चलः-சலிக்காதவராய்க் கொண்டு, भावयेत् தியானிக்கவேண்டும்.

இவ்விதமாக ஸத்பதார்த்தமான ப்ரஹ்மத்தை மாத்திரம் விஷயீகரிக்கிற வ்ருத்தியினால், அதை மாத்திரம் குறிக்கக் கூடிய வார்த்தைகளினால் சொல்லப்படும் வஸ்துவான ப்ரஹ்மத்தை யதியானவர் அந்த ஸ்வரூபத்திலிருந்து மனம் சலிக்காதவராய் அதிலேயே மனதை நிலைநிறுத்தி தியானம் செய்ய வேண்டும். (871)

कामादिदृश्यप्रविलापपूर्वकं शुद्धोऽहं इत्यादिकशब्दमिश्रः ।
दृश्यैव निष्ठस्य य एष भावः शब्दानुविद्धः कथितः समाधिः ॥८७२॥

காமாதி த்ருச்ய ப்ரவிலாப பூர்வகம்
சுத்தோஹமித்யாதிக சப்தமிச்ர: ।
த்ருச்யேவ நிஷ்டஸ்ய ய ஏஷ பாவ:
சப்தாநுவித்த: கதித: ஸமாதி: ॥

दृश्येव-ஞானஸ்வரூபமான ஆத்மஸ்வரூபத்திலேயே, निष्ठस्य-நிலைத்து நிற்பவனுக்கு, कामादि- காமம் முதலான, दृश्य-த்ருச்ய வஸ்துக்களை, प्रविलापनपूर्वकं-மறையும்படி செய்வதை முன்னதாகக்கொண்டு, अहं शुद्धः - நான் சுத்தன், इत्यादिकशब्दमिश्रः இது முதலான சப்தங்களுடன் கலந்ததான, यः-எந்த, भावः-மனோபாவமுண்டோ, एषः- இது, शब्दानुविद्धः - சப்தாநுவித்தமான ஸமாதியாக, कथितः-சொல்லப்பட்டது.

முதலில் காமம் முதலான த்ருச்ய வஸ்துக்களை லயம் அடையும்படிச் செய்துகொண்டு த்ருக் (ஞான) ஸ்வருபமான ப்ரஹ்மத்திலேயே நிலைத்திருப்பவனுக்கு 866 முதல் 870 முடிய உள்ள சுலோகங்களில் கண்டபடி 'நான் சுத்தன்' இதுமுதலான சப்தங்களுடன் கலந்த தியானமானது 'சப்தானுவித்த ஸமாதி' என்று சொல்லப்படுகிறது. (872)

(அ) இதுவரை இருவிதமான ஸவிகல்ப ஸமாதிகளைப் பற்றி விரிவாகக் கூறினர். முதலாவதான த்ருச்யானுவித்த ஸமாதியில் த்ருச்யவஸ்துக்கள் தோன்றியபோதிலும் அவைகளுடன் தனக்கு ஸம்பந்தமில்லை, தான் ஸாக்ஷி என்று எண்ணுகிறன். அதனால்தான் இது த்ருச்யானுவித்தம்,

இரண்டாவது ஸமாதியில் த்ருச்யமெல்லாம் மறைந்து போய் உபநிஷக் சப்தங்களும் அவற்றுடன் கலந்து அதன் வாச்யமாக ப்ரஹ்மம் தோன்றிக்கொண்டு இருக்கும். இது சப்தானுவித்த ஸவிகல்ப ஸமாதி மண் யானையைப் பார்த்ததும் மண் தோன்றியபோதிலும் கூடவே யானை தோன்றுவதுபோல் ஸவிகல்ப ஸமாதிகளில் திருச்ய வஸ்துக்கள், சப்தம், த்ரிபுடி இவை தோன்றியபோதிலும் ஆத்மா தோன்றிக்கொண்டிருக்கும். இவ்வாறு ஸவிகல்ப ஸமாதியை விளக்கிவிட்டு இனி நிர்விகல்ப ஸமாதியை 5 சுலோகங்களால் கூறுகிறார்:—

दृश्यस्यापि च साक्षित्वसमुल्लेखस्य चात्मनि ।
निवर्तकमनोवस्था निर्विकल्प इतीर्यते ॥ ८७३ ॥

த்ருச்யஸ்யாபி ச ஸாக்ஷித்வ ஸமுல்லேகஸ்ய சாத்மநி ।
நிவர்தக மனோவஸ்தா நிர்விகல்ப இதீர்யதே ॥

आत्मनि –ஆத்மாவில், दृश्यस्य -த்ருச்யவஸ்துவின், साक्षित्वसमुल्लेखस्य चापि ஸாக்ஷியாயிருக்கும் தன்மையின் தோற்றத்தையும், निवर्तकमनोवस्था–போக்குகின்ற மனோ நிலைமை, निर्विकल्प इति- நிர்விகல்பம் என்று, ईर्यते– சொல்லப்படுகிறது.

ஸவிகல்ப ஸமாதியில் ஆத்மாவுக்கு த்ருச்யவஸ்துக்களுடன் ஸம்பந்தமில்லாவிட்டாலும் அவைகளை நேரில் அறியும் ஆத்மா ஸாக்ஷியாக இருப்பதால் த்ருச்யங்களின் தோற்றம் ஸவிகல்ப ஸமாதியிலுள்ளது. மனதில் த்ருச்யங்களின் தோற்றமும் நீங்கிய நிலை நிர்விகல்ப ஸமாதி என்று கூறப்படுகிறது ஸாக்ஷி என்கிற தோற்றமும் இல்லாத நிலைதான் நிர்விகல்ப ஸமாதியாகும்.

सविकल्प समाधिं यो दीर्घकालं निरन्तरम् ।
सत्कारपूर्वकं कुर्यात् निर्विकल्पोऽस्य सिध्यति ॥ ८७४ ॥

ஸவிகல்ப ஸமாதிம் யோ தீர்க்ககாலம் நிரந்தரம் ।
ஸத்கார பூர்வகம் குர்யாத் நிர்விகல்போऽஸ்ய ஸித்யதி ॥

यः –எவர், दीर्घकालं நீண்டகாலம், निरन्तरं- இடைவிடாமல், सत्कारपूर्वकं–ஸத்காரத்துடன், सविकल्पसमाधिं–

ஸவிகல்ப ஸமாதியை, कुर्यात् - செய்வானோ, अस्य- இவருக்கு, निर्विकल्पः- நிர்விகல்ப ஸமாதி, सिध्यति- ஸித்திக்கிறது.

ஸவிகல்ப ஸமாதியை எவர் வெகுகாலம் இடைவிடாது ஸத்காரபூர்வகமாய் செய்கிறாரோ, அவருக்கு நிர்விகல்ப ஸமாதி ஸித்திக்கும்.

[இந்த சுலோகத்தில் संस्कारपूर्वकं என்பதற்குப் பதில் सत्कारपूर्वकं என்ற பாடம் இருக்கலாம் என்று தோன்றுகிறது. பதஞ்ஜலி மஹர்ஷியின் யோகஸூத்ரத்தில் सत्कार என்றுதான் இருக்கிறது]. (874)

निर्विकल्पकसमाधिनिष्ठया तिष्ठतो भवति नित्यता ध्रुवम् ।
उद्भवाद्यपगतिः निरर्गला नित्यनिश्चलनिरन्तनिर्वृतिः ॥ ८७५ ॥

நிர்விகல்பக ஸமாதி நிஷ்டயா திஷ்டதோ பவதி நித்யதா த்ருவம் ।
உத்பவாத்யபகதிர் நிரர்களா நித்ய நிச்சல நிரந்த நிர்வ்ருதி: ॥

निर्विकल्पकसमाधिनिष्ठया- நிர்விகல்ப ஸமாதியில் நிலையாக, तिष्ठतः- நிர்பவனுக்கு, नित्यता- அழிவற்ற தன்மை, ध्रुवं நிச்சயம், भवति ஏற்படுகிறது. उद्भवाद्यपगतिः- பிறவி முதலியவைகளின் நீக்கமும், निरर्गला- தடையில்லாத, नित्यनिश्चलनिरन्तनिर्वृतिः- அழிவற்றதும் மாறுதலற்றதும் இடைவிடாமலிருப்பதுமான ஸுகம் ஏற்படுகிறது.

நிர்விகல்ப ஸமாதியில் நிலைத்திருப்பவருக்கு நித்யமாய் இருக்கும் தன்மை அவசியம் ஏற்படும், பிறப்பு முதலியவை நீங்கிவிடும்; எவ்வித தடையுமன்னியில் நித்யமாய் அசைவற்று முடிவற்றிருக்கும் ஸுகமும் ஏற்படும். (875)

विद्वान् अहं इदं इति वा किंचिद्बाह्याभ्यन्तरवेदनशून्यः ।
स्वानन्दामृतसिन्धुनिमग्नः तूष्णीं आस्ते कश्चित् अनन्यः ॥ ८७६ ॥

வித்வானஹமிதமிதி வா கிஞ்சித்
பாஹ்யாப்யந்தர வேதந சூன்ய: ।
ஸ்வாநந்தாம்ருத ஸிந்து நிமக்ன:
தூஷ்ணீமாஸ்தே கச்சிதநந்ய: ॥

कश्चित् विद्वान्-ஏதோ ஒரு ஞானி, अहं इदं इति वा-நான் என்றோ நீ என்றோ, किंचित्-கொஞ்சமும், बाह्याभ्यन्तर-वेदनशून्यः-உள்ளேயும் வெளியிலும் அறிவில்லாதவனாக, अनन्यः-வேறான வஸ்து வற்றவனாக, स्वानन्दामृतसिन्धुनिमग्नः-ஆத்மாநந்தமாகிற அமிருதக்கடலில் மூழ்கினவனாக, तूष्णीं आस्ते-சும்மா இருக்கிறான்.

உள்ளே 'நான்' என்றாவது, வெளியில் 'இது' என்றாவது கொஞ்சமேனும் வேறு அறிவில்லாமல், தானாகிற ஆனந்த அமிருத ஸாகரத்தில் மூழ்கினவனாக வேறு ஒன்றுமற்றவனாக யாரோ ஒரு ஞானி பேசாமல் சும்மா இருப்பார். (876)

निर्विकल्पं परं ब्रह्म यत् तस्मिन्नेव निष्ठिताः ।
एते धन्या एव मुक्ता जीवन्तोऽपि बहिर्दृशाम् ॥ ८७७ ॥

நிர்விகல்பம் பரம் ப்ரஹ்ம யத் தஸ்மிந்நேவ நிஷ்டிதா: ।
ஏதே தன்யா ஏவ முக்தா: ஜீவந்தோபி பஹிர்த்ருசாம் ॥

निर्विकल्पं-விகல்பங்களற்ற, यत्-எந்த, परंब्रह्म-பர பிரும்மமுண்டோ, तस्मिन्नेव-அதிலேயே, निष्ठिताः-நிலைத்திருக்கும், एते-இவர்கள், धन्याः-பாக்யசாலிகள், बहिर्दृशां-வெளிப்பார்வையுள்ளவர்களுக்கு, जीवन्तोऽपि- (இவர்கள்) ஜீவித்திருப்பவர்களாக உள்ளபோதிலும், मुक्ता एव-முக்தர்கள் தான்.

எவ்வித விகல்பமுமற்ற பரப்ரஹ்மத்திலேயே நிலைத்து இருக்கும் இவர்கள் தன்யர்கள். வெளிப்பார்வையுள்ளவர்களுக்கு இவர்கள் ஜீவித்திருப்பவர்களாகத் தோன்றிய போதிலும் முக்தர்களே. (877)

(அ) இதுவரை ஆத்மாவிற்கும் ப்ரஹ்மத்திற்குமுள்ள ஸ்வரூப ஐக்யத்தை ஸாக்ஷாத்தாக அனுபவிப்பதற்கு ஸாதன

மாக மஹாவாக்கியத்தின் அர்த்த விசாரம், சிரவணம், மனனம், தியானம், திருச்யானுவித்த ஸமாதி, சப்தானுவித்த ஸமாதி, நிர்விகல்ப ஸமாதி இவையெல்லாம் வர்ணிக்கப்பட்டன. முன் 781-வது சுலோகத்தில் சொல்லியபடி, ஜீவனோ, ஜகத்தோ தனித்திருக்கக்கூடியதானால் ப்ரஹ்மத்திற்கு அத்வைதத் தன்மை நிலைக்காது. அதற்காக ஜகத்தும் ப்ரஹ்மத்தைத்தவிர வேறு இல்லையென்று சொல்லவேண்டும். இவ்விஷயமாக ப்ரஹ்மத்தில்தான் அக்ஞானத்தினால் ஜகத் தோன்றுகிறதேதவிர, அதற்கு வாஸ்தவமாக தனி இருப்பு கிடையாதென்று முன்னால் நிர்வசனம் செய்யப்பட்டது. ஆனால் இந்த தத்வம் அனுபவத்திற்கு வரவேண்டுமானால் யுக்தியுடன் செய்யவேண்டிய வேறு கார்யங்களும் இருக்கின்றன என்பதை மேலால் ஸ்ரீமத்ஆசார்யார் உபதேசிக்கிறார்:-

यथा समाधित्रितयं यत्नेन क्रियते हृदि ।
तथैव बाह्यदेशेऽपि कार्यं द्वैतनिवृत्तये ।
तत्प्रकारं प्रवक्ष्यामि निशामय समासतः ॥ ८७८ ॥

யதா ஸமாதி த்ரிதயம் யத்நேந க்ரியதே ஹ்ருதி ।
ததைவ பாஹ்யதேசேபி கார்யம் த்வைத நிவ்ருத்தயே ।
தத்ப்ரகாரம் ப்ரவக்ஷ்யாமி நிசாமய ஸமாஸத: ।

यथा-எப்படி, हृदि-ஹிருதயத்தில், यत्नेन-முயற்சியுடன், समाधित्रितयं-மூன்று ஸமாதிகள், क्रियते-செய்யப்படுகிறதோ, तथैव-அப்படியே, द्वैतनिवृत्तये-த்வைதம் நீங்குவதற்காக, बाह्यदेशेऽपि-வெளிப் பிரதேசத்திலும், कार्यं-(மூன்று ஸமாதி) செய்யத்தக்கது तत्प्रकारं அதன் பிரகாரத்தை, समासतः-சுருக்கமாக, प्रवक्ष्यामि-சொல்கிறேன், निशामय-கேள்.

எவ்விதம் ப்ரயத்னத்துடன் ஹ்ருதயத்தில் திருச்யானுவித்த ஸவிகல்ப ஸமாதி, சப்தானுவித்த ஸவிகல்ப ஸமாதி நிர்விகல்ப ஸமாதி என்ற மூன்று ஸமாதிகள் செய்யப்படுகிறதோ, அப்படியே ப்ரஹ்மத்தில் இரண்டாகத் தோன்றுவது நிவிருத்தியாவதற்காக வெளியிடத்தில்கூட மூன்றுவித ஸமாதி

களையும் செய்யவேண்டும். அதன் முறையைச் சொல்கிறேன். கவனமாகக் கேள். (878)

अधिष्ठानं परं ब्रह्म सच्चिदानन्दलक्षणम् ।
तत्राध्यस्तं इदं भाति नामरूपात्मकं जगत् ॥ ८७९ ॥

அதிஷ்டானம் பரம் ப்ரஹ்ம ஸச்சிதானந்த லக்ஷணம் ।
தத்ராத்யஸ்தமிதம் பாதி நாம ரூபாத்மகம் ஜகத் ॥

सच्चिदानन्दलक्षणं--ஸத் சித், ஆனந்த ஸ்வரூபமான, परं ब्रह्म பரபிரஹ்மம், अधिष्ठानं-தோன்றும் பொருளுக்கு ஆதாரம், तत्र-அதில், नामरूपात्मकं-பெயர், உருவம் இவைகளையே ஸ்வரூபமாகக்கொண்ட, इदं जगत्-இந்த பிரபஞ்சம், अध्यस्तं - ஆரோபிக்கப்பட்டதாய், भाति - விளங்குகிறது.

ஸத், சித், ஆனந்தம் இவைகளை ஸ்வரூபமாக உடைய பரப்ரஹ்மம் அதிஷ்டானம் (அடிப்படை). அதில் அத்யஸ்தமான (ஏற்றப்பட்டதான) நாம, ரூபம் என்ற ஸ்வரூபத்தை உடைய இந்த ஜகத் ப்ரகாசிக்கிறது. (879)

सत्त्वं चित्त्वं तथाऽऽनन्दरूपं यत् ब्रह्मणः त्रयम् ।
अध्यस्तजगतो रूपं नाम रूपं इदं द्वयम् ॥ ८८० ॥

ஸத்வம் சித்வம் ததாநந்த ரூபம் யத் ப்ரஹ்மணஸ்
த்ரயம் ।
அத்யஸ்த ஜகதோ ரூபம் நாம ரூபமிதம் த்வயம் ॥

सत्त्वं-முக்காலும் அழியாத்தன்மை, चित्त्वं பிரகாசம், तथा-அப்படியே, आनन्दरूपं-ஆநந்தம் (ஆகிய), यत् त्रयं-யாதொரு மூன்று உண்டோ (அது), ब्रह्मणः-பிரஹ்மத்தினுடையது, नाम-பெயர், रूपं-உருவம் (என்ற), इदं द्वयं-இவ்விரண்டும், अध्यस्तजगतो रूपम् - ஆரோபிக்கப்பட்ட பிரபஞ்சத்தின் ஸ்வரூபம்.

ஸத்-தன்மை, சித்-தன்மை, அப்படியே ஆனந்தத்-தன்மை ஆகிய எந்த மூன்று உண்டோ, அவை ப்ரஹ்

மத்தைச் சேர்ந்தது. நாம, ரூபம் என்கிற இவ்விரண்டும் அத்யஸ்தமான ஜகத்தின் ஸ்வரூபம். (880)

एतानि सच्चिदानन्दनामरूपाणि पञ्च च ।
एकीकृत्य उच्यते मूर्खैः इदं विश्वं इति भ्रमात् ॥ ८८१ ॥

ஏதாநி ஸச்சிதாநந்த நாம ரூபாணி பஞ்ச ச ।
ஏகீக்ருத்ய உச்யதே மூர்க்கை: இதம் விச்வம் இதி
ப்ரமாத் ॥

सच्चिदानन्दनामरूपाणि இருப்பு, பிரகாசம், ஆநந்தம், பெயர், உருவம், एतानि पञ्च च - இவ்வைந்தையும், एकीकृत्य - ஒன்றாகச் செய்து, मूर्खैः - அக்ஞானிகளால், भ्रमात्-பிரமத்தால், इदं विश्वं-இது ஜகத், इति-என்று, उच्यते-சொல்லப்படுகிறது.

இந்த ஸத், சித், ஆனந்தம் நாம, ரூபம், ஆகிய ஐந்தையும் ஒன்றாகச் செய்து 'இது ஜகத்' என்று அறிவில்லாதவர்களால் பிரமத்தினால் சொல்லப்படுகிறது. (881)

शैत्यं श्वेतं रसं द्राव्यं तरङ्ग इति नाम च ।
एकीकृत्य तरङ्गोऽयं इति निर्दिश्यते यथा ॥ ८८२ ॥

சைத்யம் ச்வேதம் ரஸம் த்ராவ்யம் தரங்க இதி நாம ச ।
ஏகீக்ருத்ய தரங்கோऽயம் இதி நிர்திச்யதே யதா ॥

यथा-எப்படி, शैत्यं-குளிர்ச்சியையும், श्वेतं-வெளுப்பு நிறத்தையும், रसं-ருசியையும், द्राव्यं-திரவத்தன்மையையும், तरङ्ग इति-அலையென்ற, नाम च-பெயரையும், एकीकृत्य-ஒன்று சேர்த்து, अयं-இது, तरङ्गः-அலை, इति-என்று, निर्दिश्यते-குறிப்பிடப்படுகிறதோ (அப்படி).

(ஜலத்தைச்சேர்ந்த) குளிர்ச்சி, வெண்மை, ருசி இவைகளையும் (அலையைச் சேர்ந்த) ஓடும் தன்மை, அலையென்ற பெயர் இவைகளையும் ஒன்று சேர்த்து 'இது அலை' என்று எப்படி குறிப்பிடப் படுகிறதோ அதேபோல. (882)

आरोपिते नामरूपे उपेक्ष्य ब्रह्मणः सतः ।
स्वरूपमात्रग्रहणं समाधिः बाह्यः आदिमः ॥ ८८३ ॥

ஆரோபிதே நாமரூபே உபேக்ஷ்ய ப்ரஹ்மண: ஸத: ।
ஸ்வரூப்மாத்ரக்ரஹணம் ஸமாதி: பாஹ்ய: ஆதிம: ॥

आरोपिते ஆரோபிக்கப்பட்ட, नामरूपे-நாமாவையும் உருவத்தையும், उपेक्ष्य-கவனிக்காமல், सतः-ஸத்தான, ब्रह्मणः-பிரஹ்மத்தின், स्वरूप मात्रग्रहणं-ஸ்வரூபத்தை மட்டும் அறிவது, बाह्यः-வெளிப்படையான, आदिमः-முதலாவது, समाधिः ஸமாதி.

ஆரோபிக்கப்பட்டிருக்கிற நாமரூபங்களை கவனிக்காமல் ஸத்தாகவிருக்கும் பிரஹ்மத்தினுடைய ஸ்வரூபத்தைமாத்திரம் கிரஹிப்பது வெளி விஷயமான முதல் ஸமாதி (திருச்யானுவித்தஸவிகல்ப ஸமாதி)

[மோதிரத்தைப் பார்த்துக்கொண்டிருக்கையிலேயே அதன் பெயருக்கும் உருவத்திற்கும் மதிப்புக்கொடுக்காமல் அதிலுள்ள வஸ்துவான தங்கத்தை மாத்திரம் அறிவதுபோல) (883)

सच्चिदानन्दरूपस्य सकाशात् ब्रह्मणो यतिः ।
नामरूपे पृथक् कृत्वा ब्रह्मण्येव विलापयन् ॥ ८८४ ॥

अधिष्ठानं परं ब्रह्म सच्चिदानन्दं अद्वयम् ।
यत् तदेवाहं इत्येव निश्चितात्मा भवेत् ध्रुवम् ॥ ८८५ ॥

ஸச்சிதானந்தரூபஸ்ய ஸகாசாத் ப்ரஹ்மணோ யதி: ।
நாமரூபே ப்ருதக் க்ருத்வா ப்ரஹ்மண்யேவ விலாபயந் ॥

அதிஷ்டானம் பரம் ப்ரஹ்ம ஸச்சிதானந்தம் அத்வயம் ।
யத் ததேவாஹம் இத்யேவ நிச்சிதாத்மா பவேத்
த்ருவம் ॥

यतिः-யதியானவர், सच्चिदानन्दरूपस्य-ஸச்சிதானந்த ரூபமான, ब्रह्मणः सकाशात्-பிரஹ்மத்திலிருந்து, नामरूपे-

நாமரூபங்களை, पृथक् कृत्वा வேருகப்பிரித்து, ब्रह्मण्येव-பிரஹ்மத்திலேயே, विलापयन्-லயமடையும்படி செய்து கொண்டு, अधिष्ठानं - ஆரோபத்திற்கு ஆதாரமாயும், सच्चिदानन्दं-ஸத்தாயும் சித்தாயும் ஆனந்தமாயும், अद्वयं-இரண்டற்றதாயும் உள்ள, यत्-எந்த, परं ब्रह्म-பரபிரம்ம முண்டோ, तदेव-அதுவே, अहं நான், इति एव-என்றே, निश्चितात्मा भवेत्-உறுதிகொண்ட மனமுள்ளவனாக இருக்க வேண்டும், ध्रुवं-நிச்சயம்.

ஸச்சிதானந்த ஸ்வரூபமான பிரஹ்மத்தினிடத்திலிருந்து நாமரூபங்களை தனியாகப் பிரித்து பிரஹ்மத்தினிடத்திலேயே லயம் செய்து, ஸச்சிதானந்தமாய் இரண்டற்றதாய் அதிஷ்டானமாய் எந்த பரப்பிரஹ்மம் இருக்கிறதோ, அதுவே நான் என்ற தீர்மானமான மனஸுள்ளவராக அந்த ஸன்யாஸி நிச்சயமாய் ஆகிவிடுவார் (இருக்கவேண்டும்) (884-885)

इयं भूः न सत् नापि तोयं न तेजो
न वायुः न खं नापि तत्कार्यजातम् ।
यत् एषां अधिष्ठानभूतं विशुद्धं
सत् एकं परं सत् तदेवाहमस्मि ॥ ८८६ ॥

இயம் பூர் ந ஸத் நாபி தோயம் ந தேஜோ
ந வாயுர் ந கம் நாபி தத்கார்யஜாதம் ।
யதேஷாமதிஷ்டான பூதம் விசுத்தம்
ஸதேகம் பரம் ஸத் ததேவாஹமஸ்மி ॥

इयं-இந்த, भूः-பூமி, न सत्-ஸத்து அல்ல, तोयमपि-ஜலமும், न-(ஸத்து) அல்ல, तेजः-தேஜஸ், न-அல்ல, वायुः-வாயு, न-அல்ல, खं-ஆகாசம், न-அல்ல, तत्कार्य-जातमपि-அவைகளின் காரியங்கள் எல்லாமும், न-அல்ல, यत्-எது, एषां-இவைகளுக்கு, अधिष्ठानभूतं-அதிஷ்டானமாக இருந்துகொண்டு, विशुद्धं - சுத்தமாயும், एकं - ஒன்ருகவும், परं-மேலானதாயும் (உள்ளதோ அதுவே)

सत्-ஸத்து, तत्-அந்த, सदेव ஸத்தாகவே, अहं-நான், अस्मि-இருக்கிறேன்.

இந்த பிருத்வீ ஸத் அல்ல, ஜலமும் ஸத் அல்ல, தேஜஸ் ஸத் அல்ல, வாயு ஸத் அல்ல, ஆகாசம் ஸத் அல்ல, அவைகளின் கார்யம் எல்லாமும் ஸத் அல்ல. இவைகளுக்கு அதிஷ்டானமாய் இருந்துகொண்டு, சுத்தமாயும், ஏகமாயும், மேலானதாயும் எது இருந்துகொண்டிருக்கிறதோ அதுவே ஸத்து. அந்த ஸத்வஸ்துவேதான் நான். (886)

न शब्दो न रूपं न च स्पर्शको वा
तथा नो रसो नापि गन्धो न चान्यः ।
यत् एषां अधिष्ठानभूतं विशुद्धं
सत् एकं परं सत् तदेवाहमस्मि ॥ ८८७ ॥

ந சப்தோ ந ரூபம் ந ச ஸ்பர்சகோ வா
ததா நோ ரஸோ நாபி கந்தோ ந சாந்ய: ।
யதேஷாமதிஷ்டானபூதம் விசுத்தம்
ஸதேகம் பரம் ஸத் ததேவாஹமஸ்மி ॥

शब्दः-சப்தம், न-ஸத்து அல்ல, रूपं च-ரூபமும், न-அல்ல, स्पर्शको वा-ஸ்பர்சமும், न-அல்ல, तथा-அப்படியே, नो रसः-ரஸம் அல்ல, गन्धोपि-வாசனையும், न-அல்ல, अन्यः च-வேறு எதுவும், न-ஸத்து அல்ல. यत्-எது, एषां-இவைகளுக்கு, अधिष्ठानभूतं-ஆதாரமாயிருந்துகொண்டு, विशुद्धं-சுத்தமாயும், एकं ஒன்றாயும், परं-மேலானதாயும் உள்ளதோ (அதுவே), सत् ஸத், तत्-அந்த, सदेव-ஸத்தாகவே, अहं-நான், अस्मि-இருக்கிறேன்.

சப்தம் ஸத்து இல்லை, ரூபம் ஸத்து இல்லை, ஸ்பர்சமும் இல்லை, அப்படியே ரஸமுமில்லை, கந்தமுமில்லை, வேறு எதுவும் ஸத்து இல்லை. எது இவைகளுக்கெல்லாம் அதிஷ்டானமாய் இருந்துகொண்டு சுத்தமாயும், ஏகமாயும், மேலானதாயும் இருக்கிறதோ, அதுவே ஸத்து. அந்த ஸத்வஸ்துவாகவே தான் இருக்கிறேன். (887)

न सत् द्रव्यजातं गुणा न क्रिया वा
न जातिः विशेषो न चान्यः कदाऽपि ।
यत् एषां अधिष्ठानभूतं विशुद्धं
सत् एकं परं सत् तदेवाहमस्मि ॥ ८८८॥

ந ஸத் த்ரவ்யஜாதம் குணா ந க்ரியா வா
ந ஜாதிர் விசேஷோ ந சாந்ய: கதாபி ।
யதேஷாமதிஷ்டானபூதம் விசுத்தம்
ஸதேகம் பரம் ஸத் ததேவாஹமஸ்மி ॥

द्रव्यजातं திரவ்யம் முழுவதும், न सत्-ஸத்து அல்ல, गुणाः-குணங்கள், न-அல்ல, क्रिया वा-க்ரியையும் (அல்ல), जातिः-ஜாதி, न-அல்ல, विशेषः-விசேஷம் (அல்ல), अन्यः च வேறு எதுவும், कदापि-ஒருக்காலும் न-அல்ல, यत्-எது, एषां-இவைகளுக்கு, अधिष्ठान भूतं-அதிஷ்டானமாக இருந்துகொண்டு, विशुद्धं-சுத்தமாயும், एकं-ஒன்ருகவும், परं-மேலாகவும் உள்ளதோ (அதுவே) सत्-ஸத்து, तत्-அந்த, सदेव-ஸத்தாகவே, अहं-நான், अस्मि-இருக்கிறேன்.

திரவியங்கள் ஸத் இல்லை, குணங்களுமில்லை, கிரியையுமில்லை. ஜாதி இல்லை, விசேஷமில்லை, வேறு எதுவும் எப்பொழுதுமில்லை. எது இவைகளுக்கெல்லாம் அதிஷ்டானமாய் இருந்துகொண்டு சுத்தமாய், ஏகமாய், மேலானதாயுமிருக்கிறதோ, அதுவே ஸத்து. அந்த ஸத் வஸ்துவேதான் நான். (888)

न देहो न चाक्षाणि न प्राणवायुः
मनो नापि बुद्धिः न चित्तं ह्यहंधीः ।
यत् एषां अधिष्ठानभूतं विशुद्धं
सत् एकं परं सत् तदेवाहमस्मि ॥ ८८९

ந தேஹோ ந சாக்ஷாணி ந ப்ராணவாயுர்
மநோ நாபி புத்திர் ந சித்தம் ஹ்யஹம்தீ: ।

யதேஷாமதிஷ்டான பூதம் விசுத்தம்
ஸதேகம் பரம் ஸத் ததேவாஹமஸ்மி ||

देहः - தேஹம், न - ஸத்து அல்ல, अक्षाणि च- இந்திரியங்களும், न - அல்ல, प्राणवायुः - பிராணவாயு, न-அல்ல, मनोपि-மனமும், न-அல்ல, बुद्धिः-புத்தி, न- அல்ல, चित्तं சித்தம் (அல்ல), अहंधीः-அஹங்காரமும் அல்ல, यत्-எது, एषां-இவைகளுக்கு, अधिष्ठान भूतं- அதிஷ்டானமாக இருந்துகொண்டு, विशुद्धं-சுத்தமாயும், एकं-ஒன்றாயும், परं-மேலானதாயும் உள்ளதோ (அதுவே,) सत्-ஸத்து, तत्-அந்த, सदेव-ஸத்தாகவே, अहं-நான், अस्मि-இருக்கிறேன்.

தேஹம் ஸத் இல்லை, இந்திரியங்களுமில்லை, ப்ராணவாயு வும் இல்லை, மனஸுமில்லை, புத்தியுமில்லை, சித்தமுமில்லை, அஹங்காரமுமில்லை. எது இவைகளுக்கெல்லாம் அதிஷ்டான மாயிருந்துகொண்டு சுத்தமாய், ஏகமாய், மேலானதாய், இருக்கிறதோ, அதுவே ஸத்து. அந்த ஸத்வஸ்துவேதான் நான். (889)

न देशो न कालो न दिग्वाऽपि सत् स्यात्
न वस्त्वन्तरं स्थूलसूक्ष्मादिरूपम् ।
यत् एषां अधिष्ठानभूतं विशुद्धं
सत् एकं परं सत् तदेवाहमस्मि ॥ ८९० ॥

ந தேசோ ந காலோ ந திக் வாபி ஸத் ஸ்யாத்
ந வஸ்த்வந்தரம் ஸ்தூல ஸூக்ஷ்மாதிரூபம் |
யதேஷாமதிஷ்டான பூதம் விசுத்தம்
ஸதேகம் பரம் ஸத் ததேவாஹமஸ்மி ||

देशः-தேசம், सत्-ஸத்தாக न स्यात्- ஆகாது, कालः- காலம் न-அல்ல, दिग्वापि-திசையும், न-அல்ல, स्थूलसूक्ष्मादि- रूपं-ஸ்தூலம், ஸூக்ஷ்மம் இவைரூபமான, वस्त्वन्तरं- வேறுவஸ்துவும், न - அல்ல, यत् - எது, एषां-இவை களுக்கு, अधिष्ठान भूतं-அதிஷ்டானமாக இருந்து

கொண்டு, विशुद्ं-சுத்தமாயும், एकं-ஒன்ருயும், परं-மேலானதாயும் உள்ளதோ (அதுவே), सत्-ஸத்து, तत्-அந்த, सदैव-ஸத்தாகவே, अहं-நான், अस्मि-இருக்கிறேன்.

தேசம் ஸத் வஸ்து ஆகாது, காலமுமாகாது, திக்கும் ஆகாது. ஸ்தூலம், ஸூக்ஷ்மம் முதலிய ஸ்வரூபமுள்ள வேறு எந்த வஸ்துவும் ஆகாது. இவைகளுக்கெல்லாம் அதிஷ்டான மாய் இருந்துகொண்டு சுத்தமாய், ஏகமாய், மேலானதாய் எது இருக்கிறதோ, அதுவே ஸத்து. அந்த ஸத் வஸ்துவேதான் நான்.

[முன் 835 முதல் 842 முடிய சுலோகங்களில் திருச்யமான பதார்த்தங்கள் "நான்" இல்லை என்றும், இங்கே "ஸத் வஸ்து" இல்லை என்றும் சொல்லப்பட்டிருப்பதுதான் வித்யாஸம். இந்த அம்சத்தில் தான் உள்ளே செய்யவேண்டிய திருச்யானுவித்த ஸமாதிக்கும் வெளியிலே செய்யவேண்டிய திருச்யானுவித்த ஸமாதிக்கும் உள்ள வித்யாஸம்]. (890)

एतत् दृश्यं नामरूपात्मकं यो-
ऽधिष्ठानं तत् ब्रह्म सत्यं सदेति ।
गच्छन् तिष्ठन् वा शयानोऽपि नित्यं
कुर्यात् विद्वान् बाह्यदृश्यानुविद्धम् ॥ ८९१ ॥

ஏதத் த்ருச்யம் நாம ரூபாத்மகம் யோ-
ऽதிஷ்டானம் தத் ப்ரஹ்ம ஸத்யம் ஸதேதி ।
கச்சன் திஷ்டன் வா சயானோபி நித்யம்
குர்யாத் வித்வான் பாஹ்ய த்ருச்யானுவித்தம் ॥

एतत्-இந்த, दृश्यं-அறியப்படும் பிரபஞ்சம், नाम-रूपात्मकं-பெயர், உருவம் இவைகளையே ஸ்வரூபமாகக் கொண்டது, अधिष्ठानं-அதிஷ்டானமான, तत् ब्रह्म-அந்த ப்ரஹ்மம், सदा-எப்பொழுதும், सत्यं-ஸத்யமானது, इति-என்று, यः विद्वान्-எவன் அறிகிறவனே (அவன்), गच्छन्-போகும் போதும், तिष्ठन् वा-அல்லது நிற்கும்பொழுதும்,

शयानोपि படுத்திருக்கும் பொழுதும், नित्यं-எப்பொழுதும், बाह्यदृश्यानुविद्धं - வெளி த்ருச்யானுவித்த ஸமாதியை, कुर्यात्-செய்யவேண்டும்.

இந்த திருச்யம் நாமரூபாத்மகமாயிருப்பது (ஸத்யமல்ல) இதற்கு அதிஷ்டானமாயுள்ள அந்த பிரஹ்மம், எப்பொழுதும் ஸத்யமென்று அறிந்தவன், போகும்போதோ, நிற்கும்போதோ, படுத்துக்கொண்டிருக்கும்போதோ, எப்பொழுதும் வெளி விஷயமாயுள்ள இந்த திருச்யானுவித்த ஸமாதியைச் செய்ய வேண்டும். (891)

(அ) இவ்விதம் வெளிதிருச்யானுவித்த ஸமாதியைச் சொல்லிவிட்டு, வெளி விஷயமான சப்தானுவித்த ஸமாதியைச் சொல்லுகிறார் :—

अध्यस्तनामरूपादि प्रविलापेन निर्मलम् ।
अद्वैतं परमानन्दं ब्रह्मैवास्मि इति भावयेत् ॥ ८९२ ॥

அத்யஸ்த நாமரூபாதி ப்ரவிலாபேன நிர்மலம் ।
அத்வைதம் பரமானந்தம் ப்ரஹ்மைவாஸ்மீதி
பாவயேத் ॥

अध्यस्त - ஆரோபிக்கப்பட்ட, नामरूपादि - நாமரூபம் முதலியவைகளின், प्रविलापेन - விலாபனத்தால் (அடியோடு இல்லாதபடி செய்து விடுவதால்), निर्मलं- நிர்மலமான, अद्वैतं - இரண்டற்ற, परमानन्दं - மேலான, ஆனந்த ரூபமான, ब्रह्म-பிரஹ்மமாகவே, अस्मि-இருக்கிறேன், इति-என்று, भावयेत्-பாவனை செய்யவேண்டும்.

ஆரோபிக்கப்பட்டிருக்கும் நாமம் ரூபம் முதலானதுகளை விலாபனம் செய்துவிடுவதால் நிர்மலமாய் இரண்டற்றதாய் பரமானந்தமாய் உள்ள பிரஹ்மமே நான் என்று பாவிக்க வேண்டும். (892)

निर्विकारं निराकारं निरञ्जनं अनामयम् ।
आद्यन्तरहितं पूर्णं ब्रह्मैवाहं न संशयः ॥ ८९३ ॥

நிர்விகாரம் நிராகாரம் நிரஞ்ஜநமநாமயம் ।
ஆத்யந்த ரஹிதம் பூர்ணம் ப்ரஹ்மைவாஹம்
ந ஸம்சய: ॥

निर्विकारं- மாறுதலற்றதும், निराकारं-உருவமற்றதும், निरंजनं-தோஷமற்றதும், अनामयं-கெடுதலற்றதும், आद्यन्तरहितं-முதல், முடிவு இல்லாததும், पूर्णं-நிறைந்தது மான, ब्रह्म ப்ரஹ்மமே, अहं-நான், न संशयः-ஸந்தேஹ மில்லை.

விகாரமற்று, ரூபம் அற்று, தோஷமற்று, எவ்வித கெடுதலும் இல்லாமல், ஆதியும் அந்தமும் இல்லாமல், நிறைந்திருக்கும் பிரஹ்மமேதான் நான், ஸந்தேஹமில்லை. (893)

निष्कलङ्कं निरातङ्कं त्रिविधच्छेदवर्जितम् ।
आनन्दं अक्षरं मुक्तं ब्रह्मैवास्मि इति भावयेत् ॥ ८९४ ॥

நிஷ்களங்கம் நிராதங்கம் த்ரிவிதச்சேத வர்ஜிதம் ।
ஆநந்தமக்ஷரம் முக்தம் ப்ரஹ்மைவாஸ்மீதி பாவயேத் ॥

निष्कलङ्कं-களங்கமற்றதும், निरातङ्कं-கவலையற்றதும், त्रिविधच्छेदवर्जितं-மூன்றுவித பிரிவுகளற்றதும், आनन्दं-ஆனந்தமானதும், अक्षरं-அழிவற்றதும், मुक्तं-விடுபட்டதுமான, ब्रह्म-ப்ரஹ்மமாகவே, अस्मि-இருக்கிறேன், इति-என்று, भावयेत्-பாவிக்கவேண்டும்.

அழுக்கு இல்லாததாய், கவலையில்லாததாய், மூன்றுவித பிரிவுகள் இல்லாததாய், ஆனந்தமாய், நாசமில்லாததாய், விடுபட்டதாய், உள்ள பிரஹ்மமேதான் நான் என்று பாவிக்க வேண்டும். (894)

निर्विशेषं निराभासं नित्यमुक्तं अविक्रियम् ।
प्रज्ञानैकरसं सत्यं ब्रह्मैवास्मि इति भावयेत् ॥ ८९५ ॥

நிர்விசேஷம் நிராபாஸம் நித்யமுக்தமவிக்ரியம் ।
ப்ரஜ்ஞானைகரஸம் ஸத்யம் ப்ரஹ்மைவாஸ்மீதி
பாவயேத் ॥

निर्विशेष - விசேஷங்களற்றதும், निराभासं - தோற்றமற்றதும், नित्यमुक्त-எப்பொழுதும் விடுபட்டதும், अविक्रिय- மாறுதலற்றதும், प्रज्ञानैकरसं ஞானம் ஒன்றையே ஸ்வரூபமாக உடையதாயும், सत्यं- உண்மைப்பொருளாயும் உள்ள, ब्रह्मैवास्मि-ப்ரஹ்மமாகவே இருக்கிறேன், इति- என்று, भावयेत्-பாவனை செய்யவேண்டும்.

விசேஷமற்றதாய், தோற்றமற்றதாய், எப்பொழுதும் விடுபட்டதாய், எவ்வித மாறுபாடுமில்லாததாய், ஞானமாகவே இருப்பதாய், ஸத்யமாயிருக்கும் பிரஹ்மமேதான் நான் என்று பாவிக்கவேண்டும். (895)

शुद्धं बुद्धं तत्त्वसिद्धं परं प्रत्यक् अखण्डितम् ।
स्वप्रकाशं पराकाशं ब्रह्मैवास्मीति भावयेत् ॥ ८९६ ॥

சுத்தம் புத்தம் தத்வஸித்தம் பரம் ப்ரத்யககண்டிதம் ।
ஸ்வப்ரகாசம் பராகாசம் ப்ரஹ்மைவாஸ்மீதி பாவயேத் ॥

शुद्धं-சுத்தமானதும் (தோஷமற்றதும்), बुद्धं சைதன்ய ஸ்வரூபமாயும்; तत्त्वसिद्धं - உண்மையானதும் ஸித்தமானதும், परं-மேலானதும், प्रत्यक्-உள்ளே விளங்குவதும், अखण्डितं-பிரிவு படாததும், स्वप्रकाशं-தானே பிரகாசிக்கிறதும், पराकाशं மற்றவைகளை பிரகாசப்படுத்துகிறதுமான, ब्रह्म-ப்ரஹ்மமாகவே, अस्मि-இருக்கிறேன், इति-என்று, भावयेत्-பாவிக்கவேண்டும்.

சுத்தமாய், அறிவாய், ஸித்தமான தத்வமாய், மேலானதாய், உள்ளேயிருப்பதாய், துண்டிக்கப்படாததாய், ஸ்வயம் ப்ரகாசமாய், மற்றவைகளை ப்ரகாசப்படுத்துவதாய் இருக்கும் ப்ரஹ்மமேதான் நான் என்று பாவிக்கவேண்டும். (896)

सुसूक्ष्मं अस्तितामात्रं निर्विकल्पं महत्तमम् ।
केवलं परमाद्वैतं ब्रह्मैवास्मीति भावयेत् ॥ ८९७ ॥

ஸுஸூக்ஷ்மமஸ்திதாமாத்ரம் நிர்விகல்பம் மஹத்தமம் ।
கேவலம் பரமாத்வைதம் ப்ரஹ்மைவாஸ்மீதி பாவயேத் ॥

सुसूक्ष्मं - மிகவும் ஸூக்ஷ்மமானதும், अस्तितामात्रं - இருப்பு என்பது மாத்ரமாக உள்ளதும், निर्विकल्पं-கல்பித தர்மங்களற்றதும், महत्तं-மிகப் பெரியதும், केवलं-தனித்ததும், परमाद्वैतं-மேலானதும் இரண்டற்றதுமான, ब्रह्मैव ப்ரஹ்மமாகவே, अस्मि-இருக்கிறேன், इति भावयेत्-என்று பாவனை செய்யவேண்டும்.

வெகு ஸூக்ஷ்மமாயும், இருக்கிறது என்ற தன்மையை மாத்திரம் உடையதாயும், விகல்பமில்லாததாயும், பெரிய தெல்லாவற்றையும்விட பெரியதாயும், தனியாயும் வேறு எதனிடமும் ஸம்பந்தப்படாததாயும், மேலானதாயும், இரண் டற்றதாயும், இருக்கிற பிரஹ்மமேதான் நான் என்று பாவிக்க வேண்டும். (897)

इत्येवं निर्विकारादिशब्दमात्रसमर्पितम् ।
ध्यायतः केवलं वस्तु लक्ष्ये चित्तं प्रतिष्ठति ॥ ८९८ ॥

இத்யேவம் நிர்விகாராதி சப்தமாத்ர ஸமர்பிதம் ।
த்யாயத: கேவலம் வஸ்து லக்ஷ்யே சித்தம் ப்ரதிஷ்டதி ॥

इति एवं-என்று இவ்வாறு, निर्विकारादिशब्दमात्रसमर्पितं-'நிர்விகாரம்' முதலான சொற்களால் மாத்திரம் அறிவுறுத்தப்பட்ட, केवलं-தனித்ததான, वस्तु-ப்ரஹ்ம வஸ்துவை ध्यायतः-த்யானம் செய்கிறவனுக்கு, चित्तं-மனது, लक्ष्ये-லக்ஷ்யமான ப்ரஹ்மத்தில், प्रतिष्ठते-நிலை பெறுகிறது.

இவ்விதமாக (893-வது சுலோகம் முதல் சொல்லப்பட்ட) "நிர்விகாரம்" (விகாரமற்றது) முதலான சப்தங்களினால் மாத்திரம் குறிப்பிடப்படுகிற சுத்த வஸ்துவை தியானம் செய்கிற வருடைய சித்தம் லக்ஷ்யத்தில் (பிரஹ்மத்தில்) நன்கு நிலை பெறும். (898)

(அ) இவ்விதம் வெளி விஷயமான சப்தானுவித்த ஸவி கல்ப ஸமாதியைச் சொல்லிவிட்டு அடுத்த சுலோகத்தில் அது ஸம்பந்தமான நிர்விகல்ப ஸமாதியைச் சொல்கிறார்:—

ब्रह्मानन्दरसावेशात् एकीभूय तदात्मना।
वृत्तेः या निश्चलावस्था स समाधिः अकल्पकः ॥ ८९९ ॥

ப்ரஹ்மாநந்த ரஸாவேசாதேகீபூய ததாத்மநா I
வ்ருத்தேர் யா நிச்சலாவஸ்தா ஸ ஸமாதிரகபல்பக: II

ब्रह्मानन्दरसावेशात्-பிரஹ்மாநந்தத்தின் ரஸம் வந்துவிட்டதால், तदात्मना-அந்த ஸ்வரூபத்தோடு, एकीभूय-ஒன்ருக ஆகி, वृत्तेः-மனேவிருத்தியின், या-எந்த, निश्चलावस्था - சலனமற்ற நிலையுண்டோ, सः - அது, अकल्पकः समाधिः-நிர்விகல்பஸமாதியாகும்.

ப்ரஹ்மானந்தரஸம் ஏற்பட்டுவிட்டதால் அந்த ஸ்வரூபத்தோடு ஒன்ருகவே ஆகி வ்ருத்தியின் சலனமற்ற நிலை எதுவோ, அது நிர்விகல்ப ஸமாதி. (899)

(அ) ஸவிகல்ப ஸமாதியில் உள்ளே இரண்டுவிதம், வெளியில் இரண்டுவிதம், நிர்விகல்ப ஸமாதியில் உள்ளே ஒருவிதம் வெளியில் ஒருவிதம் ஆக ஆறு ஸமாதிகள் இதுவரை சொல்லப்பட்டிருக்கின்றன, இவைகளின் அவசியத்தைப் பற்றியும் ப்ரயோஜனத்தைப் பற்றியும் 9 சுலோகங்களால் சொல்கிருர்:—

उत्थाने वाऽप्यनुत्थानेऽपि अप्रमत्तो जितेन्द्रियः ।
समाधिषट्कं कुर्वीत सर्वदा प्रयतो यतिः ॥ ९०० ॥

உத்தாநே வாப்யநுத்தாநேऽப்யப்ரமத்தோ ஜிதேந்த்ரிய: I
ஸமாதிஷட்கம் குர்வீத ஸர்வதா ப்ரயதோ யதி: II

यतिः-ஸாதகன், उत्थाने वापि-ஸமாதியிலிருந்து வெளியே வந்தபோதும், अनुत्थानेपि-வெளியில் வராதபோதும், अप्रमत्तः - கவனக்குறைவில்லாதவனுக, जितेन्द्रियः-இந்திரியங்களை ஜயித்தவனுக, प्रयतः-பரிசுத்தனுக (தோஷமில்லாதவனுக), सर्वदा - எப்பொழுதும், समाधिषट्कं-ஆறுவித ஸமாதிகளையும், कुर्वीत-செய்யவேணும்.

யதியானவர் வெளிப்பார்வையுள்ள ஸமயத்திலும் வெளிப்பார்வையில்லாத ஸமயத்திலும்கூட, அஜாக்கிரதையாயில்லாமல், இந்திரியங்களை ஜயித்தவராய், பரிசுத்தராய் எப்பொழுதும் இந்த ஆறு ஸமாதிகளையும் செய்யவேண்டியது. (900)

विपरीतार्थधीः यावत् न निःशेषं निवर्तते ।
स्वरूपस्फुरणं यावत् न प्रसिध्यति अनर्गलम् ।
तावत् समाधिषट्केन नयेत् कालं निरन्तरम् ॥ ९०१ ॥

விபரீதார்த்ததீர் யாவத் ந நிச்சேஷம் நிவர்த்ததே ।
ஸ்வரூபஸ்புரணம் யாவத் ந ப்ரஸித்யத்யநர்களம் ।
தாவத் ஸமாதிஷட்கேன நயேத் காலம் நிரந்தரம் ॥

यावत्-எதுவரை, विपरीतार्थधीः-விபரீத விஷயங்களின் எண்ணம், निःशेषं-பாக்கியில்லாமல், न निवर्तते-நீங்கவில்லையோ, यावत्-எதுவரை, स्वरूपस्फुरणं-ஆத்மஸ்வரூபத்தின் பிரகாசம், अनर्गलं தடையன்னியில், न प्रसिध्यति ஏற்படவில்லையோ, तावत्-அதுவரை, निरन्तरं-இடைவிடாது, समाधिषट्केन - ஆறுவித ஸமாதிகளால், कालं-காலத்தை नयेत्-கழிக்கவேண்டும்.

(ப்ரஹ்மம்தான் ஆத்மா என்பதற்கு) விபரீதமான விஷயத்தில் உள்ள எண்ணம் எதுவரை பாக்கியன்னியில் போய்விடவில்லையோ, எதுவரை தன் ஸ்வரூபம் தடையன்னியில் நன்கு ஸ்புரிக்கவில்லையோ, அதுவரை இந்த ஆறு ஸமாதிகளைக் கொண்டு இடைவிடாமல் காலம்கழிக்கவேண்டும். எப்பொழுதும் ஸமாதியை அப்யாஸம் செய்துகொண்டே இருக்கவேண்டும். (901)

न प्रमादोऽत्र कर्तव्यो विदुषा मोक्षमिच्छता ।
प्रमादे जृम्भते माया सूर्यापाये तमो यथा ॥ ९०२ ॥

ந ப்ரமாதோऽத்ர கர்தவ்யோ விதுஷா மோக்ஷமிச்சதா ।
ப்ரமாதே ஜ்ரும்பதே மாயா ஸூர்யாபாயே தமோ யதா ॥

अत्र-இவ்விஷயத்தில், मोक्षं इच्छता - மோக்ஷத்தை விரும்புகிற, विदुषा-வித்வானால், प्रमादः-கவனக்குறைவு, न कर्तव्यः-செய்யக்கூடாது. सूर्यापाये-ஸூர்யன் மறைந்ததும், यथा-எப்படி, तमः - இருள் (வெளிப்படுகிறதோ அப்படி), प्रमादे-கவனமில்லாமலிருந்தால், माया-மாயையானது, जृम्भते-நன்கு வெளிப்பட்டுவிடும்.

மோக்ஷத்தை விரும்பும் வித்வான் இவ்விஷயத்தில் தவறுதல் செய்யக்கூடாது. ஸூர்யன் மறைந்தால் எப்படி இருட்டு வந்துவிடுமோ, அப்படியே தவறுதல் ஏற்பட்டால் மாயை நன்கு வெளிப்பட்டுவிடும். (902)

स्वानुभूतिं परित्यज्य न तिष्ठन्ति क्षणं बुधाः ।
स्वानुभूतौ प्रमादो यः स मृत्युः न यमः सताम् ॥ ९०३ ॥

ஸ்வாநுபூதிம் பரித்யஜ்ய ந திஷ்டந்தி க்ஷணம் புதா: ।
ஸ்வாநுபூதௌ ப்ரமாதோ ய: ஸ ம்ருத்யுர் ந யம:
ஸதாம் ॥

बुधाः - வித்வான்கள், स्वानुभूतिं-ஆத்மானுபவத்தை, परित्यज्य-விட்டுவிட்டு, क्षणं-ஒரு நிமிஷம்கூட, न तिष्ठन्ति-இருக்கமாட்டார்கள். सतां-ஸாதுக்களுக்கு, स्वानुभूतौ-ஆத்மானுபவத்தில், प्रमादो यः-கவனக்குறைவு என்பது எதுவோ, सः - அது, मृत्युः-மிருத்யு. यमः न - யமன் மிருத்யுவல்ல.

தன் தத்வத்தை அனுபவிப்பதை விட்டு அறிவாளிகள் ஒரு க்ஷணம்கூட இருக்கமாட்டார்கள். ஸாதுக்களுக்கு தன் தத்வானுபவத்தில் ஏற்படும் தவறுதல் எதுவோ, அதுவே அவர்களுக்கு மிருத்யு, யமன் மிருத்யுவல்ல. அவர்கள் ப்ரமாதத்தைத்தான் மிருத்யுவாக எண்ணுவார்கள். மரணத்துக்கு அஞ்சமாட்டார்கள். ப்ரமாதத்திற்குத்தான் அஞ்சுவார்கள். (903)

अस्मिन् समाधौ कुरुते प्रयासं यः तस्य नैवास्ति पुनर्विकल्पः ।
सर्वात्मभावोऽप्यमुनैव सिध्येत् सर्वात्मभावः खलु केवलत्वम् ॥ ९०४ ॥

அஸ்மின் ஸமாதௌ குருதே ப்ரயாஸம்
ய: தஸ்ய நைவாஸ்தி புநர் விகல்ப: ।
ஸர்வாத்ம பாவோப்யமுநைவ ஸித்யேத்
ஸர்வாத்மபாவ: கலு கேவலத்வம் ॥

अस्मिन्-இந்த, समाधौ-ஸமாதியில், यः-எவர், प्रयासं-உழைப்பை, कुरुते-செய்கிருரோ, तस्य-அவருக்கு, पुनः-மறுபடியும், विकल्पः-(உலகவிஷயமான) பலவிதத் தோற்றம், नैवास्ति-இருக்கவே இருக்காது. अमुनैव-இந்த ஸமாதியாலேயே, सर्वात्मभावोऽपि-எல்லாம் ஆத்மாவாக இருப்பதும், सिध्येत्-ஸித்திக்கும். सर्वात्मभावः-ஸர்வாத்ம பாவம் என்பது, केवलत्वं खलु-தான் மட்டுமாயிருப்பது அல்லவா!

இந்த ஸமாதியில் எவர் ப்ரயாஸம் எடுத்துக்கொள்கிருரோ, அவருக்கு மறுபடியும் விகல்பம் (பலவிதத்தோற்றம்) ஏற்படவே ஏற்படாது. இந்த ஸமாதியினுலேயே ஸர்வாத்ம பாவம் (எல்லாம் நான் என்கிற அனுபவம்) ஏற்படும். இந்த ஸர்வாத்ம பாவம் தானே கைவல்யம் (தனித்து ஒன்ருகவே இருத்தல்). (904)

सर्वात्मभावो विदुषो ब्रह्मविद्याफलं विदुः ।
जीवन्मुक्तस्य तस्यैव स्वानन्दानुभवः फलम् ॥ ९०५ ॥

ஸர்வாத்மபாவோ விதுஷோ ப்ரஹ்மவித்யா பலம் விது:
ஜீவன்முக்தஸ்ய தஸ்யைவ ஸ்வாநந்தாநுபவ: பலம் ॥

विदुषः-ஞானிக்கு, सर्वात्मभावः-எல்லாம் ஆத்ம ஸ்வரூபமாகஇருக்கும் தன்மை, ब्रह्मविद्याफलं-ப்ரஹ்ம ஞானத்தின் பலனென்று, विदुः-அறிகிருர்கள். जीवन्मुक्तस्य-ஜீவன்முக்தனுன, तस्यैव-அவனுக்குத்தான், स्वानन्दानुभवः-ஆத்மானந்தத்தின் அனுபவமாகிற, फलं-பலன் ஏற்படுகிறது.

வித்வானுக்கு ஸர்வாத்மபாவம் ப்ரஹ்மத்தை அறிவதன் பலன் என்று அறிந்திருக்கிருர்கள். ஜீவித்திருக்கும்போதே

(ஸம்ஸாரத்திலிருந்து) விடுபட்டிருக்கிற அவருக்குத்தான் தன் (ஸ்வரூபமான) ஆனந்தத்தின் அனுபவம் பலன் ஆகும். (905)

योऽहं ममेत्यादि असदात्मगाहको ग्रन्थिः लयं याति स वासनामयः ।
समाधिना नश्यति कर्मबन्धो ब्रह्मात्मबोधोऽप्रतिबन्ध इष्यते ॥ ९०६ ॥

யோஹம் மமேத்யாத்யஸதாத்ம காஹகோ
க்ரந்திர் லயம் யாதி ஸ வாஸநாமய: ।
ஸமாதிநா நச்யதி கர்மபந்தோ
ப்ரஹ்மாத்மபோதோப்ரதிபந்த இஷ்யதே ॥

अहंममेत्यादि-நான், என்னுடையது இதுமுதலான, असदात्मगाहकः - இல்லாத வஸ்துக்களை விஷயமாக உடைய, वासनामयः-வாஸனாமயமான, यः-எந்த, ग्रन्थिः-முடிச்சு உண்டோ, सः-அது, समाधिना-ஸமாதியால், लयं-याति-மறைந்து விடுகிறது. कर्मबन्धः-கர்மாவினால் ஏற்பட்ட கட்டு, नश्यति-நாசமடைகிறது. ब्रह्मात्मबोधः-ப்ரஹ்மமே ஆத்மா என்ற ஞானம், अप्रतिबन्धः-தடையில்லாததாக, इष्यते-கருதப்படுகிறது.

நான், என்னுடையது, இது முதலான அஸத் பதார்த்தங்களை விஷயமாயுள்ளதும் ஸூக்ஷ்ம வாஸனாமயமுமான முடிச்சு எல்லாம் ஸமாதியினால் போய்விடும். கர்மாக்களினால் ஏற்பட்டிருக்கும் கட்டும் நசித்துவிடும். அப்பொழுது ப்ரஹ்மமே ஆத்மா என்கிற அறிவு எவ்வித தடையுமன்னியில் இருக்கும்.

एष निष्कण्टकः पन्थाः मुक्तेः ब्रह्मात्मना स्थितेः ।
शुद्धात्मनां मुमुक्षूणां यत् सदेकत्वदर्शनम् ॥ ९०७ ॥

ஏஷ நிஷ்கண்டக: பந்தா முக்தேர் ப்ரஹ்மாத்மநா
ஸ்திதே: ।
சுத்தாத்மநாம் முமுக்ஷூணாம் யத் ஸதேகத்வ
தர்சனம் ॥

शुद्धात्मनां-பரிசுத்தமான மனமுள்ள, मुमुक्षूणां-மோக்ஷமடைய விருப்பமுள்ளவர்களுக்கு, यत्-எந்த, सदेकत्व-

दर्शनं-ஸத்ரூபமான ப்ரஹ்மத்தின் ஐக்ய ஸாக்ஷாத்கார முண்டோ, एषः-இது, ब्रह्मात्मना स्थितेः-ப்ரஹ்மஸ்வரூப மாக இருப்பதாகிற, मुक्तेः-மோக்ஷத்திற்கு, निष्कण्टकः-தடங்கலில்லாத, पन्थाः-வழி.

சுத்தமான அந்த:கரணமுள்ளவர்களாய் மோக்ஷத்தை விரும்புகிறவர்களுக்கு ஸத் (ப்ரஹ்மம்) ஒன்றுதான் இருக்கிறது என்று நேரில் அனுபவிப்பது எதுவோ, அதுதான் ப்ரஹ்ம ஸ்வரூபமாகவே நிலைத்திருப்பதான மோக்ஷத்திற்கு போவ தற்கு முள் இல்லாத (எவ்வித இடைஞ்சலுமில்லாத) வழி. (907)

तस्मात् त्वं चापि अप्रमत्तः समाधीन्
कृत्वा ग्रन्थिं साधु निर्दह्य युक्तः ।
नित्यं ब्रह्मानन्दपीयूषसिन्धौ
मज्जन् क्रीडन् मोदमानो रमस्व ॥ ९०८ ॥

தஸ்மாத் த்வம் சாப்யப்ரமத்த: ஸமாதீன்
க்ருத்வா க்ரந்திம் ஸாது நிர்தஹ்ய யுக்த: ।
நித்யம் ப்ரஹ்மாநந்த பீயூஷ ஸிந்தௌ
மஜ்ஜன் க்ரீடன் மோதமானோ ரமஸ்வ ॥

तस्मात्-ஆகையால், त्वं चापि-நீயும், अप्रमत्तः-கவன முள்ளவனாக, युक्तः-புலனடக்கமுள்ளவனாக, समाधीन्-ஸமாதிகளை, कृत्वा-அனுஷ்டித்து, ग्रन्थिं-முடிச்சை, साधु-நன்றாக, निर्दह्य-பொசுக்கிவிட்டு, नित्यं-எப்பொழுதும், ब्रह्मानन्दपीयूषसिन्धौ-ப்ரஹ்மானந்தாமிருதக்கடலில், मज्जन्-மூழ்கிக்கொண்டு, क्रीडन्-விளையாடிக்கொண்டு, मोदमानः-ஸந்தோஷிப்பவனாக, रमस्व-இன்புறுவாயாக.

ஆகையினால் நீயும்கூட கவனக்குறைவன்னியில் மனதை அடக்கி இந்த ஆறு ஸமாதிகளையும் செய்து, நான், என்னுடை யது என்று ஆத்மாவையும் அநாத்மாவையும் ஒன்றாகப் பார்ப்ப தாகிய (அத்யாஸமென்னும்) முடிச்சை நன்றாக எரித்து சாம்பலாக்கி (மறுபடியும் தோன்றாமல் செய்து) எப்பொழுதும் ப்ரஹ்மானந்தமாகிற அமிருதக் கடலில் மூழ்கிக்கொண்டு,

கிரீடித்துக்கொண்டு, ஸந்தோஷத்தை யடைந்துகொண்டு, ரமித்துவா. உலகில் எல்லோரும் வெளி வஸ்துக்கள் மூலமாகத் தான் விளையாட்டு, ஸந்தோஷம், ரமணம் எல்லாம் ஏற்படுவ தாக எண்ணுகிறார்கள்.

'आत्मक्रीडः आत्मरतिः'

என்று முண்டகோபநிஷத்திலும்

'यस्त्वात्मरतिरेव स्यात् आत्मतृप्तश्च मानवः । आत्मन्येव च सन्तुष्टः'

என்று கீதையிலும் (அத் 3-17) சொன்ன பிரகாரம் ஞானிக்கு எல்லாம் ஆத்ம ஸ்வரூபத்தில்தான். (908)

(அ) முன் 823-வது சுலோகத்தில் நிர்விகல்ப ஸமாதிக்கே "யோகம்" என்ற பெயர் உண்டென்று சொல்லப்பட்டது. பதஞ்ஜலி பகவான் யோகத்தில் எட்டு அங்கங்கள் சொல்லி இருக்கிறாரே, அவைகள் இந்த ஸமாதியில் இருக்கின்றனவா வென்று கேட்கக்கூடியதால், அது எப்படியென்று இங்கே 12 சுலோகங்களில் காட்டுகிறார் :—

निर्विकल्पसमाधिः यो वृत्तिनैश्चल्यलक्षणः ।
तमेव योग इत्याहुः योगशास्त्रार्थकोविदाः ॥ ९०९ ॥

நிர்விகல்ப ஸமாதிர் யோ வ்ருத்தி நைஸ்சல்ய லக்ஷண: ।
தமேவ யோக இத்யாஹுர் யோக சாஸ்த்ரார்த்த
கோவிதா: ॥

वृत्तिनैश्चल्यलक्षणः - மனோவிருத்தி சலனமற்றிருக்கும் தன்மையாகிற, यः-எந்த, निर्विकल्पसमाधिः-நிர்விகல்ப ஸமாதி உண்டோ, तमेव-அதையே, योगशास्त्रार्थकोविदाः- யோகசாஸ்திரத்தின் பொருளை நன்கு அறிந்தவர்கள், योग इति-யோகம் என்று, आहुः-சொல்கிறார்கள்.

மனோவிருத்தி சலனமற்றிருக்கும் தன்மையை லக்ஷண மாகவுடைய நிர்விகல்ப ஸமாதி என்பது எதுவோ, அதையே தான் யோக சாஸ்திரத்தின் அர்த்தத்தை அறிந்தவர்கள் "யோகம்" என்று சொல்கிறார்கள். (909)

अष्टौ अङ्गानि योगस्य यमो नियम आसनम् ।
प्राणायामः तथा प्रत्याहारश्चापि च धारणा ।
ध्यानं समाधिः इत्येव निगदन्ति मनीषिणः ॥ ९१० ॥

அஷ்டாவங்கானி யோகஸ்ய யமோ நியம ஆஸநம் ।
ப்ராணுயாமஸ் ததா ப்ரத்யாஹாரஸ் சாபி ச தாரணு ।
த்யாநம் ஸமாதிரித்யேவ நிகதந்தி மநீஷிண: ॥

यमः - யமம், नियमः - நியமம், आसनम् - ஆஸனம், प्राणायामः - ப்ராணுயாமம், तथा - அப்படியே, प्रत्याहारश्चापि - பிரத்யாஹாரமும், धारणा च - தாரணையும், ध्यानं - தியானம், समाधिः - ஸமாதி, इत्येव - என்றே, मनीषिणः - வித்வான்கள், योगस्य - யோகத்திற்கு, अष्टौ अङ्गानि - எட்டு அங்கங்களை, निगदन्ति - சொல்கிருர்கள்.

யோகத்திற்கு எட்டு அங்கங்கள் :— 1. யமம், 2. நியமம், 3. ஆஸனம், 4. பிராணுயாமம், 5. பிரத்யாஹாரம், 6. தாரணை 7. தியானம் 8. ஸமாதி என்றே வித்வான்கள் சொல்கிருர்கள். (910)

सर्वं ब्रह्मेति विज्ञानात् इन्द्रियग्रामसंयमः ।
यमोऽयमिति संप्रोक्तोऽभ्यसनीयो मुहुर्मुहुः ॥ ९११ ॥

ஸர்வம் ப்ரஹ்மேதி விஜ்ஞாநத் இந்த்ரிய க்ராம ஸம்யம: ।
யமோயமிதி ஸம்ப்ரோக்தோப்யஸநீயோ முஹுர் முஹு: ॥

सर्वं - எல்லாம், ब्रह्म - ப்ரஹ்மம், इति - என்ற, विज्ञानात् - அனுபவ ஞானத்தால், इन्द्रियग्राम संयमः - இந்திரியக் கூட்டத்தை அடக்குவது, इति - என்ற, अयं - இது, मुहुर्मुहुः - அடிக்கடி, अभ्यसनीयः - அப்பியாஸம் செய்யத்தக்க, यमः - யமம், इति - என்று, संप्रोक्तः - சொல்லப்பட்டது.

எல்லாம் பிரஹ்மம் என்று அறிவதன்மூலம் இந்திரியங்களின் கூட்டம் அடங்குவது யமம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதை அடிக்கடி அப்யாஸம் செய்யவேண்டும். (911)

सजातीयप्रवाहश्च विजातीयतिरस्कृतिः ।
नियमो हि परानन्दो नियमात् क्रियते बुधैः ॥ ९१२ ॥

ஸஜாதீய ப்ரவாஹச்ச விஜாதீய திரஸ்க்ருதி: I
நியமோ ஹி பராநந்தோ நியமாத் க்ரியதே புதை: II

सजातीयप्रवाहश्च–ஒரே இனத்தைச்சேர்ந்த மனோ விருத்திகளின் ப்ரவாஹமும், विजातीय तिरस्कृतिः-வேறு இனத்தைச்சேர்ந்த மனோவிருத்திகள் விலகுவதும், परानन्दः–மேலான ஆனந்தத்தைத்தரும், नियमो हि நியம மல்லவா! बुधैः – அறிவாளிகளால், नियमात्–நியமத் துடன், (இது) क्रियते-அனுஷ்டிக்கப்படுகிறது.

ஒரே இனத்தைச் சேர்ந்த மனோவிருத்திகள் பிரவாஹம் போல் தொடர்ந்து வருவதும், வேறு இனத்தைச்சேர்ந்த மனோ விருத்திகள் நடுவில் வராமல் விலகிப்போவதும் பேரானந்தத்தை தரும் நியமமாகும். வித்வான்கள் இதை நியமத்துடன் அனுஷ்டிக்கிறார்கள். (912)

सुखेनैव भवेत् यस्मिन् अजस्रं ब्रह्मचिन्तनम् ।
आसनं तत् विजानीयात् इतरत् सुखनाशनम् ॥ ९१३ ॥

ஸுகேநைவ பவேத் யஸ்மின்னஜஸ்ரம் ப்ரஹ்ம
சிந்தனம் I
ஆஸநம் தத் விஜாநீயாதிதரத் ஸுக நாசனம் II

यस्मिन्–எதில், अजस्रं–எப்பொழுதும், सुखेनैव–ஸுக மாகவே, ब्रह्मचिन्तनं – ப்ரஹ்ம த்யானமானது, भवेत् – ஏற்படுகிறதோ, तत् - அதை, आसनं - ஆஸனமாக, विजानीयात् - அறிந்துகொள்ளவேண்டும். इतरत्–மற்றது, सुखनाशनं–ஸுகத்தைப் போக்கக்கூடியது.

எப்படி அமர்ந்தால் ஸுகமாகவே இடைவிடாது பிரஹ்மத்தை சிந்தனை செய்ய முடியுமோ அதை ஆஸனம் என்று அறிந்துகொள்ளவும். மற்றதெல்லாம் ஸுகத்தைக் கெடுப்பதேயாகும். (913)

चित्तादिसर्वभावेषु ब्रह्मत्वेनैव भावनात् ।
निरोधः सर्ववृत्तीनां प्राणायामः स उच्यते ॥ ९१४ ॥

சித்தாதி ஸர்வபாவேஷு ப்ரஹ்மத்வேனைவ பாவனாத் ।
நிரோத: ஸர்வ வ்ருத்தீனாம் ப்ராணாயாம: ஸ உச்யதே ॥

चित्तादिसर्वभावेषु-சித்தம் முதலான எல்லா வஸ்துக்களிலும், ब्रह्मत्वेनैव-ப்ரஹ்மத்தன்மை யுள்ளதாகவே, भावनात्-பாவனை செய்வதால், सर्ववृत्तीनां-எல்லா மனோ விருத்திகளுக்கும், निरोधः-தடை ஏற்படுவது எதுவோ, सः-அது, प्राणायामः-பிராணாயாமமாக, उच्यते-சொல்லப் படுகிறது.

சித்தம் முதலிய எல்லா விஷயங்களையும் பிரஹ்மமாகவே பாவிக்கிறபடியால் எல்லா மனோ விருத்திகளுக்கும் தடை ஏற்படுவது எதுவோ, அது பிராணாயாமம் என்று சொல்லப்படுகிறது. (914)

निषेधनं प्रपञ्चस्य रेचकाख्यः समीरणः ।
ब्रह्मैवास्मीति या वृत्तिः पूरको वायुः ईरितः ॥ ९१५ ॥

ततः तद्वृत्तिनैश्चल्यं कुम्भकः प्राणसंयमः ।
अयं चापि प्रबुद्धानां अज्ञानां प्राणपीडनम् ॥ ९१६ ॥

நிஷேதநம் ப்ரபஞ்சஸ்ய ரேசகாக்ய: ஸமீரண: ।
ப்ரஹ்மைவாஸ்மீதி யா வ்ருத்தி: பூரகோ வாயுரீரித: ॥

ததஸ் தத்வ்ருத்தி நைஸ்சல்யம் கும்பக: ப்ராண ஸம்யம: ।
அயம் சாபி ப்ரபுத்தானுமஜ்ஞானும் ப்ராண பீடநம் ॥

प्रपञ्चस्य – பிரபஞ்சத்தை, निषेधनं – இல்லையென்று பாவிப்பது, रेचकाख्यः–ரேசகம் என்ற, समीरण--வாயு. ब्रह्मैवास्मीति–ப்ரஹ்மமாகவே இருக்கிறேன் என்ற, या– எந்த, वृत्तिः–மனோவிருத்தியோ (அது), पूरको वायुः– பூரகம் என்னும் வாயுவாக, ईरितः–சொல்லப்பட்டது. ततः–பிறகு, तद्वृत्तिनैश्चल्यं–அந்த விருத்திகளின் சலன மற்ற தன்மை, कुम्भकः प्राणसंयमः–கும்பகமென்னும் பிராணுயாமம், अयं चापि–இதுவும், प्रबुद्धानां ஞானமுள்ள வர்களுக்குத்தான். अज्ञानां–அக்ஞானிகளுக்கு, प्राण- पीडनं – பிராணனைத் துன்புறுத்துவது (பிராணுயாமம்)

பிரபஞ்சத்தை இல்லையென்று பாவிப்பது ரேசக பிராணு யாமம். பிரஹ்மம்தான் நான் என்னும் விருத்தி பூரக பிராணு யாமம். பிறகு அந்த இரு விருத்திகளும் அசைவற்று இருப்பது அதாவது விருத்தியற்ற நிலை ‘கும்பகம்’ என்ற பிராணுயாமம். இது நன்கு ஞானமுள்ளவர்களுக்குத்தான். அறியாதவர் களுக்கு மூச்சை ஹிம்ஸிப்பது பிராணுயாமம். (915-916)

विषयेष्वात्मतां त्यक्त्वा मनसः चितिमज्जनम् ।
प्रत्याहारः स विज्ञेयोऽभ्यसनीयो मुमुक्षुभिः ॥ ९१७ ॥

விஷயேஷ்வாத்மதாம் த்யக்த்வா மநஸஸ்சிதிமஜ்ஜனம் ।
ப்ரத்யாஹார: ஸ விக்ஞேயோப்யஸநீயோ முமுக்ஷுபி: ॥

विषयेषु–அநாத்ம விஷயங்களில், आत्मतां – ஆத்மா என்ற எண்ணத்தை, त्यक्त्वा–விட்டு, मनसः–மனதின், चितिमज्जनं–சைதன்யத்தின் மூழ்குதல் (எதுவோ), सः– அது, प्रत्याहारः – ப்ரத்யாஹாரமாக, विज्ञेयः – அறியத் தக்கது. (இது) मुमुक्षुभिः–மோக்ஷம் அடைய விருப்ப முள்ளவர்களால், अभ्यसनीयः–கட்டாயம் அப்யஸிக்கத் தக்கது.

விஷயங்களில் நான் என்ற ஆத்மபாவத்தைவிட்டு, மனஸை சைதன்யத்தில் மூழ்கச்செய்வது பிரத்யாஹாரம் என்று அறியவேண்டியது. முமுக்ஷுக்கள் இதை அப்யாஸம் செய்யவேண்டியதவசியம். (917)

यत्र यत्र मनो याति ब्रह्मणः तत्र दर्शनात् ।
मनसो धारणं चैव धारणा सा परा मता ॥ ९१८ ॥

யத்ர யத்ர மநோ யாதி ப்ரஹ்மணஸ் தத்ர தர்சனுத் l
மநஸோ தாரணம் சைவ தாரணு ஸா பரா மதா ll

यत्र यत्र எங்கெங்கு, मनः-மனம், याति-செல்கிறதோ, तत्र-அங்கு, ब्रह्मणः-ப்ரஹ்மத்தை, दर्शनात्-காண்பதால், मनसः-மனதை, धारणं चैव-நிலை நிறுத்துவது தான், सा-அந்த, परा மேலான, धारणा-தாரணையாக, मता கருதப் பட்டிருக்கிறது.

எங்கே எங்கே மனஸ் போகிறதோ அங்கேயெல்லாம் பிரஹ்மத்தை பார்ப்பதினுல் ப்ரஹ்மத்தில் மனதை நிலைநிறுத்து வது மேலான தாரணையாக எண்ணப்படுகிறது எல்லா வஸ்துக்களையும் ப்ரஹ்மமாகப் பார்ப்பவனுக்கு எந்த விஷயத்தை நோக்கி மனம் சென்ருலும், அந்த விஷயம் ப்ரஹ்ம மாகவே காண்கிறபடியால் ப்ரஹ்மத்தில் மனதின் தாரணை தாஞகவே ஏற்பட்டுவிடுகிறது. (918)

ब्रह्मैवास्मीति सद्वृत्त्या निरालम्बतया स्थितिः ।
ध्यानशब्देन विख्याता परमानन्ददायिनी ॥ ९१९ ॥

ப்ரஹ்மைவாஸ்மீதி ஸத்வ்ருத்யா நிராலம்பதயா ஸ்திதி:
த்யாந சப்தேந விக்யாதா பரமாநந்த தாயினீ ll

ब्रह्मैव अस्मि इति-ப்ரஹ்மமாகவே இருக்கிறேன் என்ற, सद्वृत्त्या - ஸத்ருபமான ப்ரஹ்மாகார விருத்தியோடு, निरालम्बतया-வேறு ஒன்றையும் விஷயீகரிக்காத தன்மை யோடு, स्थितिः-இருப்பது, ध्यानशब्देन-தியானம் என்ற சொல்லால், विख्याता-பிரஸித்தமாகச் சொல்லப்பட்டது. (இது) परमानन्ददायिनी-பேராநந்தத்தைக் கொடுக்கக் கூடியது.

பிரஹ்மமே நான் என்கிற நல்ல (ஸத்வஸ்துவை விஷயீ கரிக்கிற) விருத்தியுடன் வேறு எவ்வித ஆலம்பனமுமில்லாமல்

இருக்கும் நிலை தியானம் என்ற வார்த்தையினல் சொல்லப்படுகிறது. அது உத்தமமான ஆனந்தத்தைக் கொடுக்கக் கூடியது. (919)

निर्विकारतया वृत्त्याः ब्रह्माकारतया पुनः ।
वृत्तिविस्मरणं सम्यक् समाधिः ज्ञानसंज्ञकः ॥ ९२० ॥

நிர்விகாரதயா வ்ருத்த்யா ப்ரஹ்மாகாரதயா புந: ।
வ்ருத்தி விஸ்மரணம் ஸம்யக் ஸமாதிர் த்யாந ஸம்ஞக: ॥

वृत्त्याः - விருத்திக்கு, निर्विकारतया - மாறுதலற்ற தன்மையாலும், ब्रह्माकारतया - ப்ரஹ்மாகாரத் தன்மையாலும், सम्यक् - நன்ருக, वृत्तिविस्मरणं - விருத்தியை மறத்தல், ज्ञानसंज्ञकः-ஞானம் என்ற பெயருள்ள, समाधिः-ஸமாதியாகும்.

விருத்தியானது எவ்வித விகாரத்தையும் (மாறுதலையும்) அடையாமல் பிரஹ்மாகாரமாக இருக்கும்போது நன்ருக விருத்தியையே மறந்துவிடுவது ஸமாதியாகும். இதற்கு ஞானம் என்று பெயர். (920)

(அ) சிஷ்யன் ஸமாதி விஷயமாக 793, 794 சுலோகங்களில் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் பதில் சொல்லி வருகையில் ஸமாதியை கெடுக்கக்கூடியவை எவையென்ற கேள்வி மீதப்பட்டுவிட்டபடியால் அதையும் இப்பொழுது சொல்லி ஸ்ரீ குரு தன் ஆசீர்வாதத்துடன் உபதேசத்தை முடிக்கிருர்:—

समाधौ क्रियमाणे तु विघ्ना ह्यायान्ति वै बलात् ।
अनुसन्धानराहित्यं आलस्यं भोगलालसा ॥ ९२१ ॥

भयं तमश्च विक्षेपः तेजस्स्पन्दश्च शून्यता ।
एवं यत् विघ्नबाहुल्यं त्याज्यं तत् ब्रह्मविज्जनैः ॥ ९२२ ॥

ஸமாதௌ க்ரியமாணே து விக்நா ஹ்யாயாந்தி வை பலாத் ।
அநுஸந்தான ராஹித்யமாலஸ்யம் போக லாலஸா ॥

பயம் தமச்ச விக்ஷேபஸ் தேஜஸ் ஸ்பந்தச்ச சூந்யதா I
ஏவம் யத் விக்ன பாஹுள்யம் த்யாஜ்யம் தத்
ப்ரஹ்மவிஜ்ஜனை: II

**समाधौ** - ஸமாதியானது, **क्रियमाणे तु** - செய்யப்படும் பொழுதோவெனில், **बलात्** - பலாத்காரமாக, **विघ्नाः** - விக்னங்கள், **आयान्ति**-வருகின்றன. **अनुसन्धानराहित्यं**-தொடர்ச்சியான நினைவு இல்லாமை, **आलस्यं**-சோம்பல், **भोगलालसा**-விஷயஸுகானுபவத்தில் அதிக ஆசை, **भयं**-பயம், **तमः**-அக்ஞானம், **विक्षेपः**-விக்ஷேபம், **तेजस्स्पन्दश्च**-ஒளியின் அசைவு, **शून्यता**-ஒன்றும் தோன்றுமலிருத்தல், **एवं**-இவ்விதமான, **यत्** **विघ्नबाहुल्यं**-எந்த அதிகமான இடைஞ்சல்களுண்டோ, **तत्**-அது, **ब्रह्मविज्ञैः**-ப்ரஹ்ம வித்தான மனிதர்களால், **त्याज्यं**-விலக்கத்தக்கது.

ஸமாதி செய்து கொண்டிருக்கும் போதே பலாத்காரமாய் இடையூறுகள் வந்துவிடுகின்றன தொடர்ந்து அனுஸந்தானம் செய்யாதிருத்தல், சோம்பல், விஷயபோகத்தில் அதிக ஆசை பயம், இருட்டு (அக்ஞானம்) விக்ஷேபம் (தியானத்திற்கு இடைஞ்சலாக வேறு விஷயங்கள் மனதைத்தாக்குதல்) (முன் தோன்றக்கூடிய) ஒளி ஆடிக்கொண்டேயிருப்பது, வெறும் சூன்யமாயிருக்கும் தன்மை இவ்விதமாக எந்த பல விக்னங்கள் இருக்கின்றனவோ அவை பிரஹ்மத்தை யறியும் ஜனங்களால் விடத்தக்கவை. (921-922)

विघ्नान् एतान् परित्यक्त्वा प्रमादरहितो वशी ।
समाधिनिष्ठया ब्रह्म साक्षात् भवितुं अर्हसि ।। ९२३ ।।

விக்நானேதான் பரித்யக்த்வா ப்ரமாத ரஹிதோ வசீ I
ஸமாதி நிஷ்டயா ப்ரஹ்ம ஸாக்ஷாத் பவிதுமர்ஹஸி II

**एतान् विघ्नान्** - இந்த இடைஞ்சல்களை, **परित्यक्त्वा** - முழுவதும் விலக்கிவிட்டு, **प्रमादरहितः**-கவனக்குறைவற்றவனாய், **वशी**-புலன்களை தன்வசத்தில் கொண்டவனாய், **समाधिनिष्ठया**-ஸமாதியில் நிஷ்டையாக இருப்பதால், **साक्षात्**-

நேராக, ब्रह्म-ப்ரஹ்மமாக, भवितुं-ஆவதற்கு, अर्हसि-தக்கவனுகிருய்.

இந்த விக்னங்களையெல்லாம் நன்கு விலக்கிவிட்டு, கவனக்குறைவு இல்லாமல், (மனோவாக்கு காயங்களை) வசப்படுத்திக்கொண்டு, ஸமாதியில் நிலைத்திருப்பதினுல் ஸாக்ஷாத்தாக பிரஹ்மமாக நீ ஆக (இருக்க) வேண்டும். (923)

(அ) ஸ்ரீ குருவின் உபதேசத்தைக்கேட்டு அதன்படி நடந்து ஆத்மதத்வத்தை அறிந்தவுடன் தன் நன்றியைத் தெரிவிக்க மறுபடியும் சிஷ்யன் குருவின் ஸமீபம் வருகிருன் :—

इति गुरुवचनात् श्रुतिप्रमाणात्
परं अवगम्य सतत्त्वं आत्मयुक्त्या ।
प्रशमितकरणः समाहितात्मा
क्वचित् अचलाकृतिः आत्मनिष्ठितोऽभूत् ॥ ९२४ ॥

இதி குரு வசனுத் ச்ருதி ப்ரமாணுத்
பரமவகம்ய ஸதத்வமாத்ம யுக்த்யா ।
ப்ரசமித கரண: ஸமாஹிதாத்மா
க்வசிதசலாக்ருதிராத்மநிஷ்டிதோபூத்॥

इति-இவ்வாறு, गुरुवचनात्-குருவின் உபதேச வார்த்தையாலும், श्रुतिप्रमाणात् - வேதபிரமாணத்தாலும், आत्मयुक्त्या - தன் யுக்தியாலும், परं-மேலான, सतत्त्वं-ஆத்ம தத்வத்தை, अवगम्य-அறிந்து, प्रशमितकरणः - புலன்களையடக்கிக்கொண்டு, समाहितात्मा-மனோவிருத்திகளை யடக்கியவனுய், क्वचित् ஒரு இடத்தில், अचलाकृतिः- அசைவற்ற சரீரமுள்ளவனுக (அமர்ந்து), आत्मनिष्ठितः- ஆத்மஸ்வரூபத்திலேயே நிலைத்தவனுக, अभूत्- இருந்தான்.

இவ்விதம் குருவின் உபதேசத்திஞலும் வேதமாகிற பிரமாணத்திஞலும் தன்னுடைய யுக்தியிஞலும் மேலான ஆத்மதத்வத்தை அறிந்துகொண்டு, (மனஸ் இந்திரியங்களாகிய)

கரணங்களை அடக்கிக்கொண்டு, ஒரே குறியாக மனஸை வைத்துக்கொண்டு (ஸமாதி செய்துகொண்டு), அசைவற்ற சரீரத்துடன் தனிமையான ஒரு இடத்தில் இருந்துகொண்டு, ஆத்மாவிலேயே நிலைத்தவனாக சிஷ்யன் இருந்துவந்தான்.

बहुकालं समाधाय स्वस्वरूपे तु मानसम् ।
उत्थाय परमानन्दात् गुरुं एत्य पुनः मुदा ।
प्रणाम पूर्वकं धीमान् सगद्गदं उवाच ह ॥ ९२५ ॥

பஹுகாலம் ஸமாதாய ஸ்வஸ்வரூபே து மாநஸம் ।
உத்தாய பரமானந்தாத் குருமேத்ய புநர் முதா ।
ப்ரணாமபூர்வகம் தீமான் ஸகத்கதமுவாச ஹ ॥

धीमान् - புத்திமானான சிஷ்யன், बहुकालं – வெகு நேரம், स्वस्वरूपे-தனது ஆத்ம ஸ்வரூபத்தில், मानसं- மனதை, समाधाय-நிலைநிறுத்தி, उत्थाय-எழுந்திருந்து, पुनः - மறுபடியும், परमानन्दात् - மிகுந்த ஸந்தோஷத்துடன், गुरुं-குருவை, एत्य-அடைந்து, मुदा-ஸந்தோஷத்துடன், प्रणामपूर्वकं - நமஸ்கார பூர்வகமாக, सगद्गदं – தழதழத்த வார்த்தையுடன், उवाच-சொன்னான்.

வெகுகாலம் தன் ஸ்வரூபத்திலேயே மனஸை நன்கு நிலைத்திருக்கச்செய்து பிறகு எழுந்திருந்து மறுபடியும் பரமானந்தத்துடன் குருவை அடைந்து நமஸ்கார பூர்வகமாக தழதழத்த சொல்லுடன் அந்த புத்திமானான சிஷ்யன் பரமானந்தத்துடன் (இவ்விதம்) சொன்னான். (925)

नमो नमस्ते गुरवे नित्यानन्द स्वरूपिणे ।
मुक्तसङ्गाय शान्ताय त्यक्ताहंताय ते नमः ॥ ९२६ ॥

நமோ நமஸ்தே குரவே நித்யானந்த ஸ்வரூபிணே ।
முக்த ஸங்காய சாந்தாய த்யக்தாஹந்தாய தே நம: ॥

नित्यानन्दस्वरूपिणे - அழிவற்ற ஆநந்தஸ்வரூபியாக இருக்கும், गुरवे குருவான, ते-தங்களுக்கு, नमो नमः-

நமஸ்காரம், நமஸ்காரம், मुक्तसङ्गाय-ஸங்கத்தைவிட்ட வராயும், शान्ताय-சாந்தராயும், त्यक्ताहंताय-அஹங்காரத்தை விட்டவராயும் உள்ள, ते - உங்களுக்கு, नमः - நமஸ்காரம்.

அழிவற்ற ஆனந்த ஸ்வரூபமாயிருக்கும் குருவான தங்களுக்கு நமஸ்காரம், நமஸ்காரம். எல்லாவித ஸங்கத்தையும் விட்டவராயும் சாந்தராயும், அஹங்காரத்தை விட்டவராயும் இருக்கும் தங்களுக்கு நமஸ்காரம். (926)

दयाधाम्ने नमो भूम्ने महिम्नः पारं अस्य ते ।
नैवास्ति यत्कटाक्षेण ब्रह्मैवाभवं अद्वयम् ॥ ९२७ ॥

தயா தாம்நே நமோ பூம்நே மஹிம்ந: பாரமஸ்ய தே 1
நைவாஸ்தி யத்கடாக்ஷேண ப்ரஹ்மைவாபவமத்வயம் 11

दयाधाम्ने-கருணைக்கு இருப்பிடமான, भूम्ने மிகப்பெரிய ப்ரஹ்மமாக இருக்கும் (தங்களுக்கு), नमः- நமஸ்காரம். यत्कटाक्षेण-எந்த உங்களுடைய கடாக்ஷத்தால், अद्वयं- இரண்டற்ற, ब्रह्मैव-ப்ரஹ்மமாகவே, अभवं-(நான்) ஆகிவிட்டேனோ, अस्य-இந்த, ते-உங்களுடைய, महिम्नः- மாஹாத்ம்யத்திற்கு, पारं- எல்லே, नैवास्ति கிடையவே கிடையாது.

தயைக்கு இருப்பிடமாயும் பூமாவாயும் (மிகப்பெரிய பிரஹ்மமாக) இருக்கும் தங்களுக்கு நமஸ்காரம். எவருடைய கடாக்ஷத்தினுல் நான் இரண்டற்ற பிரஹ்மமாகவே ஆகிவிட்டேனே, அந்த தங்களுடைய மஹிமைக்கு எல்லேயே கிடையாது. (927)

किं करोमि क्व गच्छामि किं गृह्णामि त्यजामि किम् ।
यत् मया पूरितं विश्वं महाकल्पाम्बुना यथा ॥ ९२८ ॥

கிம் கரோமி க்வ கச்சாமி கிம் க்ருஹ்ணாமி த்யஜாமி கிம் 1
யன் மயா பூரிதம் விச்வம் மஹாகல்பாம்புநா யதா 11

यत्-எதனால், महाकल्पांबुना यथा-மஹாப்ரளய காலத்து ஜலத்தால்போல், मया-என்னால், विश्वं-பிரபஞ்சம், पूरितं-நிரப்பப்பட்டிருக்கிறதோ (அதனால்), किं करोमि-(நான்) எதைச் செய்வேன்? क्व-எங்கே, गच्छामि-செல்வேன்? किं-எதை, गृह्णामि - எடுப்பேன்? किं त्यजामि - எதை விடுவேன்?

பிரளய காலத்து ஜலம் பிரபஞ்சம் முழுவதும் நிறைந்திருப்பதுபோல ஜகத்து முழுவதையும் ப்ரஹ்மரூபியான நான் வியாபித்திருக்கிறபடியால் நான் என்ன செய்யமுடியும்? எங்கே போவேன்? எதை எடுத்துக்கொள்வேன்? எதைத் தள்ளுவேன்? என்னைக்காட்டிலும் வேறான இடமும் பொருளுமிருந்தால் அல்லவா நான் போகவும் காரியத்தைச் செய்யவும் எடுக்கவும் விடவும் முடியும். (928)

मयि सुखबोधपयोधौ महति ब्रह्माण्डबुद्बुदसहस्रम् ।
मायामयेन मरुता भूत्वा भूत्वा पुनः तिरोधत्ते ॥ ९२९ ॥

மயி ஸுகபோத பயோதௌ மஹதி ப்ரஹ்மாண்டபுத்புத ஸஹஸ்ரம் ।
மாயாமயேன மருதா பூத்வா பூத்வா புநः திரோதத்தே ॥

महति-பெரிய, सुखबोधपयोधौ-ஆனந்த-ஞான ஸமுத்ரமாகிய, मयि-என்னிடத்தில், मायामयेन-மாயாரூபமான, मरुता-காற்றினால், ब्रह्माण्डबुद्बुदसहस्रं-ஆயிரக்கணக்கான ப்ரஹ்மாண்டங்களாகிற நீர்க்குமிழி, भूत्वा भूत्वा-உண்டாகி உண்டாகி, पुनः-திரும்பத்திரும்ப, तिरोधत्ते-மறைந்துவிடுகிறது.

பெரிய ஆனந்தக்ஞான ஸமுத்திரமாகிய என்னிடத்தில் ஆயிரக்கணக்கான பிரஹ்மாண்டங்களாகிற நீர்குமிழிகள் மாயாமயமான காற்றினால் உண்டாகி உண்டாகி மறுபடியும் மறைகின்றன. (929)

नित्यानन्दस्वरूपोऽहं आत्माऽहं त्वदनुग्रहात् ।
पूर्णोऽहं अनवद्योऽहं केवलोऽहं च सद्गुरो ॥ ९३० ॥

நித்யாநந்த ஸ்வரூபோऽஹம் ஆத்மாऽஹம்
த்வதநுக்ரஹாத் I
பூர்ணோऽஹம் அநவத்யோऽஹம் கேவலோऽஹம் ச
ஸத்குரோ II

सद्गुरो-ஸத்குருவே, त्वदनुग्रहात् - உங்களுடைய அனுக்ரஹத்தால், अहं-நான், नित्यानन्दस्वरूपः-அழிவற்ற ஆனந்த ஸ்வரூபனாக இருக்கிறேன். अहं-நான், आत्मा-ஆத்மாவாக இருக்கிறேன். अहं-நான், पूर्णः-எங்கும் நிறைந்தவனாக இருக்கிறேன். अहं நான், अनवद्यः-தோஷமில்லாதவனாயிருக்கிறேன். अहं-நான், केवलश्च-தனித்தவனாகவும் இருக்கிறேன்.

ஹே ஸத்குரோ, தங்களுடைய அனுக்ரஹத்தினால் நான் நித்யமான ஆனந்த ஸ்வரூபனாய் இருக்கிறேன். ஆத்மா நான். நிறைந்தவன் நான். தோஷமற்றவன் நான். தனியாக இருப்பவன் (ஸங்கமற்றிருப்பவன்) நான். (930)

अकर्ताऽहं अभोक्ताऽहं अविकारोऽहं अक्रियः ।
आनन्दघन एवाहं असङ्गोऽहं सदाशिवः ॥ ९३१ ॥

அகர்த்தாऽஹம் அபோக்தாऽஹம் அவிகாரோऽஹம்
அக்ரிய: I
ஆநந்தகந ஏவாऽஹம் அஸங்கோऽஹம் ஸதாசிவ: II

अहं-நான், अकर्ता-செய்கிறவனல்ல. अहं-நான், अभोक्ता-அனுபவிக்கிறவனல்ல. अहं-நான், अविकारः-மாறுதலற்றவன். अक्रियः-செய்கையில்லாதவன். अहं-நான், आनन्दघन एव-ஆனந்தக்கட்டியாகவே இருக்கிறேன். अहं-நான், असङ्गः-பற்றற்றவன். सदाशिवः-எப்பொழுதும் மங்களமான ப்ரஹ்ம ஸ்வரூபம்.

செய்கிறவனல்லாதவன் நான். அனுபவிக்கிறவன் அல்லாதவன் நான். நான் விகாரம் (மாறுதல்) அற்றவன். நான் கிரியை யற்றவன், ஆனந்தகனமே நான். நான் ஸங்கமில்லாதவன், எப்பொழுதும் மங்களமாயிருப்பவன்.

त्वत्कटाक्षवरचान्द्रचन्द्रिकापातधूतभवतापजश्रमः ।
प्राप्तवान् अहं अखण्डवैभवानन्दं आत्मपदं अक्षयं क्षणात् ॥

த்வத்கடாக்ஷ வரசாந்த்ர சந்த்ரிகா-
பாததூதபவதாபஜச்ரம: ।
ப்ராப்தவான் அஹம் அகண்டவைபவா-
நந்தம் ஆத்மபதம் அக்ஷயம் க்ஷணாத் ॥

त्वत्कटाक्ष – உங்களுடைய கடாக்ஷமாகிற, वरचान्द्रचन्द्रिका – சிறந்த சந்திரனின் நிலவு, पात-விழுந்ததால், धूत-போக்கப்பட்ட, भवतापजश्रमः – ஸம்ஸாரத்தால் உண்டான தாபத்தையுடைய, अहं-நான், क्षणात्-ஒரு க்ஷணத்தில், अक्षय அழிவற்ற, अखण्डवैभवानन्दं–எல்லையற்ற மஹிமையை உடைய ஆனந்த ரூபமான, आत्मपदं-ஆத்மநிலையை, प्राप्तवान्-அடைந்துவிட்டேன்.

தங்களுடைய கடாக்ஷமாகிற உத்தமமான சந்திர நிலா வெளிச்சம் விழுவதினால் ஸம்ஸாரதாபத்தினால் ஏற்படும் சிரமம் நீங்கினவனாக நான் ஒரு க்ஷணத்தில் எல்லையற்ற வைபவத்தோடு கூடிய ஆனந்தமாயுள்ள அக்ஷயமான ஆத்ம பதத்தை அடைந்துவிட்டேன். (932)

छायया स्पृष्टं उष्णं वा शीतं वा दुष्टु सुष्टु वा ।
न स्पृशत्येव यत्किंचित् पुरुषं तद्विलक्षणम् ॥ ९३३ ॥

சாயயா ஸ்ப்ருஷ்டமுஷ்ணம் வா சீதம் வா துஷ்டு
ஸுஷ்டு வா ।
ந ஸ்ப்ருசத்யேவ யத்கிஞ்சித் புருஷம் தத்
விலக்ஷணம் ॥

छायया-நிழலோடு, स्पृष्टं-ஒட்டிய, उष्णं वा-சூடோ, शीतं वा-குளிர்ச்சியோ, दुष्टु-கெட்டதோ, सुष्टु वा-நல்லதோ, यत्किंचित्-எந்த ஒன்றும், तद्विलक्षणं – அந்த நிழலைக்காட்டிலும் வேறுபட்ட தன்மையுள்ள, पुरुषं-புருஷனை, न स्पृशत्येव-தொடுவதேயில்லை.

நிழலின்றல் தொடப்பட்ட உஷ்ணமோ, சீதமோ, கெட்டதோ, நல்லதோ, கொஞ்சமேனும் அதற்கு வேறு யிருக்கும் புருஷனைத் தொடுவதேயில்லை. (933)

न साक्षिणं साक्ष्यधर्माः संस्पृशन्ति विलक्षणम् ।
अविकारं उदासीनं गृहधर्माः प्रदीपवत् ॥ ९३४ ॥

ந ஸாக்ஷிணம் ஸாக்ஷ்ய தர்மா: ஸம்ஸ்ப்ருசந்தி
விலக்ஷணம் 1
அவிகாரமுதாஸீநம் க்ருஹ தர்மா: ப்ரதீபவத் 11

गृहधर्माः- வீட்டின் தன்மைகள், प्रदीपवत्-தீபத்தை ஒட்டாததுபோல், साक्ष्यधर्माः - பார்க்கப்படும் பொருள் களின் தன்மைகள், विलक्षणं-வேறுன ஸ்வபாவமுள்ள வனும், अविकारं-மாறுதலற்றவனும், उदासीनं-ஸம்பந்தப் படாதவனுயுமுள்ள, साक्षिणं-பார்க்கும் ஆத்மாவை, न संस्पृशन्ति-தொடுகிறதில்லை.

வீட்டின் தர்மங்கள் (அதை பிரகாசிக்கச் செய்யும்) தீபத்தை எப்படி தொடாதோ, அவ்விதமே பார்க்கப்படுகிற பதார்த்தங்களின் தர்மங்கள் வேறு லக்ஷணமுடையவனுய் விகாரமற்றவனுய் உதாஸீனனுய் இருக்கும் ஸாக்ஷியைத் தொடாது. (934)

रवेर्यथा कर्मणि साक्षिभावो वन्हेर्यथा वाऽयसि दाहकत्वम् ।
रज्जोर्यथाऽऽरोपितवस्तुसङ्गः तथैव कूटस्थचिदात्मनो मे ॥

ரவேர் யதா கர்மணி ஸாக்ஷிபாவோ
வஹ்நேர் யதா வாயஸி தாஹகத்வம் 1
ரஜ்ஜோர் யதாரோபித வஸ்து ஸங்க:
ததைவ கூடஸ்த சிதாத்மநோ மே 11

यथा-எப்படி, रवेः-ஸூரியனுக்கு, कर्मणि-(பிராணிகள் செய்யும்) காரியத்தில், साक्षिभावः-ஸாக்ஷித்தன்மையோ, यथा वा-எப்படி, अयसि-இரும்பில், वह्नेः-நெருப்பின், दाहकत्वं-சுடும் தன்மையோ, यथा-எப்படி, रज्जोः-

கயிற்றிற்கு, आरोपितवस्तुसङ्गः - பிராந்தியால் ஏற்பட்ட வஸ்துஸங்கः - பொருளின் ஸம்பந்தமோ; तथैव - அப்படியே, कूटस्थचिदात्मनः - கூடஸ்தனுன ஞானஸ்வரூபியான மே-எனக்கும்.

ஸூர்யனுக்கு (உலகத்தில் செய்யப்படும்) கர்மாவில் எப்படி ஸாக்ஷித்தன்மையோ, இரும்பில் எப்படி அக்னியின் எரிக்கும் தன்மையோ, கயிற்றுக்கு அதில் (பிராந்தியால்) ஏற்றப்பட்டிருக்கும் வஸ்துவின் ஸங்கம் எப்படியோ, அப்படியேதான் கூடஸ்தனுய் ஞான ஸ்வரூபனுய் இருக்கும் எனக்கு. (935)

(அ) இவ்விதமாய் சிஷ்யன் தன் ஞான அனுபவத்தை வெளியிட்டுவிட்டு மேலால் ஜீவன்முக்தி, விதேஹமுக்தி விஷயமாய் குருவினிடம் பிரச்னம் பண்ணுகிருன் :—

इत्युक्त्वा स गुरुं स्तुत्वा प्रश्रयेण कृतानतिः ।
मुमुक्षोः उपकाराय प्रष्टव्यांशं अपृच्छत ॥ ९३६ ॥

இத்யுக்த்வா ஸ குரும் ஸ்துத்வா ப்ரச்ரயேண க்ருதாநதி: ।
முமுக்ஷோருபகாராய ப்ரஷ்டவ்யாம்சமப்ருச்சத ॥

इति-இவ்வாறு, सः-அந்த சிஷ்யன், उक्त्वा-சொல்லி, गुरुं-குருவை, स्तुत्वा-ஸ்தோத்ரம் செய்து, प्रश्रयेण-விநயத்துடன், कृतानतिः-நமஸ்காரம் செய்தவனுய், मुमुक्षोः-மோக்ஷம் அடைய விரும்புபவனின், उपकाराय-உபகாரத்திற்காக, प्रष्टव्यांशं-கேட்கவேண்டிய அம்சத்தை, अपृच्छत-கேட்டான்.

இவ்விதம் அவன் சொல்லி குருவை ஸ்துதித்துவிட்டு வணக்கத்துடன் நமஸ்கரித்து முமுக்ஷுக்களின் உபகாரத்தை யுத்தேசித்து கேட்கவேண்டிய முக்யமான அம்சத்தைக் கேட்டான். (936)

जीवन्मुक्तस्य भगवन् अनुभूतेश्च लक्षणम् ।
विदेहमुक्तस्य च मे कृपया ब्रूहि तत्त्वतः ॥ ९३७ ॥

ஜீவன்முக்தஸ்ய பகவன் அநுபூதேஸ்ச லக்ஷணம் I
விதேஹ முக்தஸ்ய ச மே க்ருபயா ப்ரூஹி தத்வத: II

भगवन्-பகவானே ! जीवन्मुक्तस्य-ஜீவன்முக்தனுடைய, अनुभूतेः-அனுபவத்தின், लक्षणं च-லக்ஷணத்தையும், विदेहमुक्तस्य च-விதேஹமுக்தனுடைய லக்ஷணத்தையும், कृपया-தயவால், तत्त्वतः-உள்ளபடி, मे-எனக்கு, ब्रूहि-சொல்லவேணும்.

ஹே பகவன், ஜீவன் முக்தனுடைய அனுபவத்தின் லக்ஷணம், விதேஹ முக்தனுடைய லக்ஷணம், இவைகளை எனக்கு உள்ளபடி கிருபையினால் சொல்லுங்கள். (937)

श्रीगुरुः —

वक्ष्ये तुभ्यं ज्ञानभूमिकाया लक्षणं आदितः ।
ज्ञाते यस्मिन् त्वया सर्वं ज्ञातं स्यात् पृष्टं अद्य यत् ॥ ९३८ ॥

ஸ்ரீ குரு:—

வக்ஷ்யே துப்யம் ஞாநபூமிகாயா லக்ஷணமாதித: I
ஞாதே யஸ்மின் த்வயா ஸர்வம் ஞாதம் ஸ்யாத்
ப்ருஷ்டமத்ய யத் II

अद्य இப்பொழுது, त्वया-உன்னால், यत्-எது, पृष्टं-கேட்கப்பட்டதோ, सर्वं (அது) எல்லாம், यस्मिन्-எது, ज्ञाते-அறியப்பட்டபொழுது, ज्ञातं स्यात्-அறியப்பட்டதாக ஆகுமோ (அந்த), ज्ञानभूमिकायाः-ஞானபூமியின், लक्षणं-லக்ஷணத்தை, तुभ्यं-உனக்கு, आदितः-ஆதிமுதல், वक्ष्ये-சொல்லப்போகிறேன்.

ஸ்ரீ குரு சொல்கிறார் :—

இப்பொழுது உன்னால் எது கேட்கப்பட்டிருக்கிறதோ அது எல்லாம் எதை அறிந்தால் தெரிந்ததாக ஆகுமோ, அந்த ஞான பூமிகையின் லக்ஷணத்தை முதலிலிருந்து உனக்குச் சொல்கிறேன். (938)

ज्ञानभूमिः शुभेच्छा स्यात् प्रथमा समुदीरिता ।
विचारणा द्वितीया तु तृतीया तनुमानसी ॥ ९३९ ॥

सत्त्वापत्तिः चतुर्थी स्यात् ततोऽसंसक्तिनामिका ।
पदार्थभावना षष्ठी सप्तमी तुर्यगा स्मृता ॥ ९४० ॥

ஞாநபூமி: சுபேச்சா ஸ்யாத் ப்ரதமா ஸமுதீரிதா ।
விசாரணா த்விதீயா து த்ருதீயா தநுமாநஸீ ॥

ஸத்வாபத்திஸ் சதுர்த்தீ ஸ்யாத் ததோஸம்ஸக்தி நாமிகா ।
பதார்த்தாபாவநா ஷஷ்டீ ஸப்தமீ துர்யகா ஸ்ம்ருதா ॥

प्रथमा-முதலாவதாக, समुदीरिता-சொல்லப்பட்ட, ज्ञानभूमिः-ஞானபூமியானது, शुभेच्छा स्यात्-சுபேச்சையாம். द्वितीया तु-இரண்டாவதோவெனில், विचारणा-விசாரணை, तृतीया-மூன்ருவது, तनुमानसी-தனுமாநஸீ, चतुर्थी-நான்காவது, सत्त्वापत्तिः स्यात्-ஸத்வாபத்தியாகும். ततः-பிறகு, (ஐந்தாவது) असंसक्तिनामिका அஸம்ஸக்தி என்ற பெயர் உள்ளது. षष्ठी - ஆருவது, पदार्थभावना - பதார்த்த அபாவனை, तुर्यगा-துர்யகா, सप्तमी-ஏழாவதாக, स्मृता-கருதப்பட்டுள்ளது.

1. முதலாவதாக சொல்லப்பட்டிருக்கிற ஞானபூமி "சுபேச்சா", 2. இரண்டாவது "விசாரணா", 3. மூன்ருவது "தனுமானஸீ", 4. நான்காவது "ஸத்வாபத்தி" யாகும், 5. ஐந்தாவது "அஸம்ஸக்தி" என்ற பெயருள்ளது, 6. ஆருவது "பதார்த்த-அபாவனு", 7. ஏழாவது "துர்யகா" எனப்படும். (939-940)

स्थितः किं मूढ एवास्मि प्रेक्ष्येऽहं शास्त्रसज्जनैः ।
वैराग्यपूर्वं इच्छा इति शुभेच्छा चोच्यते बुधैः ॥ ९४१ ॥

ஸ்தித: கிம் மூட ஏவாஸ்மி ப்ரேக்ஷ்யேஹம் சாஸ்த்ர ஸஜ்ஜனை: ।
வைராக்ய பூர்வமிச்சேதி சுபேச்சா சோச்யதே புதை: ॥

अहं-(நான்), किं ஏன், मूढ एव மூடனாகவே, स्थितोऽस्मि-இருந்துகொண்டிருக்கிறேன். शास्त्रसज्जनैः-சாஸ்திரங்களாலும் ஸாதுஜனங்களாலும், अहं நான், प्रेक्ष्ये-(ஆத்மாவை) அறியப்போகிறேன். इति-என்று, वैराग्यपूर्वं-வைராக்யத்தை முன்னிட்டதான, इच्छा விருப்பம், शुभेच्छा च-சுபேச்சையாக, बुधैः-வித்வான்களால், उच्यते-சொல்லப்படுகிறது.

"நான் மூடனாகவே ஏன் இருந்துகொண்டிருக்கிறேன்? சாஸ்திரத்தினாலும் ஸாது ஜனங்களாலும் நான் ஆத்மாவை அறியப்போகிறேன்" என்று வைராக்கியத்தை முன்னிட்டு ஏற்படும் விருப்பம் "சுபேச்சா" என்று அறிந்தவர்களால் சொல்லப்படுகிறது. (941)

शास्त्रसज्जनसंपर्कवैराग्याभ्यासपूर्वकम् ।
सदाचारप्रवृत्तिर्या प्रोच्यते सा विचारणा ॥ ९४२ ॥

சாஸ்த்ர ஸஜ்ஜன ஸம்பர்க வைராக்யாப்யாஸ பூர்வகம் I
ஸதாசார ப்ரவ்ருத்திர் யா ப்ரோச்யதே ஸா விசாரணா II

शास्त्र-சாஸ்திரம், सज्जनसंपर्क-ஸாதுஜனங்களின் சேர்க்கை, वैराग्य-வைராக்யம், अभ्यास-அப்யாஸம், पूर्वकं-இவைகளை முன்னிட்டு, या-எந்த, सदाचारप्रवृत्तिः-நல்ல காரியங்களில் ப்ரவிருத்தி உண்டோ, सा-அது, विचारणा-விசாரணையாக, प्रोच्यते-சொல்லப்படுகிறது.

சாஸ்திரம், ஸாது ஜனங்களின் சேர்க்கை, வைராக்கியம், ஞானப்யாஸம், இவைகளை முன்னிட்டுக்கொண்டு நல்ல காரியத்தில் (சிரவண மனனங்களில்) பிரவிருத்தி ஏற்படுவது, 'விசாரணை' எனப்படுகிறது. (942)

विचारणाशुभेच्छाभ्यां इन्द्रियार्थेषु रक्तता ।
यत्र सा तनुतां एति प्रोच्यते तनुमानसी ॥ ९४३ ॥

விசாரணா சுபேச்சாப்யாம் இந்த்ரியார்த்தேஷு ரக்ததா I
யத்ர ஸா தநுதாமேதி ப்ரோச்யதே தநுமாநஸீ II

विचारणा-விசாரணை, शुभेच्छाभ्यां-சுபேச்சை இவைகளால், इन्द्रियार्थेषु-இந்திரியங்களுக்கு விஷயமான உலகப் பொருள்களில், रक्तता-ஆசை, यत्र-எங்கே, तनुतां एति-மெலிந்திருக்கும் தன்மையை அடைகிறதோ, सा-அது, तनुमानसी-தனுமாநஸியாக, प्रोच्यते-சொல்லப்படுகிறது.

சுபேச்சையினாலும் விசாரணையினாலும் இந்திரியங்களுக்கு விஷயமான பதார்த்தங்களில் உள்ள பற்றுதல் குறைந்து விடுவது 'தனுமானஸீ' எனப்படுகிறது. (943)

भूमिकात्रितयाभ्यासात् चित्तेऽर्थविरतेः वशात् ।
सत्त्वात्मनि स्थिते शुद्धे सत्त्वापत्तिः उदाहृता ॥ ९४४ ॥

பூமிகா த்ரிதயாப்யாஸாத் சித்தேர்த்த விரதேர் வசாத் 1
ஸத்வாத்மநி ஸ்திதே சுத்தே ஸத்வாபத்திருதாஹ்ருதா

भूमिकात्रितयाभ्यासात्-மூன்று பூமிகைகளை அப்யாஸம் செய்வதால், अर्थविरतेः वशात्-விஷயங்களில் வைராக்யம் காரணமாக, शुद्धे-சுத்தமான, चित्ते-சித்தமானது, सत्त्वात्मनि-ஸத்வஸ்வரூபத்தில், स्थिते-நிலைத்திருக்கும் பொழுது, सत्त्वापत्तिः-ஸத்வாபத்தியாக, उदाहृता-சொல்லப்பட்டிருக்கிறது.

முன்சொன்ன சுபேச்சை, விசாரணை, தனுமானஸீ என்ற மூன்று பூமிகைகளையும் அப்யாஸம் செய்வதால் விஷயங்களிலுள்ள வைராக்யம் காரணமாக சுத்தமான சித்தமானது ஸத்வஸ்வரூபத்திலேயே நிற்கும்போது 'ஸத்வாபத்தி' என்று சொல்லப்படுகிறது. (944)

दशाचतुष्टयाभ्यासात् असंसर्गफला तु या ।
रूढसत्त्वचमत्कारा प्रोक्ताऽसंसक्तिनामिका ॥ ९४५ ॥

தசா சதுஷ்டயாப்யாஸாத் அஸம்ஸர்க பலா து யா 1
ரூட ஸத்வ சமத்காரா ப்ரோக்தாஸம்ஸக்தி நாமிகா ll

दशाचतुष्टयाभ्यासात्-நான்கு பூமிகளையும் அப்யாஸம் செய்வதால், असंसर्गफला-பற்றுதலில்லாமையைப்பலனாக

உடையதும், रूढसत्त्वचमत्कारा-ஸத்வ ப்ரகாசம் நன்கு நிலைத்துள்ளதுமான, या-எந்த நிலையுண்டோ (அது), असंसक्तिनामिका-அஸம்ஸக்தி என்ற பெயருள்ளதாக, प्रोक्ता-சொல்லப்பட்டது.

நான்கு பூமிகைகளையும் அப்யாஸம் செய்வதினால் நன்கு நிலைத்துள்ள ஸத்வப்ரகாசத்தை உடையதும் பற்றுதலில்லாமையை பலனாக உடையதும் எதுவோ, அது 'அஸம்ஸக்தி' என்ற பெயருள்ளதாகச் சொல்லப்படுகிறது. (945)

भूमिकापञ्चकाभ्यासात् स्वात्मारामतया भृशम् ।
आभ्यन्तराणां बाह्यानां पदार्थानां अभावनात् ॥ ९४६ ॥

परप्रयुक्तेन चिरप्रयत्नेन अवबोधनम् ।
पदार्थाभावना नाम षष्ठी भवति भूमिका ॥ ९४७ ॥

பூமிகா பஞ்சகாப்யாஸாத் ஸ்வாத்மாராமதயா ப்ருசம் ।
ஆப்யந்தராணாம் பாஹ்யாநாம் பதார்த்தாநாமபாவனாத்

பர ப்ரயுக்தேந சிர ப்ரயத்நேநாவபோதநம் ।
பதார்த்தாபாவநா நாம ஷஷ்டீ பவதி பூமிகா ॥

भूमिकापञ्चकाभ्यासात्-ஐந்து பூமிகைகளின் அப்யாஸத்தால், भृशं-நன்கு, स्वात्मारामतया-தன் ஆத்மஸ்வரூபத்திலேயே இன்புற்றுக்கொண்டிருப்பதால், आभ्यन्तराणां-உள்ளேயும், बाह्यानां-வெளியேயுமுள்ள, पदार्थानां-வஸ்துக்களை, अभावनात्-நினையாததால், परप्रयुक्तेन-பிறரால் செய்யப்பட்ட, चिरप्रयत्नेन-வெகுகால பிரயத்னத்தால், अवबोधनं-விழித்துக்கொள்வது, पदार्थाभावना नाम-பதார்த்த அபாவனை என்ற, षष्ठी भूमिका भवति-ஆறுவது பூமிகையாகிறது.

ஐந்து பூமிகைகளின் அப்யாஸத்தினால் நன்கு தன் ஆத்மஸ்வரூபத்திலேயே ரமித்துக்கொண்டிருப்பதால் உள்ளேயுள்ளதோ வெளியேயுள்ளதோ எந்தப் பதார்த்தங்களையும் எண்ணுடலேயிருப்பதால் வேறு யாரேனும் செய்யும் வெகு

காலப் பிரயத்னத்தாலேயே (உலகரீதியாய்) விழித்துக் கொள்வது எதுவோ, அது "பதார்த்த - அபாவனை" என்ற ஆருவது பூமிகையாகும். (இந்த நிலையை அடைந்தவன் ஆத்ம தியானத்திலிருந்து தானாக வெளியே வரமாட்டான். பிறர் வெகுநேரம் பல முயற்சிகள் செய்தால்தான் அவனுடைய தியானத்தைக் கலைத்து அவன் மனதை வெளியுலகிற்குக் கொண்டுவர முடியும்). (946-947)

षड्भूमिकाचिराभ्यासात् भेदस्यानुपलम्भनात् ।
यत् स्वभावैकनिष्ठत्वं सा ज्ञेया तुर्यगा क्षितिः ॥ ९४८ ॥

ஷட்பூமிகா சிராப்யாஸாத் பேதஸ்யாநுபலம்பனாத் ।
யத் ஸ்வபாவைக நிஷ்டத்வம் ஸா ஞேயா துர்யகா க்ஷிதி: ॥

षड्भूमिकाचिराभ्यासात्- ஆறு பூமிகைகளையும் வெகு காலம் அப்யாஸம் செய்வதால், भेदस्य - வேற்றுமை, अनुपलम्भनात्-தோன்ருமலிருப்பதால், यत् स्वभावैकनिष्ठत्वं- ஸ்வஸ்வரூபத்திலே நிலைத்திருப்பது எதுவோ, सा-அது, तुर्यगा क्षितिः-துர்யகை என்ற பூமிகையாக, ज्ञेया-அறியத் தக்கது.

ஆறு பூமிகைகளையும் வெகுநாள் அப்யாஸம் செய்வதால் பேதமே தோன்ருமலிருந்துவிடுமாதலால் தன்னுடைய ஆத்ம ஸ்வரூபத்திலேயே நிலைத்திருந்துவிடுவது 'துர்யகா' பூமிகை யாக அறியவேண்டும்.

இவ்வேழு பூமிகைகளில் விவேகம், வைராக்யம், சமாதி ஷட்கம் இம்மூன்று ஸாதனங்களையும் பெற்று இதனுலேற்படும் தீவ்ர முமுக்ஷு முதலாவது பூமிகையான சுபேச்சையாகும். ஸாதன சதுஷ்டய ஸம்பத்தியுடன் சிரவண மனனங்களைச் செய்வது விசாரணை என்ற 2 வது பூமிகை. ஸந்யாஸ தர்மாநுஷ்டானத்துடன் செய்யும் சிரவண மனனங்கள்தான் ஸதாசாரம் என்பது. நிதித்யாஸனம் மூன்ருவதான தநு- மாநஸீ தியானத்தாலும் வெளிவிஷயங்களில் செல்லாததாலும் மனம் ஸூக்ஷ்மமாகிவிடுகிறது. ப்ரஹ்ம ஸாக்ஷாத்காரம் அடைந்த நிலை நான்காவதான ஸத்வாபத்தி. இவனுக்கு 'ப்ரஹ்மவித்' என்று பெயர். இவருக்கு பிரபஞ்சம் மறையாது,

ஆனால் மித்யை என்ற தீர்மானமான ஞானமிருப்பதால் அது அவரை பாதிக்காது. பிரபஞ்சம் மறைவதற்காக ஸமாதி நிலையில் இருப்பவர் தானாகவே ஸமாதி கலையக்கூடியவராய் இருப்பவர் 'ப்ரஹ்மவித்வரர்' எனப்படுகிறார். அவர்தான் ஐந்தாவது பூமிகையான அஸம்ஸக்தி என்று சொல்லப்படும் நிலையிலிருப்பவர். தானாக ஸமாதி கலையாமல் வேறுகாரணங்களால் கலைந்து, ப்ரபஞ்சம் தோன்றுகிறவர் 'ப்ரஹ்மவித்வரீயான்' எனப்படுகிறார். அவர் பதார்த்த-அபாவனை என்ற ஆறாவது பூமிகையில் இருப்பவர். தானாகவோ, வேறு காரணத்தாலோ ஆத்மநிஷ்டை கலையாமலிருப்பவர் 'ப்ரஹ்ம வித்வரிஷ்டர்' எனப்படுகிறார். அவர்தான் ஏழாவது 'துர்யகா' என்ற பூமிகையில் இருப்பவர். இந்த நான்குவித ப்ரஹ்ம வித்துக்களுக்கும் ப்ரஹ்மஸாக்ஷாத்காரம் ஏற்பட்டிருந்தபோதிலும் ஸமாதியிலுள்ள உறுதியின் தாரதம்யத்தால் அவர்களுக்குள் வித்தியாஸம் ஏற்படுகிறது. (948)

(அ) இங்கு கூறப்பட்ட ஆறு பூமிகைகளையும் வேறொரு விதத்தில் பத்து நிலைகளாகப் பிரித்துக்காட்டுகிறார்:—

इदं ममेति सर्वेषु दृश्यभावेषु अभावना ।
जाग्रज्जाग्रत् इति प्राहुः महान्तो ब्रह्मवित्तमाः ॥ ९४९ ॥

இதம் மமேதி ஸர்வேஷு த்ருச்யபாவேஷ்வபாவநா I
ஜாக்ரத் ஜாக்ரதிதி ப்ராஹுர் மஹாந்தோ
ப்ரஹ்மவித்தமா: II

दृश्यभावेषु सर्वेषु-அறியப்படும் வஸ்துக்கள் எல்லாவற்றிலும், इदं ममेति-இது என்னுடையது என்று, अभावना-எண்ணாமலிருப்பது जाग्रज्जाग्रत् इति-ஜாகராவஸ்தையில் ஜாகரம், (விழித்துக்கொண்டிருக்கும் நிலை) என்று, ब्रह्मवित्तमाः-ப்ரஹ்மத்தை அறிந்தவர்களில் சிறந்தவர்களான, महान्तः-பெரியோர்கள், प्राहुः-சொல்கிறார்கள்.

அறியப்படும் எல்லா பதார்த்தங்களிலும் "நான், என்னுடையது" என்று எண்ணாமலிருப்பது "ஜாக்ரத் ஜாக்ரத்" என்று ப்ரஹ்மவித் ச்ரேஷ்டர்களாகிய பெரியோர்கள் சொல்கிறார்கள். (949)

विदित्वा सच्चिदानन्दमयीं दृश्यपरम्पराम् ।
नामरूपपरित्यागो जाग्रत्स्वप्नः समीर्यते ॥ ९५० ॥

விதித்வா ஸச்சிதாநந்தமயீம் த்ருச்ய பரம்பராம் ।
நாம ரூப பரித்யாகோ ஜாக்ரத் ஸ்வப்ன: ஸமீர்யதே ॥

**दृश्यपरंपरां**- வரிசையாகத் தோன்றும் பதார்த்தங்கள் எல்லாவற்றையும், **सच्चिदानन्दमयीं**-ஸச்சிதாநந்த ப்ரஹ்ம ஸ்வரூபமாக, **विदित्वा**-அறிந்து (அந்த த்ருச்யங்களில் தோன்றும்), **नामरूपपरित्यागः** - பெயரையும் உருவத்தையும் விட்டுவிடுவது, **जाग्रत्स्वप्नः**- ஜாக்ரத் ஸ்வப்னமாக (ஜாகராவஸ்தையில் ஸ்வப்னமாக), **समीर्यते**-சொல்லப் படுகிறது.

திருச்யமான பதார்த்த பரம்பரையை (எல்லா பதார்த் தங்களையும்) ஸத், சித், ஆனந்தமாகவே அறிந்துகொண்டு அவைகளிலுள்ள நாமத்தையும் ரூபத்தையும் விட்டுவிடுவது "ஜாக்ரத் ஸ்வப்னம்" என்று சொல்லப்படுகிறது. (950)

परिपूर्णचिदाकाशे मयि बोधात्मतां विना ।
न किंचित् अन्यत् अस्ति इति जाग्रत्सुप्तिः समीर्यते ॥ ९५१ ॥

பரிபூர்ண சிதாகாசே மயி போதாத்மதாம் விநா ।
ந கிஞ்சிதந்யதஸ்தீதி ஜாக்ரத் ஸுப்தி: ஸமீர்யதே ॥

**परिपूर्णचिदाकाशे**-எங்கும் நிறைந்த ஞானகாசமாயிருக்கும், **मयि**-என்னிடத்தில், **बोधात्मतां विना**-ஞான ஸ்வரூபமாயிருக்கும் தன்மையைத் தவிற, **अन्यत् किंचित्**-வேறு ஒன்றும், **नास्ति** இல்லை, **इति**-என்ற பாவனை, **जाग्रत्सुप्तिः** - ஜாக்ரத் ஸுப்தியாக (ஜாக்ரதவஸ்தையில் நல்ல தூக்கமாக, **समीर्यते**- சொல்லப்படுகிறது.

எங்கும் நிறைந்து சிதாகாசமாயிருக்கும் என்னிடத்தில் ஞானஸ்வரூபமாய் இருப்பதைத்தவிர வேறு எதுவும் கிடையாது என்பது "ஜாக்ரத் ஸுப்தி" எனப்படுகிறது.

मूलाज्ञानविनाशेन कारणाभासचेष्टितैः ।
बन्धो न मेऽतिस्वल्पोऽपि स्वप्नजाग्रत् इतीर्यते ॥ ९५२ ॥

மூலாஞாந விநாசேந காரணாபாஸ சேஷ்டிதை: ।
பந்தோ ந மேதிஸ்வல்போபி ஸ்வப்ன ஜாக்ரதிதீர்யதே॥

मूलाज्ञानविनाशेन-மூலாக்ஞானம் நாசமடைந்து விட்டதால், कारणाभासचेष्टितैः-காரணமான அக்ஞானம், சிதாபாஸன் இவர்களின் வியாபாரங்களால், मे-எனக்கு, अतिस्वल्पोपि-மிகக் கொஞ்சம்கூட, बन्धः-பந்தம், न-இல்லை, इति-என்பது, स्वप्नजाग्रत् ஸ்வப்ன ஜாக்ரத்தாக (ஸ்வப்னத்தில் விழிப்பாக) ईर्यते சொல்லப்படுகிறது.

எல்லாவற்றிற்கும் மூலமான அக்ஞானம் நாசமடைந்து விட்டபடியால், காரணமாயிருக்கும் அக்ஞானத்தின் சேஷ்டைகளாலோ அதில் ப்ரதிபிம்பிக்கும் சிதாபாஸனுடைய சேஷ்டைகளாலோ எனக்கு வெகு சிறிதளவுகூட பந்தம் (கட்டு) கிடையாதென்பது ''ஸ்வப்ன ஜாக்ரத்'' என்று சொல்லப்படுகிறது. (952)

कारणाज्ञाननाशात् यत् द्रष्टृदर्शनदृश्यता ।
न कार्यं अस्ति तज्ज्ञानं स्वप्नस्वप्नः समीर्यते ॥ ९५३ ॥

காரணாக்ஞாந நாசாத் யத் த்ரஷ்ட்ரு தர்சந த்ருச்யதா ।
ந கார்யமஸ்தி தத் ஞாநம் ஸ்வப்ந ஸ்வப்ந: ஸமீர்யதே॥

कारणाज्ञाननाशात्-காரணமான அக்ஞானம் நாசமாகி விட்டபடியால், द्रष्टृदर्शनदृश्यता-பார்க்கிறவன், பார்வை, பார்க்கப்படும் வஸ்து இவைகள் ரூபமான, कार्यं-காரியம், नास्ति-இல்லை, इति यत्-என்பது எதுவோ तत् ज्ञानं-அந்த ஞானம், स्वप्नस्वप्नः-ஸ்வப்னஸ்வப்னமாக, समीर्यते-சொல்லப்படுகிறது.

காரணமான அக்ஞானம் நாசத்தையடைந்துவிட்டபடியால், அதன் காரியமான பார்க்கிறவன் பார்வை பார்க்கப்படும் வஸ்து என்ற தன்மை கிடையாது என்ற

ஞானம் "ஸ்வப்ன ஸ்வப்னம்" என்று சொல்லப் படுகிறது. (953)

अतिसूक्ष्मविमर्शेन स्वधीवृत्तिः अचञ्चला ।
विलीयते यदा बोधे स्वप्नसुप्तिः इतीर्यते ॥ ९५४ ॥

அதிஸூக்ஷ்ம விமர்சேந ஸ்வதீ வ்ருத்திரசஞ்சலா ।
விலீயதே யதா போதே ஸ்வப்ன ஸுப்திரிதீர்யதே ॥

अतिसूक्ष्मविमर्शेन-மிகவும் ஸூக்ஷ்மமாக விசாரம் செய்வதால், स्वधीवृत्तिः தன் மனோவிருத்தி, अचञ्चला-சலனமற்றதாகி, यदा-எப்பொழுது, बोधे-ஞான ஸ்வரூபத்தில், विलीयते-மறைந்துவிடுகிறதோ (அப்பொழுது), स्वप्नसुप्तिः इति-ஸ்வப்னத்தில் ஸுஷுப்தி என்று, ईर्यते-சொல்லப்படுகிறது.

வெகு ஸூக்ஷ்மமாக விமர்சனம் செய்வதால் தன்னுடைய புத்திவிருத்தி அசைவற்று அறிவு ஸ்வரூபத்திலேயே எப்பொழுது அடங்கிவிடுகிறதோ அப்பொழுது "ஸ்வப்ன ஸுப்தி" எனப்படுகிறது. (954)

चिन्मयाकारमतिभिः धीवृत्तिप्रसरैः गतः ।
आनन्दानुभवो विद्वन् सुप्तिजाग्रत् इतीर्यते ॥ ९५५ ॥

சிந்மயாகாரமதிபிர் தீவ்ருத்தி ப்ரஸரைர் கத: ।
ஆநந்தாநுபவோ வித்வன் ஸுப்தி ஜாக்ரதிதீர்யதே ॥

विद्वन् - அறிவுள்ளவனே! चिन्मयाकारमतिभिः-ஞான ஸ்வரூப வடிவத்தையே எண்ணுகின்ற, धीवृत्तिप्रसरैः-புத்தி விருத்திகள் கிளம்புவதால், गतः - வருகிற, आनन्दानुभवः-ஆனந்தத்தின் அநுபவம், सुप्तिजाग्रत् इति-ஸுப்திஜாக்ரத் (தூக்கத்தில் விழிப்பு) என்று, ईर्यते-சொல்லப்படுகிறது.

ஹே வித்வன், சின்மயாகாரமான எண்ணங்களுடன் கூடிய புத்திவ்ருத்தியின் வெளிக்கிளம்புவதிலிருந்து அறியப்படும் ஆனந்தத்தின் அனுபவம் "ஸுப்தி ஜாக்ரத்" எனப்படுகிறது.

वृत्तौ चिरानुभूतान्तरानन्दानुभवस्थितौ ।
समात्मतां यो याति एष सुप्तिस्वप्न इतीर्यते ॥ ९५६ ॥

வ்ருத்தெள சிராநுபூதாந்தராநந்தாநுபவ ஸ்திதெள ।
ஸமாத்மதாம் யோ யாத்யேஷ ஸுப்தி ஸ்வப்ன
இதீர்யதே ॥

वृत्तौ - மனோவிருத்தியானது, चिरानुभूत-வெகுகாலம் அனுபவிக்கப்பட்ட, अन्तरानन्दानुभव - ஆத்மாநந்தானு பவத்தில், स्थितौ-நிலைத்திருக்கும்பொழுது, समात्मतां- ஸமமாயிருக்கும் தன்மையை, यः याति-அடைகிறது எதுவோ, एषः-இது, सुप्तिस्वप्नः-ஸுப்தி ஸ்வப்னம் (ஸுஷுப்தியில் ஸ்வப்னம்), इति-என்று, ईर्यते- சொல்லப்படுகிறது.

விருத்தியானது வெகுகாலம் அனுபவிக்கப்பட்ட உள் ஆனந்தத்தின் அனுபவத்திலேயே நிலைத்திருந்து ஸமமான தன்மையை அடைவது எதுவோ அது "ஸுதுதி ஸ்வப்னம்" எனப்படுகிறது. (956)

दृश्यधीवृत्तिरेतस्य केवलीभावभावनात् ।
परं बोधैकतावाप्तिः सुप्तिसुप्तिः इतीर्यते ॥ ९५७ ॥

த்ருச்ய தீவ்ருத்திரேதஸ்ய கேவலீபாவ பாவநாத் ।
பரம் போதைகதாவாப்தி: ஸுப்தி ஸுப்திரிதீர்யதே ॥

एतस्य - இவனுடைய, दृश्यधीवृत्तिः - த்ருச்யவஸ்து விஷயமான மனோவிருத்தி, केवलीभावभावनात् - தனித் திருக்கும் தன்மையின் பாவனையால், परं-மேலான, बोधैकतावाप्तिः-ஞானஸ்வரூபத்துடன் ஐக்யத்தையடைவது सुप्तिसुप्तिः-தூக்கத்தில் துக்கம், इति-என்று, ईर्यते-சொல்லப் படுகிறது.

திருச்ய விஷயமான மனோவிருத்திகளில் திருச்யங்களெல் லாம் மறைந்து தான் மட்டும் தனித்திருப்பதாக பாவனை செய்வதால் மேலான ஞானஸ்வரூபத்துடன் ஒன்றாகக்கலந்து விடுவது ஸுப்திஸுப்தியாகச் சொல்லப்படுகிறது. (957)

(அ) இவ்வாறு ஜாக்ரத், ஸ்வப்னம் ஸுஷுப்தி என்ற அவஸ்தைகளையொட்டி ஒன்பது நிலைகளை விளக்கிவிட்டு இந்த அவஸ்தைகளுக்கு அதீதமான துரீய நிலையை 10-வது நிலையாகக் காட்டுகிறார்:—

परब्रह्मवत् आभाति निर्विकारा एकरूपिणी ।
सर्वावस्थासु धारैका तुर्याख्या परिकीर्तिता ।
इत्यवस्थासमुल्लासं विमृशन् मुच्यते सुखी ॥ ९५८ ॥

பரப்ரஹ்மவதாபாதி நிர்விகாரைக ரூபிணீ ।
ஸர்வாவஸ்தாஸு தாரைகா துர்யாக்யா பரிகீர்த்திதா ।
இத்யவஸ்தா ஸமுல்லாஸம் விம்ருசன் முச்யதே ஸுகீ ॥

**परब्रह्मवत्**–பரப்ரஹ்மம்போல், **निर्विकारा**–மாறுதலற்றதும், **सर्वावस्थासु**–எல்லா அவஸ்தைகளிலும், **एकरूपिणी**–ஒரே ரூபமாயும், **एका धारा**–ஒரே தாரையாக (இடைவிடாததாக), **आभाति**-பிரகாசிக்கிறது (எதுவோ அது), **तुर्याख्या** துர்யம் என்ற பெயருள்ளதாக, **परिकीर्तिता**–சொல்லப்பட்டது. **इति**–இவ்வாறான, **अवस्थासमुल्लासं**–அவஸ்தைகளின் தோற்றத்தை, **विमृशन्**–விசாரித்துக் கொண்டிருப்பவன், **सुखी**-ஸுகமுள்ளவனாக, **मुच्यते**–விடுபடுகிறான்.

ஒரே தாரையாக (இடைவிடாமல்) எல்லா நிலைகளிலும் ஒரே ரூபத்துடன் விகாரத்தையடையாமல் பரப்ரஹ்மத்தைப் போல் பிரகாசிக்கிற நிலை துர்யம் என்ற பெயருள்ளது. இவ்விதமாக உள்ள நிலைகளின் தோற்றங்களைப்பற்றி விமர்சனம் செய்கிறவன் ஸுகத்துடன் ஸம்ஸாரத்திலிருந்து விடுபடுகிறான்.

[இதுவரை சொன்ன பத்துவித நிலைகளும் அனுபவத்தினாலேயே நன்கு அறிந்துகொள்ள வேண்டியதாயிருப்பதால் அவைகளை வார்த்தைகளால் வர்ணிக்கமுடியாது. வர்ணிக்க முடியுமென்று வைத்துக்கொண்டாலும் அந்த நிலைகளை அனுபவித்த அனுபவசாலிகள்தான் வர்ணிக்கவேண்டும். அவர்கள் வர்ணித்தாலும் அவ்வித அனுபவமில்லாதவர்களுக்கு வெறும் வார்த்தைகளாகவேதான் தோன்றும். ஆகையால்



இவ்விஷயத்தை இங்கு விஸ்தரிப்பது ஸாத்தியமுமில்லை, பிரயோஜனமும் ஏற்படாது]. (958)

(அ) சுபேச்சா முதலான ஏழு பூமிகைகளையே ஜாக்ரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி என்ற மூன்று அவஸ்தைகளாகக் காட்டுகிறார் :—

शुभेच्छादित्रयं भूमिभेदाभेदयुतं स्मृतम् ।
यथावद्भेदबुद्ध्येदं जगत् जाग्रत् इतीर्यते ॥ ९५९ ॥

சுபேச்சாதி த்ரயம் பூமி பேதாபேத யுதம் ஸ்ம்ருதம் ।
யதாவத் பேதபுத்த்யேதம் ஜகத் ஜாக்ரதிதீர்யதே ॥

शुभेच्छादित्रयं சுபேச்சை முதலான மூன்றும், भूमिभेदाभेदयुतं-வேற்றுமை, ஐக்யம் இவ்விரண்டும் கலந்த பூமியாக, स्मृतं-கருதப்பட்டது. यथावद्भेदबुद्ध्या-உள்ளபடியான பேதத்தையறிவதால், इदं जगत् இந்த பூமி, जाग्रत्-ஜாக்ரத், इति-என்று, ईर्यते-சொல்லப்படுகிறது.

(ஏழு பூமிகைகளில்) சுபேச்சா முதலான மூன்றும் (சுபேச்சா, விசாரணை, தநுமாநஸீ என்பவை) பேதமும் அபேதமும் கலந்திருக்கும் பூமிகை என்று சொல்லப்பட்டிருக்கிறது. (உலகத்தில் இருக்கும்படியான பேதத்தையறிவதால் இந்த பூமிகை ஜாக்ரத் என்று சொல்லப்படுகிறது, (959)

(அ) ஸாதனமாயிருக்கிற முதல் மூன்று பூமிகைகளில் ஜகத்தும் வேறாகத் தோன்றிக்கொண்டிருக்கும்; அது வாஸ்தவமில்லை, ப்ரஹ்மத்தைவிட்டு வேறாயிருப்பதில்லையென்று அபேதமும் தோன்றிக்கொண்டேயிருக்கும். விழிப்பு நிலையில்போல் இங்கும் வேற்றுமை தோன்றுவதால் இம்மூன்று பூமிகைகளையும் ஜாக்ரத் என்று சொல்லி அதற்குள் ஜாக்ரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி என்று மூன்று பிரிவுகள் காட்டப்பட்டன. நான்காவதான ஸத்வாபத்தியென்ற ஸாதாரண பிரஹ்மவித்தின் பூமிகையில் ஜகத் ஸ்வப்னம் போலவே தோன்றும். அதற்குள்ளும் ஜாக்ரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி, என்ற மூன்று நிலைகள் காட்டப்பட்டன. இவ்விஷயத்தை சுருக்கமாக அடுத்த சுலோகத்தில் குறிப்பிடுகிறார்:—

अद्वैते स्थैर्यमायाते द्वैते च प्रशमं गते ।
पश्यन्ति स्वप्नवत् लोकं तुर्यभूमिसुयोगतः ॥ ९६० ॥

அத்வைதே ஸ்தைர்யமாயாதே த்வைதே ச ப்ரசமம்
கதே ।
பச்யந்தி ஸ்வப்நவத் லோகம் துர்ய பூமி ஸுயோகத: ॥

अद्वैते-இரண்டற்ற (ஒன்ருன) ப்ரஹ்மதத்வம், स्थैर्यं आयाते-(மனதில்) ஸ்திரப்பட்டு, द्वैते च-வேற்றுமை ஞானமும், प्रशमं गते-அடங்கினபொழுது, तुर्यभूमिसुयोगतः-நான்காவது பூமிகையுடன் நன்கு சேர்ந்திருப்பதால், लोकं-பிரபஞ்சத்தை, स्वप्नवत्-ஸ்வப்னம்போல், पश्यन्ति-பார்க்கிருர்கள்.

அத்வைதமான பிரஹ்மத்தில் ஸ்திரமாயிருக்கும் தன்மை யேற்பட்டு த்வைதமும் அடங்கினபிறகு, ஸத்வாபத்தி என்ற நான்காவது பூமிகையில் நன்கு ஸம்பந்தப்படுவதால் உலகத்தை ஸ்வப்னம்போல் பார்க்கிருர்கள். (960)

(அ) ஸுஷுப்திக்குள் ஜாக்ரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி என்று சொன்ன மூன்று நிலைகளும் அஸம்ஸக்தி என்ற 5வது பூமிகையை அடைந்த ப்ரஹ்மவித்வரன், பதார்த்தாபாவனு என்ற 6வது பூமிகையையடைந்த பிரஹ்மவித்வரீயான் இவர் களுடையது என்று சொல்கிருர்:—

पञ्चमीं भूमिं आरुह्य सुषुप्तिपदनामिकाम् ।
शान्ताशेषविशेषांशः तिष्ठेत् अद्वैतमात्रके ॥ ९६१ ॥

பஞ்சமீம் பூமிமாருஹ்ய ஸுஷுப்திபத நாமிகாம் ।
சாந்தாசேஷ விசேஷாம்சஸ் திஷ்டேதத்வைத
மாத்ரகே ॥

सुषुप्तिपदनामिकां-ஸுஷுப்தி நிலையைக் குறிக்கிற, पञ्चमीं भूमिं-அஸம்ஸக்தி என்ற 5-வது பூமிகையை, आरुह्य-அடைந்து, शान्ताशेषविशेषांशः-தனித்தனிச் சிறப்பு அம்சங்களெல்லாம் அடங்கினவராக, अद्वैतमात्रके-

இரண்டற்ற ஒரே தத்வமான ப்ரஹ்மத்திலேயே, तिष्ठेत्-இருப்பான்.

ஸுஷுப்திநிலை என்ற பெயருள்ள அஸம்ஸக்தி என்ற 5வது பூமிகையில் ஏறி, பாக்கியன்னியில் விசேஷாம்சங்கள் (பிரித்துக் காட்டக்கூடிய அம்சங்கள்) யாவும் சாந்தமாகி அத்வைதம் ஒன்றிலேயே இருப்பான். (961)

अन्तर्मुखतया नित्यं षष्ठीं भूमिं उपाश्रितः ।
परिश्रान्ततया गाढनिद्रालुरिव लक्ष्यते ॥ ९६२ ॥

அந்தர்முகதயா நித்யம் ஷஷ்டீம் பூமிமுபாச்ரித: ।
பரிச்ராந்ததயா காட நித்ராளுரிவ லக்ஷ்யதே ॥

षष्ठीं भूमिं-பதார்த்தாபாவனை என்ற 6வது பூமியை, उपाश्रितः-அடைந்தவன், नित्यं- எப்போதும், अन्तर्मुखतया- உள்ளேயே மனதைச் செலுத்தினவனாக இருப்பதால், परिश्रान्ततया மிகவும் களைப்படைந்த தன்மையால், गाढ-निद्रालुरिव-நன்றாகத் தூங்க நினைப்பவன்போல், लक्ष्यते-காணப்படுகிறான்.

6வது பூமிகையை ஆசிரயித்து எப்பொழுதும் அந்தர்முகமாகவேயிருக்கிறபடியால் மிகவும் சிரமமடைந்த காரணத்தினால் நன்கு தூங்க நினைக்கிறவன்போல் (விழித்துக்கொண்ட ஸமயத்தில்) காணப்படுவான். (962)

कुर्वन् अभ्यासं एतस्यां भूम्यां सम्यक् विवासनः ।
तुर्यावस्थां सप्तभूमिं क्रमात् प्राप्नोति योगिराट् ॥ ९६३ ॥

குர்வன்னப்யாஸமேதஸ்யாம் பூம்யாம் ஸம்யக்
விவாஸந: ।
துர்யாவஸ்தாம் ஸப்தபூமிம் க்ரமாத் ப்ராப்நோதி
யோகிராட் ।

एतस्यां भूम्यां-இந்த 6-வது பூமிகையில், सम्यक्-நன்றாக, अभ्यासं कुर्वन्-அப்யாஸத்தைச் செய்துகொண்டு, विवासनः-வாஸனைகள் விலகினவனான, योगिराट्-யோகி

களில் சிறந்தவன், क्रमात् முறையாக, सप्तभूमिं-ஏழாவது பூமிகையான, तुर्यावस्थां-துர்யகா என்ற நிலையை, प्राप्नोति-அடைகிறான்.

இந்த 6-வது பூமிகையில் நன்கு அப்யாஸம் செய்கிற யோகி சிரேஷ்டர் ஸகலவித வாஸனைகளுமற்று 7வது பூமிகை யான துர்யகா என்ற நிலையை (மூன்று அவஸ்தைகளையும் தாண்டின நான்காவது நிலையை) கிரமமாக அடைந்து விடுவார். (963)

विदेहमुक्तिरेवात्र तुर्यातीतदशोच्यते ॥ ९६४ ॥

விதேஹமுக்திரேவாத்ர துர்யாதீத தசோச்யதே ||

विदेहमुक्तिरेव-விதேஹமுக்திதான், अत्र இங்கு, तुर्यातीतदशा-துர்யத்தையும் தாண்டின நிலையாக, उच्यते-சொல்லப்படுகிறது.

விதேஹ முக்திதான் துர்யாதீத தசையாக, (நான்காவது நிலையையும் தாண்டின தசையாக) கூறப்படுகிறது. (964)

यत्र नासत् न सच्चापि नाहं नाप्यनहंकृतिः ।
केवलं क्षीणमननः आस्तेऽद्वैतेऽतिनिर्भयः ॥ ९६५ ॥

யத்ர நாஸத் ந ஸச்சாபி நாஹம் நாப்யநஹங்க்ருதி: |
கேவலம் க்ஷீணமனன ஆஸ்தேऽத்வைதேதிநிர்பய: |

यत्र-எந்த நிலையில், न असत् அஸத்து இல்லையோ, न सच्चापि-ஸத்தும் இல்லையோ, न अहं-அஹங்காரம் இல்லையோ, नापि अनहंकृतिः அஹங்காரமில்லாத் தன்மை யும் இல்லையோ, केवलं क्षीणमननः-மனனம் எல்லாம் நீங்கி, अतिनिर्भयः-மிகவும் பயமற்றவனாக, अद्वैते-இரண்டற்ற ப்ரஹ்மதத்வத்தில், आस्ते-இருக்கிறானே.

எந்த நிலையில் அஸத் (இல்லாதது என்பது) கிடையாதோ, ஸத் (இருக்கிறது என்பது) கூடக் கிடையாதோ, 'நான்' என்பது கிடையாதோ, "நான் இல்லை" என்பதும் கிடை யாதோ, சுத்தமாய் எல்லா மனனமும் நின்றுவிட்டதாய்,

நன்கு பயமற்று, அத்வைதத்தில் இருக்கிறுனே (எவனிடம் காரணம், கார்யம், கர்த்ருத்வம், அகர்த்ருத்வம் ஒன்றும் தோன்ருது, மனோவியாபாரமே இருக்காதோ அவன் விதேஹ முக்தன். (965)

अन्तःशून्यो बहिःशून्यः शून्यकुम्भ इवाम्बरे ।
अन्तःपूर्णो बहिःपूर्णः पूर्णकुम्भ इवार्णवे ॥ ९६६ ॥

அந்த:சூந்யோ பஹி: சூந்ய: சூன்ய கும்ப இவாம்பரே ।
அந்த: பூர்ணே பஹி: பூர்ண: பூர்ண கும்ப இவார்ணவே॥

अम्बरे-ஆகாயத்தில், शून्यकुम्भ इव-உள்ளே ஒன்றுமில்லாத குடம்போல, अन्तः शून्यः-உள்ளே ஒன்றுமில்லாதவனுயும், बहिः शून्यः-வெளியிலும் ஒன்றுமில்லாதவனுயும். अर्णवे ஸமுத்ரத்தில், पूर्णकुम्भ इव-ஜலம் நிறைந்த குடம் போல, अन्तः पूर्णः-உள்ளே நிறைந்தவனுயும், बहिः पूर्णः-வெளியிலும் நிறைந்தவனுயும் இருக்கிறுனே)

ஆகாச மத்தியிலுள்ள காலியான குடம்போல உள்ளேயும் சூன்யமாகவும், வெளியிலும் சூன்யமாகவும், ஸமுத்திரத்தின் நடுவிலுள்ள நிறைகுடம்போல, உள்ளேயும் நிறைந்தவனுகவும், வெளியிலும், நிறைந்தவனுகவும் இருக்கிறுனே அது விதேஹமுக்தி. (966)

(அ) ஏழு பூமிகைகளில் முதல் மூன்று பூமிகைகளேயும் ஜாக்ரத் என்ற முதலாவது அவஸ்தையாகவும் 4வது பூமிகையை ஸ்வப்னம் என்ற இரண்டாவது அவஸ்தையாகவும் 5, 6, பூமிகைகளை ஸுஷுப்தி என்ற மூன்ருவது அவஸ்தையாகவும் காட்டி மூன்று அவஸ்தைகளேயும் தாண்டின 7வது பூமிகைக்கு துர்யகா (நான்காவது) என்றே பெயர் கொடுக்கப்பட்டது. ஒவ்வொரு அவஸ்தையிலும் மற்ற அவஸ்தைகளின் ஸம்பந்தத்தால் ($3 \times 3 = 9$) ஆறு பூமிகைகளிலும் ஒன்பது நிலைகளைக்காட்டி பத்தாவது நிலைக்கு துர்யம் என்றே பெயர் கொடுக்கப்பட்டது. துர்யகா என்ற ஏழாவது பூமிகையையும் (பத்தாவதான துர்ய நிலையையும்) தாண்டிச் சென்றவன் துர்யாதீதன் இவனே விதேஹமுக்தனுவான். இவ்வாறு ஜீவன் முக்தனுடைய அனுபவத்திலுள்ள தாரதம்யத்தை எடுத்துக்கூறி

இவன் ஜீவித்திருக்கும்போதே தேஹ ஸம்பந்தமில்லாமலிருப்ப தால் விதேஹ முக்தி நிலையையும் அடைகிறான் என்று காட்டி இந்த விதேஹ முக்தி நிலையை அடைகிறவன் துர்யகா என்ற ஏழாவது பூமிகைக்கும் மேலே போனவனென்று கூறினார். இனி ஜீவன்முக்தன் எப்படி இருப்பான் என்பதையும் விதேஹ முக்தன் எப்படி இருப்பான் என்பதையும் முறையே விரிவாக வர்ணிக்கிறார் :—

यथास्थितमिदं सर्वं व्यवहारवतोपि च ।
अस्तं गतं स्थितं व्योम स जीवन्मुक्त उच्यते ॥ ९६७ ॥

யதாஸ்திதமிதம் ஸர்வம் வ்யவஹாரவதோபி ச ।
அஸ்தம் கதம் ஸ்திதம் வ்யோம ஸ ஜீவன்முக்த
உச்யதே ॥

व्यवहारवतोपि- உலக வியவஹாரத்துடன் கூடியவனா யிருந்தாலும் (எவனுக்கு), यथास्थितं-இருக்கிறபடியுள்ள, इदं सर्वं இது எல்லாம், अस्तं गतं-மறைந்துபோய், व्योम- ஆகாசமாக, स्थितं-இருக்கிறதோ, सः-அவன், जीवन्मुक्तः- ஜீவன் முக்தனாக, उच्यते-சொல்லப்படுகிறான்.

உலகத்தில் வியவஹாரம் செய்துகொண்டிருந்தாலும் எவனுக்கு இருக்கிறபடியுள்ள இந்த ஜகத் எல்லாம் இல்லாமல் போய் ஆகாசமாக ப்ரஹ்மமாக இருக்கிறதோ, அவன் ஜீவன் முக்தன் என்று சொல்லப்படுகிறான். (967)

नोदेति नास्तमायाति सुखे दुःखे मनःप्रभा ।
यथाप्राप्तस्थितिः यस्य स जीवन्मुक्त उच्यते ॥ ९६८ ॥

நோதேதி நாஸ்தமாயாதி ஸுகே துக்கே மந: ப்ரபா ।
யதாப்ராப்தஸ்திதி: யஸ்ய ஸ ஜீவன்முக்த உச்யதே ॥

यस्य-எவனுக்கு, सुखे-ஸுகத்திலும், दुःखे-துக்கத் திலும், मनःप्रभा-மனோவிருத்தி, न उदेति-தோன்றுவது மில்லை, न अस्तं आयाति-மறைவதுமில்லையோ, यथाप्राप्तस्थितिः- எப்படி ஏற்பட்டதோ அப்படியே இருக்கிறதோ, सः-

அவன், जीवन्मुक्त:-ஜீவன்முக்தனுக, उच्यते-சொல்லப் படுகிருன்.

ஸுகம் ஏற்பட்டபோதும் துக்கம் ஏற்பட்டபோதும் எவனுக்கு மனதில் விருத்தி புதிதாக தோன்றுவதுமில்லை மறைவதுமில்லையோ எப்படி ஏற்படுகிறதோ அப்படியே இருக்கிறதோ அவன் ஜீவன் முக்தன் என்று சொல்லப் படுகிருன். (968)

यो जागर्ति सुषुप्तिस्थो यस्य जाग्रत् न विद्यते ।

यस्य निर्वासनो बोधः स जीवन्मुक्त उच्यते ॥ ९६९ ॥

யோ ஜாகர்தி ஸுஷுப்திஸ்தோ யஸ்ய ஜாக்ரத்
ந வித்யதே ।
யஸ்ய நிர்வாஸநோ போத: ஸ ஜீவன்முக்த உச்யதே ॥

यः-எவன், सुषुप्तिस्थः-தூக்கத்தில் இருந்துகொண்டு, जागर्ति- விழித்துக்கொண்டிருக்கிருனே, यस्य-எவனுக்கு, जाग्रत्-விழிப்பு நிலை, न विद्यते-இல்லையோ, यस्य-எவனுடைய, बोधः-அறிவு, निर्वासनः-வாஸனைகளற்றதோ, सः-அவன், जीवन्मुक्तः-ஜீவன் முக்தனுக, उच्यते-சொல்லப் படுகிருன்.

எவன் உலக ரீதியாய் தூக்கத்தில் இருந்துகொண்டு வாஸ்தவமாய் விழித்துக்கொண்டிருக்கிருனே, எவனுக்கு உலக ரீதியாய் விழிப்பு கிடையாதோ, எவனுடைய அறிவு எவ்வித வாஸனையுமற்றதோ, அவன் ஜீவன் முக்தன் என்று சொல்லப் படுகிருன்.

ஜீவன் முக்தனுக்கு உலக விஷயம் ஒன்றும் தோன்றுததால் அவன் எப்பொழுதும் தூங்கிக்கொண்டிருக்கிருன் உலக விஷயத்தில் விழிப்பு நிலை அவனுக்கு இல்லை. ஆனாலும் ப்ரஹ்ம ஸ்வரூபம் எப்பொழுதும் பிரகாசித்துக்கொண்டிருப்பதால் அவன் விழித்துக்கொண்டிருக்கிருன்.

या निशा सर्वभूतानां तस्यां जागर्ति संयमी ।

यस्यां जाग्रति भूतानि सा निशा पश्यते मुनेः ॥

என்று கீதையில் பகவான் கூறுகிருர்.

உலகில் எதை அறிந்தாலும் அதிலிருந்து ஸம்ஸ்காரம் ஏற்படுவதில்லை. (969)

रागद्वेषभयादीनां अनुरूपं चरन्नपि ।
योऽन्तः व्योमवत् अत्यच्छः स जीवन्मुक्त उच्यते ॥ ९७० ॥

ராக த்வேஷ பயாதீநாம் அநுரூபம் சரன்னபி ।
யோந்தர் வ்யோமவதத்யச்ச: ஸ ஜீவன்முக்த உச்யதே ॥

रागद्वेषभयादीनां விருப்பு, வெறுப்பு, பயம் இவைகளுக்கு, अनुरूपं-தக்கவாறு, चरन्नपि-நடந்துகொண்டிருந்தாலும், यः-எவன், अन्तः உள்ளே, व्योमवत्-ஆகாசம் போல், अत्यच्छः மிகவும் சுத்தமாயிருக்கிருனே, सः-அவன், जीवन्मुक्तः-ஜீவன் முக்தனுக, उच्यते-சொல்லப் படுகிருன்.

விருப்பு, வெறுப்பு, பயம் முதலானதுகளுக்குத் தக்கபடி நடந்துகொள்கிறவனுயிருந்தாலும், எவன் மனதில் இவைகள் ஒன்றும் ஒட்டுவதில்லையோ, ஆகாசம்போல் அஸங்கமாகவும் சுத்தமாகவும் இருக்கிருனே அவன் ஜீவன் முக்தன் என்று சொல்லப்படுகிருன். (970)

यस्य नाहंकृतो भावो बुद्धिर्यस्य न लिप्यते ।
कुर्वतोऽकुर्वतो वापि स जीवन्मुक्त उच्यते ॥ ९७१ ॥

யஸ்ய நாஹங்க்ருதோ பாவோ புத்திர் யஸ்ய
ந லிப்யதே ।
குர்வதோऽகுர்வதோ வாபி ஸ ஜீவன்முக்த உச்யதே ॥

कुर्वतः-காரியம் செய்துகொண்டிருந்தாலும், अकुर्वतः वापि-காரியம் செய்யாமலிருந்தாலும், यस्य-எவனுக்கு, अहंकृतो भावः-நான் என்ற எண்ணம், न-ஏற்படுவதில்லையோ, यस्य-எவனுடைய, बुद्धिः-புத்தி, न लिप्यते-ஸம்பந்தப்படுகிறதில்லையோ, सः-அவன், जीवन्मुक्तः-ஜீவன்முக்தனுக, उच्यते-சொல்லப்படுகிருன்.

கார்யம் செய்துகொண்டிருந்தாலும் செய்யாமலிருந்தாலும் எவனுக்கு ‘நான்’ என்கிற எண்ணமில்லையோ, எவனுடைய புத்தியானது எவ்வித குண தோஷங்களினாலும் பாதிக்கப் படுகிறதில்லையோ, அவன் ஜீவன் முக்தன் என்று சொல்லப் படுகிறான். (971)

यः समस्तार्थजालेषु व्यवहार्यपि शीतलः ।
परार्थेष्विव पूर्णात्मा स जीवन्मुक्त उच्यते ॥ ९७२ ॥

ய: ஸமஸ்தார்த்த ஜாலேஷு வ்யவஹார்யபி சீதள: ।
பரார்த்தேஷ்விவ பூர்ணாத்மா ஸ ஜீவன்முக்த உச்யதே ॥

यः-எவன், समस्तार्थजालेषु-எல்லா விஷயங்களிலும், व्यवहार्यपि-வியவஹாரம் செய்தபோதிலும், परार्थेष्विव-பிறர் விஷயங்களில்போல், शीतलः-தாபமில்லாதவனாக, पूर्णात्मा-நிறைந்தவனாக இருக்கிறானோ, सः-அவன், जीवन्मुक्तः-ஜீவன்முக்தனாக, उच्यते-சொல்லப்படுகிறான்.

எவன் எல்லாவித விஷயங்களிலும் வியவஹாரம் செய்கிற வனாயிருந்தாலும் நிறைந்த ஸ்வபாவத்துடன், மற்றவர் களுடைய கார்யங்களில் போலவே, குளிர்ந்து (அவைகளினால் தாபம் ஏற்படாமல்) இருக்கிறானோ, அவன் ஜீவன்முக்தன் என்று சொல்லப்படுகிறான்.

உலகில் எல்லோருடனும் பழகிக்கொண்டிருந்தபோதிலும் பிறருக்கு ஏற்படும் ஸுக துக்கங்களால் பிறர் மனது பாதிக்கப் படுவதில்லை. இதுபோல் ஜீவன் முக்தனுக்கு ஆத்மாவைத் தவிர சரீரம் முதலான எல்லாமே அன்யமானபடியால் அவைகளால் தாபமடையாமல் எப்பொழுதும் சீதளமாயும் பூர்ணமாயும் இருக்கிறான். (972)

द्वैतवर्जितचिन्मात्रे पदे परमपावने ।
अक्षुब्धचित्तविश्रान्तः स जीवन्मुक्त उच्यते ॥ ९७३ ॥

த்வைத வர்ஜித சிந்மாத்ரே பதே பரமபாவநே ।
அக்ஷுப்த சித்த விச்ராந்த: ஸ ஜீவன்முக்த உச்யதே ।

द्वैतवर्जित-இரண்டற்ற, चिन्मात्रे-ஞானஸ்வரூபமான, परमपावने-மிகவும் பாவனமான, पदे स்தானத்தில், अक्षुब्धचित्तविश्रान्तः கலங்காத மனமுள்ளவனாக விச்ராந்தியடைந்த, सः-அவன், जीवन्मुक्तः ஜீவன்முக்தனாக, उच्यते-சொல்லப்படுகிறான்.

இரண்டற்ற ஞானஸ்வரூபமாகவேயிருப்பதும் சுத்தியைச் செய்வதில் மிகவும் மேலானதுமான ப்ரஹ்ம ஸ்வரூபத்தில் எவ்வித கலக்கமுமற்ற சித்தத்துடன் விச்ராந்தி அடைந்தவனாக இருக்கும் எவனோ, அவன் ஜீவன் முக்தன் என்று சொல்லப்படுகிறான். (973)

इदं जगत् अयं सोऽयं दृश्यजातं अवास्तवम् ।
यस्य चित्ते न स्फुरति स जीवन्मुक्त उच्यते ॥ ९७४ ॥

இதம் ஜகதயம் ஸோயம் த்ருச்ய ஜாதமவாஸ்தவம் ।
யஸ்ய சித்தே ந ஸ்புரதி ஸ ஜீவன் முக்த உச்யதே ॥

इदं-இந்த, जगत्-பிரபஞ்சம், अयं-இவன், सोऽयं-அவன் இவன் (இவ்வாறான), अवास्तवं-உண்மையில்லாத दृश्यजातं-அறியப்படும் பொருள் எல்லாம், यस्य-எவனுடைய, चित्ते-மனதில், न स्फुरति-தோன்றுவதில்லையோ सः-அவன், जीवन्मुक्तः-ஜீவன்முக்தனாக, उच्यते-சொல்லப்படுகிறான்.

"இந்த ஜகத், இவன், அவன் இவன்" இவ்வாறான வாஸ்தவமில்லாததாயும் பார்க்கப்படுவதாயுமுள்ளதெல்லாம் எவனுடைய சித்தத்தில் தோன்றுகிறதில்லையோ, அவன் ஜீவன் முக்தன் என்று சொல்லப்படுகிறான். (974)

चिदात्माऽहं परात्माऽहं निर्गुणोऽहं परात्परः ।
आत्ममात्रेण यः तिष्ठेत् स जीवन्मुक्त उच्यते ॥ ९७५ ॥

சிதாத்மாஹம் பராத்மாஹம் நிர்குணோஹம் பராத்பர: ।
ஆத்மமாத்ரேண யஸ்திஷ்டேத் ஸ ஜீவன்முக்த
உச்யதே ॥

अहं-நான், चिदात्मा-ஞானஸ்வரூபன், अहं-நான், परात्मा-மேலான ஆத்மா, अहं-நான், निर्गुणः-குணங்களற்றவன், परात् परः-மேலானதிற்கும் மேலானவன் (என்று), यः-எவன், आत्ममात्रेण-ஆத்மஸ்வரூபமாகவே, तिष्ठेत्-இருக்கிறனோ, सः-அவன், जीवन्मुक्तः-ஜீவன்முக்தனாக, उच्यते-சொல்லப்படுகிறன்.

"நான் ஞானஸ்வரூபன், நான் உத்தமமான ஆத்மா. நான் குணமற்றவன், மேலானதற்கெல்லாம் மேலாயிருப்பவன்" என்று எவன் ஆத்மஸ்வரூபமாக மாத்திரம் இருந்துவிடுகிறனோ, அவன் ஜீவன்முக்தன் என்று சொல்லப்படுகிறன். (975)

देहत्रयातिरिक्तोऽहं शुद्धचैतन्यं अस्म्यहम् ।
ब्रह्माहं इति यस्यान्तः स जीवन्मुक्त उच्यते ॥ ९७६ ॥

தேஹத்ரயாதிரிக்தோஹம் சுத்த சைதன்யமஸ்ம்யஹம் ।
ப்ரஹ்மாஹமிதி யஸ்யாந்த: ஸ ஜீவன் முக்த உச்யதே ॥

अहं-நான், देहत्रयातिरिक्तः-மூன்று சரீரங்களைக் காட்டிலும் வேறுபட்டவன், अहं-நான், शुद्धचैतन्यं-சுத்த சைதன்யமாக, अस्मि-இருக்கிறேன். अहं நான், ब्रह्म-ப்ரஹ்ம ஸ்வரூபம், इति-என்று, यस्य-எவனுக்கு, अन्तः-உள்ளே (ஞானம் இருக்கிறதோ), सः-அவன், जीवन्मुक्तः-ஜீவன்முக்தனாக, उच्यते சொல்லப்படுகிறன்.

"காரண சரீரம், ஸூக்ஷ்ம சரீரம், ஸ்தூலசரீரம் என்ற மூன்று சரீரங்களுக்கும் அப்பாலுள்ளவன் நான். சுத்த சைதன்யமாகவே நான் இருக்கிறேன். நான் பிரஹ்மமே" என்று எவனுக்கு உள்ளே ஞானம் இருக்கிறதோ, அவன் ஜீவன் முக்தன் என்று சொல்லப்படுகிறன். (976)

यस्य देहादिकं नास्ति यस्य ब्रह्मेति निश्चयः ।
परमानन्दपूर्णो यः स जीवन्मुक्त उच्यते ॥ ९७७ ॥

யஸ்ய தேஹாதிகம் நாஸ்தி யஸ்ய ப்ரஹ்மேதி நிச்சய: ।
பரமானந்த பூர்ணோ ய: ஸ ஜீவன் முக்த உச்யதே ॥

यस्य–எவனுக்கு, देहादिकं–தேஹம் முதலியவை, नास्ति–இல்லையோ, यस्य–எவனுக்கு, ब्रह्मेति–(நான்) ப்ரஹ்மம் என்ற, निश्चयः–தீர்மானம் (உள்ளதோ), यः–எவன், परमानन्दपूर्णः–மேலான ஆனந்தத்தால் நிறைந்தவனோ, सः–அவன், जीवन्मुक्तः ஜீவன்முக்தனுக, उच्यते–சொல்லப்படுகிருன்.

எவனுக்கு தேஹம், இந்திரியம் முதலியவை கிடையாதோ, (தேஹாதிகளில் 'என்னுடையது' என்ற அபிமானமில்லாததால் இவைகள் இருந்தாலும் பிறருடைய தேஹம்போல் இவனுடையதாக தேஹாதிகள் இல்லை) எவனுக்கு எந்த நிலையிலும் 'நான் ப்ரஹ்மம்' என்ற உறுதியான ஞானம் உள்ளதோ, இந்த ஞானமிருப்பதால் எவன் எப்பொழுதும் ப்ரஹ்மானந்த பூர்ணனுக இருக்கிருனே, அவன் ஜீவன் முக்தன். (977)

अहं ब्रह्मास्मि अहं ब्रह्मास्मि अहं ब्रह्मेति निश्चयः ।
चिदहं चिदहं चेति स जीवन्मुक्त उच्यते ॥ ९७८ ॥

அஹம் ப்ரஹ்மாஸ்மி அஹம் ப்ரஹ்மாஸ்மி
அஹம் ப்ரஹ்மேதி நிச்சய: ।
சிதஹம் சிதஹம் சேதி ஸ ஜீவன்முக்த உச்யதே ॥

अहं–நான், ब्रह्म अस्मि–ப்ரஹ்மமாக இருக்கிறேன், अहं–நான், ब्रह्म–ப்ரஹ்மமாக, अस्मि–இருக்கிறேன், अहं–நான், ब्रह्म–ப்ரஹ்மம், इति–என்றும், अहं–நான், चित्–ஞானஸ்வரூபம், अहं நான், चित्–ஞானஸ்வரூபம், इति च–என்றும், निश्चयः–நிச்சயம் (உள்ளதோ), सः–அவன், जीवन्मुक्तः–ஜீவன் முக்தனுக, उच्यते–சொல்லப்படுகிருன்.

நான் ப்ரஹ்மமாக இருக்கிறேன், நான் ப்ரஹ்மமாயிருக்கிறேன், நான் ப்ரஹ்மம் என்றும், நான் ஞானஸ்வரூபன் நான் ஞான ஸ்வரூபன் என்றும் எவனுக்கு நிச்சய ஞானம் உள்ளதோ அவன் ஜீவன் முக்தன் (இங்கு பலதடவை சொன்னது இந்த ஞானத்தின் உறுதியைக் காட்டுகிறது. (978)

अहं-நான், चिदात्मा-ஞானஸ்வரூபன், अहं-நான், परात्मा-மேலான ஆத்மா, अहं-நான், निर्गुणः-குணங்களற்றவன், परात् परः-மேலானதிற்கும் மேலானவன் (என்று), यः-எவன், आत्ममात्रेण-ஆத்மஸ்வரூபமாகவே, तिष्ठेत्-இருக்கிருனே, सः-அவன், जीवन्मुक्तः-ஜீவன்முக்தனுக, उच्यते-சொல்லப்படுகிருன்.

"நான் ஞானஸ்வரூபன், நான் உத்தமமான ஆத்மா. நான் குணமற்றவன், மேலானதற்கெல்லாம் மேலாயிருப்பவன்" என்று எவன் ஆத்மஸ்வரூபமாக மாத்திரம் இருந்துவிடுகிருனே, அவன் ஜீவன்முக்தன் என்று சொல்லப்படுகிருன். (975)

देहत्रयातिरिक्तोऽहं शुद्धचैतन्यं अस्म्यहम् ।
ब्रह्माहं इति यस्यान्तः स जीवन्मुक्त उच्यते ॥ ९७६ ॥

தேஹத்ரயாதிரிக்தோஹம் சுத்த சைதன்யமஸ்ம்யஹம் I
ப்ரஹ்மாஹமிதி யஸ்யாந்த: ஸ ஜீவன் முக்த உச்யதே II

अहं-நான், देहत्रयातिरिक्तः-மூன்று சரீரங்களைக் காட்டிலும் வேறுபட்டவன், अहं-நான், शुद्धचैतन्यं-சுத்த சைதன்யமாக, अस्मि-இருக்கிறேன். अहं நான், ब्रह्म-ப்ரஹ்ம ஸ்வரூபம், इति-என்று, यस्य-எவனுக்கு, अन्तः-உள்ளே (ஞானம் இருக்கிறதோ), सः-அவன், जीवन्मुक्तः-ஜீவன்முக்தனுக, उच्यते சொல்லப்படுகிருன்.

"காரண சரீரம், ஸூக்ஷ்ம சரீரம், ஸ்தூலசரீரம் என்ற மூன்று சரீரங்களுக்கும் அப்பாலுள்ளவன் நான். சுத்த சைதன்யமாகவே நான் இருக்கிறேன். நான் பிரஹ்மமே" என்று எவனுக்கு உள்ளே ஞானம் இருக்கிறதோ, அவன் ஜீவன் முக்தன் என்று சொல்லப்படுகிருன். (976)

यस्य देहादिकं नास्ति यस्य ब्रह्मेति निश्चयः ।
परमानन्दपूर्णो यः स जीवन्मुक्त उच्यते ॥ ९७७ ॥

யஸ்ய தேஹாதிகம் நாஸ்தி யஸ்ய ப்ரஹ்மேதி நிச்சய: I
பரமானந்த பூர்ணே ய: ஸ ஜீவன் முக்த உச்யதே II

यस्य–எவனுக்கு, देहादिकं–தேஹம் முதலியவை, नास्ति-இல்லையோ, यस्य–எவனுக்கு, ब्रह्मेति-(நான்) ப்ரஹ்மம் என்ற, निश्चयः- தீர்மானம் (உள்ளதோ), यः–எவன், परमानन्दपूर्णः- மேலான ஆனந்தத்தால் நிறைந்தவனோ, सः–அவன், जीवन्मुक्तः ஜீவன்முக்தனாக, उच्यते–சொல்லப்படுகிறான்.

எவனுக்கு தேஹம், இந்திரியம் முதலியவை கிடையாதோ, (தேஹாதிகளில் ‘என்னுடையது’ என்ற அபிமானமில்லாததால் இவைகள் இருந்தாலும் பிறருடைய தேஹம்போல் இவனுடையதாக தேஹாதிகள் இல்லை) எவனுக்கு எந்த நிலையிலும் ‘நான் ப்ரஹ்மம்’ என்ற உறுதியான ஞானம் உள்ளதோ, இந்த ஞானமிருப்பதால் எவன் எப்பொழுதும் ப்ரஹ்மானந்த பூர்ணனாக இருக்கிறானோ, அவன் ஜீவன் முக்தன். (977)

अहं ब्रह्मास्मि अहं ब्रह्मास्मि अहं ब्रह्मेति निश्चयः ।
चिदहं चिदहं चेति स जीवन्मुक्त उच्यते ॥ ९७८ ॥

அஹம் ப்ரஹ்மாஸ்மி அஹம் ப்ரஹ்மாஸ்மி
அஹம் ப்ரஹ்மேதி நிச்சய: I
சிதஹம் சிதஹம் சேதி ஸ ஜீவன்முக்த உச்யதே II

अहं-நான், ब्रह्म अस्मि–ப்ரஹ்மமாக இருக்கிறேன், अहं-நான், ब्रह्म-ப்ரஹ்மமாக, अस्मि-இருக்கிறேன், अहं–நான், ब्रह्म-ப்ரஹ்மம், इति–என்றும், अहं–நான், चित्–ஞானஸ்வரூபம், अहं நான், चित् - ஞானஸ்வரூபம், इति च-என்றும், निश्चयः - நிச்சயம் (உள்ளதோ), सः-அவன், जीवन्मुक्तः–ஜீவன் முக்தனாக, उच्यते-சொல்லப்படுகிறான்.

நான் ப்ரஹ்மமாக இருக்கிறேன், நான் ப்ரஹ்மமாயிருக்கிறேன், நான் ப்ரஹ்மம் என்றும், நான் ஞானஸ்வரூபன் நான் ஞான ஸ்வரூபன் என்றும் எவனுக்கு நிச்சய ஞானம் உள்ளதோ அவன் ஜீவன் முக்தன் (இங்கு பலதடவை சொன்னது இந்த ஞானத்தின் உறுதியைக் காட்டுகிறது. (978)

(அ) ஸாமான்யமாக உலகத்தில் சரீரம் மரணமடைந்த பிறகே விதேஹமுக்தி என்ற வியவஹாரம் இருப்பதை அனுஸரித்து அவ்வித விதேஹமுக்தியை முதலில் சொல்லி விட்டு, சரீரம் இருக்கும்போதே சரீராதி ஸம்பந்தமற்று ஆத்ம ஸாக்ஷாத்காரம் அடைந்தவனும் வாஸ்தவமாக விதேக முக்தன் என்றேதான் சொல்லப்படவேண்டுமென்று மேலால் சொல்கிறார்:—

जीवन्मुक्तिपदं त्यक्त्वा स्वदेहे कालसात्कृते ।
विशत्यदेहमुक्तत्वं पवनोऽस्पन्दतामिव ॥ ९७९ ॥

ஜீவன்முக்தி பதம் த்யக்த்வா ஸ்வதேஹே
காலஸாத்க்ருதே ।
விசத்யதேஹ முக்தத்வம் பவனோऽஸ்பந்ததாமிவ ॥

स्वदेहे-தன் சரீரம், कालसात्कृते-காலத்தின் வசமாகும் போது, जीवन्मुक्तिपदं ஜீவன்முக்தி நிலையை, त्यक्त्वा-விட்டு, पवनः-காற்று, अस्पन्दतामिव-அசையாமலிருக்கும் தன்மையைப் போல், अदेहमुक्तत्वं-விதேஹமுக்தியை, विशति அடைகிறான்.

ஞானி தன் சரீரம் (இப்பொழுது தன்னுடையது என்ற அபிமானமில்லாவிட்டாலும் முன்னால் தன்னுடையதாயிருந்தது, உலக ரீதியாக அவனுடையது) கால வசமாகும்போது (அழியும்போது), காற்று வீசிக்கொண்டிருக்கும் தன்மையை விட்டு அசையாமலிருக்கும் தன்மையை அடைவதுபோல ஜீவன் முக்தி என்ற நிலையைவிட்டு, விதேஹ முக்தத் தன்மையை அடைகிறான். (979)

ततः तत् संबभूवासौ यत् गिरामप्यगोचरम् ।
यत् शून्यवादिनां शून्यं ब्रह्म ब्रह्मविदां च यत् ॥ ९८० ॥

विज्ञानं विज्ञानविदां मलानां च मलात्मकम् ।
पुरुषः सांख्यदृष्टीनां ईश्वरो योगवादिनाम् ।
शिवः शैवागमस्थानां कालः कालैकवादिनाम् ॥ ९८१ ॥

ததஸ் தத் ஸம்பபூவாஸௌ யத் கிராமப்யகோசரம் ।
யத் சூந்யவாதிநாம் சூந்யம் ப்ரஹ்ம ப்ரஹ்மவிதாம்
ச யத் ॥

விஜ்ஞாநம் விஜ்ஞாநவிதாம் மலாநாம் ச மலாத்மகம் ।
புருஷ: ஸாங்க்யத்ருஷ்டிநாம் ஈச்வரோ யோகவாதிநாம் ।
சிவ: சைவாகமஸ்தாநாம் கால: காலைகவாதிநாம் ॥

ततः-பிறகு, असौ-அவன், यत्-எது, गिरामपि-வாக்குகளுக்கும், अगोचरं எட்டாதோ, यत्-எது, शून्यवादिनां-சூன்யவாதிகளுக்கு, शून्यं-சூன்யமோ, यत्-எது, ब्रह्मविदां-ப்ரஹ்ம ஞானிகளுக்கு, ब्रह्म-ப்ரஹ்மமோ, विज्ञानविदां-விக்ஞானவாதிகளுக்கு, विज्ञानं விஜ்ஞானமோ, मलानां-தோஷமுள்ளவர்களுக்கு, मलात्मकं-தோஷமோ, सांख्यदृष्टीनां-ஸாங்க்ய ஞானிகளுக்கு, पुरुषः-புருஷனே, योगवादिनां-யோகிகளுக்கு, ईश्वरः-ஈசுவரனே, शैवागमस्थानां-சைவாகமத்தை பிரமாணமாகக் கொண்டவர்களுக்கு, शिव-சிவனே, कालैकवादिनां-காலவாதிகளுக்கு, कालः-காலமோ, तत्-அந்த ஸ்வரூபமாக, संबभूव-ஆய்விட்டான்.

பிறகு இவன், வாக்குக்கு விஷயமில்லாதது எதுவோ, சூன்யவாதிகளுக்கு எது சூன்யமோ, ப்ரஹ்மவித்துக்களுக்கு எது ப்ரஹ்மமோ, அறிவு என்று எண்ணுவோருக்கு எது அறிவோ, தோஷமுள்ளவர்களுக்கு எது தோஷஸ்வரூபமோ, ஸாங்க்ய பார்வையுள்ளவர்களுக்கு எது புருஷனே, யோகம் சொல்கிறவர்களுக்கு எது ஈச்வரனே, சைவாகமத்திலுள்ளவர்களுக்கு எது சிவனே, காலம் ஒன்றுதான் என்போருக்கு எது காலமோ, அதுவாக ஆகிவிடுகிறான். (980-981)

यत् सर्वशास्त्रसिद्धान्तं यत् सर्वहृदयानुगम् ।
यत् सर्वं सर्वगं वस्तु तत्तत्त्वं तदसौ स्थितः ॥ ९८२ ॥

யத் ஸர்வ சாஸ்த்ர ஸித்தாந்தம் யத் ஸர்வ
ஹ்ருதயானுகம் ।
யத் ஸர்வம் ஸர்வகம் வஸ்து தத் தத்வம் ததஸௌ
ஸ்திதః ॥

यत्-எது, सर्वशास्त्रसिद्धान्तं-எல்லா சாஸ்திரங்களுடைய முடிவோ, यत्-எது, सर्वहृदयानुगं-எல்லா ஹிருதயங்களிலும் உள்ளதோ, यत्-எது, सर्वं-எல்லாமாயும், सर्वगं-எல்லா இடங்களிலும் உள்ளதாயும், तत्त्वं-அவைகளின் உண்மையான, वस्तु-வஸ்துவோ, तत्-அதாக, असौ-இவன், स्थितः-இருக்கிறன்.

எது எல்லா சாஸ்திரங்களாலும் முடிவு கட்டப்பட்டிருக்கிறதோ, எது எல்லோருடைய ஹ்ருதயத்தில் இருந்துவருகிறதோ, எது எல்லாமாயும், எல்லாவற்றிலும் இருப்பதாயும் அவைகளின் வாஸ்தவ தத்வமாயும் இருக்கிற வஸ்துவோ, அதுவாகவே இவன் இருக்கிறன். (982)

ब्रह्मैवाहं चिदेवाहं एवं वाऽपि न चिन्त्यते ।
चिन्मात्रेणैव यः तिष्ठेत् विदेहो मुक्त एव सः ॥ ९८३ ॥

ப்ரஹ்மைவாஹம் சிதேவாஹம் ஏவம் வாபி ந
சிந்த்யதே ।
சின்மாத்ரேணைவ யஸ் திஷ்டேத் விதேஹோ முக்த
ஏவ ஸ: ॥

अहं-நான், ब्रह्मैव-ப்ரஹ்மமே, अहं-நான், चिदेव-சித்ஸ்வரூபமே, एवं वापि-இவ்வாறுகூட, न चिन्त्यते-(எவனுல்) எண்ணப்படுகிறதில்லையோ, यः-எவன், चिन्मात्रेणैव-சைதன்யஸ்வரூபமாகவே, तिष्ठेत्-இருக்கிருனே, सः-அவன், विदेहो मुक्तः एव-விதேஹமுக்தன்தான்.

"நான் ப்ரஹ்மமே. நான் சித்ஸ்வரூபமே" என்றுகூட எவனுல் எண்ணப்படுவதில்லையோ, சித்மாத்திரமாகவே எவர் இருந்துவிடுகிருரோ, அவர் சரீரமில்லாத முக்தர்தான். (983)

यस्य प्रपञ्चभानं न ब्रह्माकारमपीह न ।
अतीतातीतभावो यो विदेहो मुक्त एव सः ॥ ९८४ ॥

யஸ்ய ப்ரபஞ்சபாநம் ந ப்ரஹ்மாகாரமபீஹ ந ।
அதீதாதீத பாவோ யோ விதேஹோ முக்த ஏவ ஸ: ॥

यस्य-எவருக்கு, प्रपञ्चभानं-உலகத் தோற்றம், न-இல்லையோ, इह-இங்கு, ब्रह्माकारमपि-ப்ரஹ்மவடிவமான தோற்றமும், न-இல்லையோ, यः-எவன், अतीतातीतभावः-மேலானதிற்கும் மேலான வஸ்துவாக இருக்கிறரோ, सः-அவர், विदेहो मुक्त एव-விதேஹமுக்தர்தான்.

எவருக்கு பிரபஞ்சத்தின் தோற்றம் இல்லையோ, ப்ரஹ்மாகாரமான ஞானமும் இல்லையோ, எவர் மேலான தன்மைக்கும் மேலே போயிருக்கிறரோ, அவர் சரீரமில்லாத முக்தர்தான்.

चित्तवृत्तेः अतीतो यः चित्तवृत्त्यवभासकः ।
चित्तवृत्तिविहीनो यो विदेहो मुक्त एव सः ॥ ९८५ ॥

சித்த வ்ருத்தேரதீதோ ய: சித்த வ்ருத்த்யவபாஸக: ।
சித்தவ்ருத்தி விஹீநோயோ விதேஹோ முக்த ஏவ ஸ: ॥

यः-எவன், चित्तवृत्तेः-மனோவ்ருத்திக்கு, अतीतः-மேற்பட்டவனே, चित्तवृत्त्यवभासकः மனோவ்ருத்தியை பிரகாசப் படுத்துகிறனே, यः-எவன், चित्तवृत्तिविहीनः-மனோவ்ருத்திகளற்றவனே, स அவன், विदेहो मुक्तः एव-விதேஹமுக்தன்தான்.

எவர் சித்தவிருத்திக்கு மேல் போனவரோ, சித்தவிருத்தியைப் பிரகாசப்படுத்துகிறவரோ, எவர் சித்தவிருத்தி இல்லாதவரோ, அவர் சரீரமில்லாத முக்தர்தான். (985)

जीवात्मेति परात्मेति सर्वचिन्ताविवर्जितः ।
सर्वसंकल्पहीनात्मा विदेहो मुक्त एव सः ॥ ९८६ ॥

ஜீவாத்மேதி பராத்மேதி ஸர்வ சிந்தா விவர்ஜித: ।
ஸர்வ ஸங்கல்ப ஹீநாத்மா விதேஹோ முக்தஏவ ஸ: ॥

जीवात्मेति-(எவன்) ஜீவாத்மா என்றும், परात्मेति-பரமாத்மா என்றும், सर्वचिन्ताविवर्जितः-எல்லா எண்ணங்களுமற்றவனும், सर्वसंकल्पहीनात्मा-எல்லா ஸங்கல்பங்

களும் இல்லாதவனே, सः-அவன் विदेहो मुक्तः एव-விதேஹமுக்தன் தான்.

ஜீவாத்மா என்றும் பரமாத்மா என்றும் எல்லாவித எண்ணமும் இல்லாதவராய், எவ்வித ஸங்கல்பமுமற்ற தன்மை உள்ளவராய் இருக்கும் அவர் சரீரமில்லாத முக்தர்தான். (986)

ओंकारवाच्यहीनात्मा सर्ववाच्यविवर्जितः ।
अवस्थात्रयहीनात्मा विदेहो मुक्त एव सः ॥ ९८७ ॥

ஓங்கார வாச்ய ஹீநாத்மா ஸர்வ வாச்ய விவர்ஜித: ।
அவஸ்தா த்ரய ஹீநாத்மா விதேஹோ முக்த ஏவ ஸ: ।

ओंकारवाच्यहीनात्मा-ஓங்காரத்திற்கு வாச்யமாக இல்லாத ஸ்வரூபனையும், सर्ववाच्यविवर्जितः-எல்லா பதங்களுக்கும் பொருளான வஸ்துக்கள் அற்றவனையும், अवस्थात्रयहीनात्मा-மூன்று அவஸ்தைகளும் இல்லாத ஸ்வரூபனையும் இருக்கிறனே, सः-அவன், विदेहो मुक्त एव-விதேஹமுக்தன் தான்.

ஓம்காரத்திற்கு வாச்யமாயில்லாத தன்மையுள்ளவராய், எல்லாவித வாச்சியமுமற்றவராய், (எந்த சப்தத்திற்கும், பொருளான எந்த வஸ்துவுமில்லாதவராய்) (ஜாக்ரத், ஸ்வப்னம் ஸுஷுப்தி என்ற) மூன்று அவஸ்தைகளும் இல்லாதவராய், இருக்கும் அவர் சரீரமில்லாத முக்தர்தான்.

अहिनिर्ल्वयनीसर्पनिर्मोको जीववर्जितः ।
वल्मीके पतितः तिष्ठेत् तं सर्पो नाभिमन्यते ।
एवं स्थूलं च सूक्ष्मं च शरीरं नाभिमन्यते ॥ ९८८ ॥

அஹி நிர்ல்வயனீ ஸர்ப நிர்மோகோ ஜீவ வர்ஜித: ।
வல்மீகே பதிதஸ் திஷ்டேத் தம் ஸர்போ நாபிமந்யதே ।
ஏவம் ஸ்தூலம் ச ஸூக்ஷ்மம் ச சரீரம் நாபிமந்யதே ॥

अहिनिर्ल्वयनीसर्पनिर्मोकः அஹிநிர்ல்வயனீ என்ற பாம்பின் சட்டை, जीववर्जितः-ஜீவனில்லாமல், वल्मीके-

புற்றில், पतितः-விழுந்து, तिष्ठत्-இருக்கும், तं-அந்த சட்டையை, सर्पः-பாம்பு, न अभिमन्यते-அபிமானிக்கிற தில்லை. एवं-இதுபோல், स्थूलं च-ஸ்தூல சரீரத்தையும், सूक्ष्मं च शरीरं-ஸூக்ஷ்ம சரீரத்தையும், न अभिमन्यते-(விதேஹமுக்தன்) அபிமானிக்கிறதில்லை.

பாம்பு தன் சரீரமாகவே இருந்த மேல் தோலை கழட்டி விடுகிறது. இதற்கு பாம்புச் சட்டை என்று பெயர். இது புத்தில் கிடக்கிறது. இதில் ஜீவன் இல்லை. பாம்பு இதைப் பார்த்தாலும் இதன்மேல் ஊர்ந்துசென்றாலும் இச்சட்டையில் நான் என்றோ, என்னுடையது என்றோ கொஞ்சமும் அபிமானம் கொள்வதில்லை. இதுபோலவே ஸ்தூலஸூக்ஷ்ம சரீரங்களில் விதேஹமுக்தனுக்கு சிறிதும் அபிமானம் ஏற்படு கிறதில்லை. கீழே கிடக்கும் பாம்புச் சட்டையைப்போலத் தான் ஞானிகளுக்கு தேஹமும்.

'तद्यथा अहिनिर्ल्वयनी वल्मीके मृता प्रत्यस्ता शयीता एवमेव इदं शरीरं शेते'

(ப்ருஹதாரண்யகம் 4-4-7) (988)

प्रत्यग्ज्ञानशिखिध्वस्ते मिथ्याज्ञाने सहेतुके ।
नेति नेतीति अरूपत्वात् अशरीरो भवत्ययम् ॥ ९८९ ॥

ப்ரத்யக்ஞாந சிகித்வஸ்தே மித்யாஞாநே ஸஹேதுகே ।
நேதி நேதீத்யரூபத்வாத் அசரீரோ பவத்யயம் ॥

मिथ्याज्ञाने- அநாத்ம ப்ராந்தி, सहेतुके-காரணமான மூலாக்ஞானத்தோடுகூட, प्रत्यग्ज्ञानशिखिध्वस्ते-ப்ரத்யகாத்ம ஞானம் என்ற நெருப்பினுல் அழிந்த பொழுது, नेति नेति- இது இல்லை, இது இல்லை, इति-என்று, अरूपत्वात्-எவ்வித ரூபமுமில்லாததால், अयं-இவன், अशरीरः-சரீரமற்றவனுக, भवति-ஆகிருன்.

ப்ரத்யக்ப்ரஹ்மாத்மைக்ய ஞானமென்ற அக்னியினுல் அநாத்ம ப்ராந்தி, காரணமான மூலாக்ஞானத்துடன் நாசம் செய்யப்பட்டுவிட்டதால், "இது அல்ல, இது அல்ல"

என்று அறிவதன்மூலம் எவ்வித ரூபமும் இல்லாத் தன்மை ஏற்பட்டுவிட்டதால் இவர் சரீரமற்றவராகவே ஆவார். (989)

विश्वश्च तैजसश्चैव प्राज्ञश्चेति च ते त्रयः ।
विराट् हिरण्यगर्भश्च ईश्वरश्चेति च ते त्रयः ॥ ९९० ॥

ब्रह्माण्डं चैव पिण्डाण्डं लोकाः भूरादयः क्रमात् ।
स्वस्वोपाधिलयादेव लीयन्ते प्रत्यगात्मनि ॥ ९९१ ॥

விச்வஸ்ச தைஜஸஸ்சைவ ப்ராஜ்ஞஸ் சேதி ச
தே த்ரய: I
விராட் ஹிரண்யகர்பஸ்ச ஈச்வரஸ்சேதி ச தே த்ரய: II

ப்ரஹ்மாண்டம் சைவ பிண்டாண்டம் லோகா
பூராதய: க்ரமாத் I
ஸ்வஸ்வோபாதி லயாதேவ லீயந்தே ப்ரத்யகாத்மநி II

विश्वश्च-விசுவனும், तैजसश्चैव-தைஜஸனும், प्राज्ञश्च-ப்ராக்ஞனும், इति-என்ற, ते त्रयश्च-அந்த மூவர்களும், विराट्-விராட்டும், हिरण्यगर्भश्च-ஹிரண்யகர்ப்பனும், ईश्वरश्च-ஈசுவரனும், इति-என்ற, ते त्रयश्च-அந்த மூவர்களும், ब्रह्माण्डं चैव-ப்ரஹ்மாண்டமும், पिण्डाण्डं-பிண்டாண்டமும், भूरादयः-பூலோகம் முதலான, लोकाः-லோகங்களும், क्रमात्-முறையே, स्वस्वोपाधिलयादेव-தன் தன் உபாதிகளுக்கு நாசமேற்படுவதாலேயே, प्रत्यगात्मनि-ப்ரத்யகாத்ம ஸ்வரூபத்தில், लीयन्ते-மறைந்து விடுகின்றன.

(வ்யஷ்டியில்) விசுவன், தைஜஸன், ப்ராக்ஞன் என்று சொல்லப்படும் அந்த மூன்றும் (ஸமஷ்டியில்) விராட், ஹிரண்யகர்பர், ஈசுவரர் என்ற அந்த மூன்றும் (சரீரத்திற்கு வெளியே) ப்ரஹ்மாண்டமும் (உள்ளே) பிண்டாண்டமும், வரிசையாக பூலோகம் முதலான லோகங்களும், அததன் உபாதிகளுக்கு லயம் ஏற்படுவதிலுலேயே, எல்லாம் ப்ரத்யகாத்மாவில் லயித்துவிடுகின்றன. வ்யஷ்டியில் ஜாக்ரதவஸ்தாபிமானி விச்வனென்றும், ஸ்வப்னுபிமானி தைஜஸன்

என்றும், ஸுஷுப்த்யபிமானி ப்ராக்ஞன் என்றும் சொல்லப் படுகிறான். ஸமஷ்டியில் விராட், ஹிரண்யகர்ப்பன் ஈசுவரன் என்று பெயர். (990-991)

तूष्णीमेव ततस्तूष्णीं तूष्णीं सत्यं न किंचन ॥ ९९२ ॥

தூஷ்ணீமேவ ததஸ்தூஷ்ணீம் தூஷ்ணீம்
ஸத்யம் ந கிஞ்சந ॥

ततः-பிறகு, तूष्णीमेव-சும்மா இருப்பதுதான். तूष्णीं-சும்மா இருப்பதுதான், तूष्णीं-சும்மா இருப்பதுதான். सत्यं உண்மை, न किंचन-வேறு ஒன்றுமில்லை.

சும்மா இருப்பதுதான், அதற்கு மேலும் சும்மா இருப்பது தான். சும்மா இருப்பதுதான் ஸத்யம். வேறு எதுவுமில்லை.

कालभेदं वस्तुभेदं देशभेदं स्वभेदकम् ।
किंचिद् भेदं न तस्यास्ति किंचिद्वाऽपि न विद्यते ॥ ९९३ ॥

காலபேதம் வஸ்துபேதம் தேசபேதம் ஸ்வபேதகம் ।
கிஞ்சித் பேதம் ந தஸ்யாஸ்தி கிஞ்சித் வாபி ந வித்யதே ॥

कालभेदं-காலத்தால் பேதம், वस्तुभेदं-வஸ்துவால் பேதம், देशभेदं-தேசத்தால் பேதம், स्वभेदकम्-தனக்குள் பேதம், किंचित् भेदं ஒருபேதமும், तस्य-அவனுக்கு, नास्ति-இல்லை किंचिद्वापि-கொஞ்சமும், न विद्यते-இல்லை.

காலத்தினால் பேதம், வஸ்துவினால் பேதம், தேசத்தினால் பேதம் தனக்குள்ளேயே பேதம், யாதொரு பேதமும் அந்த ஆத்மாவிற்குக் கிடையாது. கொஞ்சமேனும்கூட கிடையாது.

जीवेश्वरेति वाक्ये च वेदशास्त्रेषु अहं त्विति ।
इदं चैतन्यमेवेति अहं चैतन्यमित्यपि ॥ ९९४ ॥

इति निश्चयशून्यो यो विदेहो मुक्त एव सः ।
ब्रह्मैव विद्यते साक्षात् वस्तुतोऽवस्तुतोऽपि च ॥ ९९५ ॥

ஜீவேச்வரேதி வாக்யே ச வேதசாஸ்த்ரேஷ்வஹம் த்விதி
இதம் சைதந்யமேவேதி அஹம் சைதன்யமித்யபி ॥

இதி நிச்சய சூந்யோ யோ விதேஹோ முக்த ஏவ ஸ: ।
ப்ரஹ்மைவ வித்யதே ஸாக்ஷாத் வஸ்துதோऽ
வஸ்துதோபி ச ॥

वाक्ये च-மஹாவாக்யத்திலும், वेदशास्त्रेषु-வேத சாஸ்திரங்களிலும், जीवेश्वरेति-ஜீவன், ஈசுவரன் என்றும், अहं त्विति-நான் என்றும், इदं चैतन्यमेवेति-இது சைதன்யம் தான் என்றும், अहं चैतन्यमित्यपि நான் சைதன்யமென்றும் इति-என்ற, निश्चयशून्यः-நிச்சயமுமற்றவன், यः-எவனோ, सः-அவன், विदेहो मुक्त एव-விதேஹமுக்தன்தான் वस्तुतः-வாஸ்தவமாகவும், अवस्तुतोऽपि च-பொய்யாகவும், साक्षात्-ஸாக்ஷாத்தாக, ब्रह्मैव-ப்ரஹ்மம்தான் विद्यते-இருக்கிறது.

மஹாவாக்யத்திலும் வேதசாஸ்திரங்களிலும் ஜீவன் என்றும் ஈசுவரன் என்றும் நான் என்றும், "இது சைதன்யம் தான்" என்றும், "நான் சைதன்யம்" என்றும் கூறப்பட்டிருந்தபோதிலும் எவருக்கு இம்மாதிரியான ஞானங்கள் ஒன்றும் தனியாக ஏற்படுவதில்லையோ, அவர் சரீரம் இல்லாத முக்தரே ஆவார். ப்ரஹ்மம்தான் ஸாக்ஷாத்தாக வாஸ்தவமாக இருக்கிறது, உண்மையல்லாத பொய்யான ப்ரபஞ்சமாக இருப்பதும் ப்ரஹ்மம்தான். அதைத்தவிர வேறு ஒன்றுமில்லை. (994-995)

तद् विद्याविषयं ब्रह्म सत्यज्ञानसुखात्मकम् ।
शान्तं च तद् अतीतं च परं ब्रह्म तदुच्यते ॥ ९९६ ॥

தத் வித்யா விஷயம் ப்ரஹ்ம ஸத்ய ஞான ஸுகாத்மகம் ।
சாந்தம் ச தததீதம் ச பரம் ப்ரஹ்ம ததுச்யதே ॥

सत्यज्ञानसुखात्मकं-ஸச்சிதானந்த ஸ்வரூபமான, तत् ब्रह्म-அந்த ப்ரஹ்மம், विद्याविषयं ஞானத்திற்கு விஷயம் (ஞேயம்), तत्-அதுவே, शान्तं च-எல்லா விசேஷங்களும் நீங்கியது, अतीतं च-எல்லாவற்றையும் கடந்தது,

तत्-அதுவே, परं ब्रह्म उच्यते-பரப்ரஹ்மமாகச் சொல்லப் படுகிறது.

ஞானத்திற்கு விஷயமாயிருப்பது ஸத்யம், ஞானம், ஆனந்தம் இவைகளை ஸ்வரூபமாயுள்ள ப்ரஹ்மம். அதுவே எல்லா விசேஷங்களும் நீங்கியது. அதுவே எல்லாவற்றை யும் கடந்தது (எவ்வித விசேஷணமும் சொல்லமுடியாமல் இருப்பதால்) அதுவே பரப்ரஹ்மம் என்று சொல்லப்படுகிறது.

सिद्धान्तोऽध्यात्मशास्त्राणां सर्वापह्नव एव हि ।
नाविद्यास्तीह नो माया शान्तं ब्रह्मैव तद्विना ॥ ९९७ ॥

ஸித்தாந்தோऽத்யாத்ம சாஸ்த்ராணாம்
ஸர்வாபஹ்நவ ஏவ ஹி ।
நாவித்யாஸ்தீஹ நோ மாயா சாந்தம் ப்ரஹ்மைவ
தத்விநா ॥

अध्यात्मशास्त्राणां-ஆத்மஸ்வரூபத்தை விளக்குகிற வேதாந்த சாஸ்திரங்களின், सिद्धान्तः-தீர்மானமான முடிவு, सर्वापह्नव एव हि-எல்லாவற்றையும் இல்லையென்று போக்குவதுதானல்லவா! इह-இங்கு, अविद्या-அவித்யை, नास्ति-இல்லை नो माया-மாயை இல்லை. तत् विना-அந்த அவித்யையும் மாயையும் இல்லாமல், शान्तं விசேஷங் களற்ற, ब्रह्मैव-ப்ரஹ்மம்தான் உள்ளது.

ஆத்மா விஷயமான எல்லா சாஸ்திரங்களுடைய ஸித்தாந்தம் எல்லாவற்றையும் இல்லை என்று போக்குவது தானல்லவா? (ஆகையால்) இங்கே அவித்யையும் கிடை யாது. மாயையும் கிடையாது. அவை (அவித்யையும் மாயையும்) இல்லையானால் நிர்விசேஷமான ப்ரஹ்மம்தான் உண்டு. (997)

प्रियेषु स्वेषु सुकृतं अप्रियेषु च दुष्कृतम् ।
विसृज्य ध्यानयोगेन ब्रह्माप्येति सनातनम् ॥ ९९८ ॥

ப்ரியேஷு ஸ்வேஷு ஸுக்ருதம் அப்ரியேஷு ச
துஷ்க்ருதம் ।
விஸ்ருஜ்ய த்யாந யோகேந ப்ரஹ்மாப்யேதி ஸநாதநம் ॥

स्वेषु-தன்னைச் சேர்ந்த, प्रियेषु-பிரியமானவர்களிடம் सुकृतं-புண்யத்தையும், अप्रियेषु-பிரியமில்லாதவர்களிடம், दुष्कृतं च-பாபத்தையும், विसृज्य-விட்டுவிட்டு, ध्यानयोगेन-ப்ரஹ்மாத்மைக்ய ஞானயோகத்தால், सनातनं-எப்பொழுதும் உள்ள, ब्रह्म-ப்ரஹ்மஸ்வரூபத்தை, अप्येति-அடைகிருன்.

தனக்கு ப்ரியமாக உள்ளவர்களுக்குப் புண்யத்தையும், அப்ரியமாயுள்ளவர்களுக்குப் பாபத்தையும் கொடுத்துவிட்டு ஞானயோகத்திஞல் சாசுவதமான ப்ரஹ்மத்தையடைகிருன்.

ஞானிக்கு ப்ரியன், அப்ரியன் என்பது கிடையாது. ஆகையால் அவரிடத்தில் ப்ரீதி வைத்தவன், அப்ரீதி வைத்தவன் என்றுதான் தாத்பர்யம். அதிலும் ஞானி கொடுத்துவிட்டுப் போகிருன் என்ருல், அவன் பிரித்துக் கொடுக்கிருன் என்ற தாத்பர்யமில்லை. அவனை ஆராதிப்பவர்கள் அவனுடைய புண்யத்தை அடைகிருர்கள், அவனை தூஷிப்பவர்கள் அவனுடைய பாபத்தை அடைகிருர்கள் என்று மாத்திரம் தாத்பர்யம். இதுவும் ஞானியைப் பூஜிக்க வேண்டும் என்ற விதிக்கு அர்த்தவாதமேயாகும்.

"तस्य पुत्रा दायमुपयान्ति सुहृदः साधुकृत्यां द्विषन्तः पापकृत्याम्"

यावद् यावच्च सद्बुद्धे स्वयं संत्यज्यतेऽखिलम् ।
तावत् तावत् परानन्दः परमात्मैव शिष्यते ॥ ९९९ ॥

யாவத் யாவச்ச ஸத்புத்தே ஸ்வயம் ஸந்த்யஜ்யதேऽகிலம் ।
தாவத் தாவத் பராநந்த: பரமாத்மைவ சிஷ்யதே ॥

सद्बुद्धे-நல்ல புத்தியுள்ளவனே! यावद्यावत्-எவ்வளவுக்கெவ்வளவு, अखिलं-எல்லாம், स्वयं-தாஞகவே, संत्यज्यते-விடப்படுகிறதோ, तावत्तावत्-அவ்வளவுக்கவ்வளவு, परानन्दः-மேலான ஆனந்தஸ்வரூபமான, परमात्मैव-பரமாத்மாதான், शिष्यते-மிஞ்சுகிறது.

நல்ல அறிவுள்ளவனே, எவ்வளவுக்கெவ்வளவு ப்ரபஞ்சமெல்லாம் தாஞகவே நன்கு விடப்படுகிறதோ, அவ்வளவுக்கு அவ்வளவு மேலான ஆனந்தமாகிய பரமாத்மாவே மிஞ்சும்.

यत्र यत्र मृतो ज्ञानी परमाक्षरवित् सदा ।
परे ब्रह्मणि लीयेत न तस्य उत्क्रान्तिः इष्यते ॥ १००० ॥

யத்ர யத்ர ம்ருதோ ஞாநீ பரமாக்ஷரவித் ஸதா ‖
பரே ப்ரஹ்மணி லீயேத ந தஸ்யோத் க்ராந்திரிஷ்யதே ‖

सदा-எப்பொழுதும், परमाक्षरवित्-மேலான அக்ஷர ப்ரஹ்மத்தை அறிந்துகொண்டிருக்கும், ज्ञानी-ஞானி, यत्र यत्र-எங்கெங்கு, मृतः-இறக்கிருனே (அங்கங்கே), परे ब्रह्मणि-பரப்ரஹ்மத்தில், लीयेत-மறைந்துவிடுவான். तस्य-அவனுக்கு, उत्क्रान्तिः-சரீரத்தை விட்டு வெளிக் கிளம்புவது, नेष्यते-கருதப்படவில்லை.

எப்பொழுதும் மேலான நாசரஹிதமான ப்ரஹ்மத்தை அறிந்துள்ள ஞானி, எந்த எந்த இடத்தில் மரணத்தை அடைகிருனே (அங்கேயே) பரப்ரஹ்மத்தில் லயித்துவிடுகிருன். அவனுக்கு (சரீரத்தைவிட்டு) வெளிக்கிளம்புவது என்பது கிடையாது.

[வியாபகமான ப்ரஹ்மம் ஒரு இடத்திலிருந்து இன்னொரு இடம் போகிறதென்ருல் அர்த்தமில்லை. அளவுக்கு உள்பட்டு ஜீவனுயிருக்கும்போது வேறு சரீரம் எடுக்கவோ, வேறு லோகம் போகவோ இந்தச் சரீரத்தைவிட்டு வெளிக்கிளம்புவதற்கு அவசியமுண்டு. உபாதிக்கு நாசமேற்பட்டுவிட்டபடியால் அளவுக்கு உள்பட்ட தன்மை நீங்கி ஸர்வவ்யாபக ப்ரஹ்மமாகவே இருந்துவிடுவதால் ஞானிக்கு உத்கிராந்தி (வெளிக்கிளம்புவது) கிடையாது].

'न तस्य प्राणा उत्क्रामन्ति'

(பிருஹதாரண்யகம் 4-4-6)

यत् यत् स्वाभिमतं वस्तु तत् त्यजन् मोक्षं अश्नुते ॥ १००१ ॥

யத் யத் ஸ்வாபிமதம் வஸ்து தத் த்யஜன்
மோக்ஷமச்நுதே ‖

यत् यत् वस्तु-எந்த எந்த வஸ்து, स्वाभिमतं-தனக்கு இஷ்டமோ (தானகவோ, தன்னுடையதாகவோ

அபிமானிக்கப்பட்டதோ), तत् - அதை, त्यजन्-விடுகிறவன், मोक्षं-மோக்ஷத்தை, अश्नुते-அடைகிருன்.

எந்த எந்த வஸ்து தான் என்றோ, தன்னுடையது என்றோ, நினைக்கப்பட்டதோ, அதை தியாகம் செய்துவிடுகிறவன் மோக்ஷத்தை அடைகிருன். (1001)

असंकल्पेन शस्त्रेण छिन्नं चित्तं इदं यदा ।
सर्वं सर्वगतं शान्तं ब्रह्म संपद्यते तदा ॥ १००२ ॥

அஸங்கல்பேந சஸ்த்ரேண சிந்நம் சித்தமிதம் யதா ।
ஸர்வம் ஸர்வகதம் சாந்தம் ப்ரஹ்ம ஸம்பத்யதே ததா ॥

यदा-எப்பொழுது, इदं चित्तं-இந்த சித்தமானது, असंकल्पेन-ஸங்கல்பிக்காமலிருப்பது என்ற, शस्त्रेण-சஸ்திரத்தால், छिन्नं-வெட்டப்படுகிறதோ, तदा-அப்பொழுது, सर्वं-எல்லாமாயும், सर्वगतं-எங்குமுள்ளதாயும், शान्तं-சாந்தமாயுமுள்ள ब्रह्म-ப்ரஹ்மமாக, संपद्यते-ஆகிருன்.

இந்த சித்தமானது எப்பொழுது ஸங்கல்பமில்லாமை என்கிற ஆயுதத்திஞல் வெட்டப்பட்டுவிடுகிறதோ, அப்பொழுது எல்லாமாயும் எல்லாவற்றிலும் இருப்பதாயும் சாந்தமாயும் உள்ள ப்ரஹ்மமாக ஆகிருன். (1002)

(அ) இத்துடன் குருவின் உபதேசம் முடிகிறது. இதைக் கேட்டபிறகு சிஷ்யன் என்ன செய்தான், உபதேசித்தபிறகு குரு என்ன செய்தார் என்பதை சொல்லி இந்த ப்ரகரணத்தை முடிக்கிருர்:—

इति श्रुत्वा गुरोर्वाक्यं शिष्यस्तु छिन्नसंशयः ।
ज्ञातज्ञेयः संप्रणम्य सद्गुरोः चरणाम्बुजम् ।
स तेन समनुज्ञातो ययौ निर्मुक्तबन्धनः ॥ १००३ ॥

இதி ச்ருத்வா குரோர் வாக்யம் சிஷ்யஸ்து சிந்ந ஸம்சய:
ஞாத ஞேய:-ஸம்ப்ரணம்ய ஸத்குரோஸ் சரணும்புஜம் ।
ஸ தேந ஸமநுஞாதோ யயௌ நிர்முக்த பந்தந: ॥

इति-இவ்வாறான, गुरोः वाक्यं-குருவின் வார்த்தையை श्रुत्वा-கேட்டு, छिन्नसंशयः-ஸந்தேஹங்கள் நீங்கியவனும், ज्ञातज्ञेयः-அறிந்துகொள்ளவேண்டியதை அறிந்தவனும், निर्मुक्तबन्धनः-ஸம்ஸாரபந்தத்திலிருந்து விடுபட்டவனும் உள்ள, सः शिष्यः-அந்த சிஷ்யன், सद्गुरोः-ஸத்குருவின், चरणाम्बुजं-பாதாரவிந்தத்தை, संप्रणम्य-வணங்கி, तेन-அவரால், समनुज्ञातः-அநுமதிக்கப்பட்டவனாய், ययौ-சென்றான்.

இவ்வாறான குருவின் வாக்கியத்தைக் கேட்டு எல்லா ஸம்சயங்களும் நிவ்ருத்தியானவனாய் அறியவேண்டிய முக்ய மான ப்ரஹ்மத்தை அறிந்துவிட்டவனாய் ஸம்ஸார பந்தத்தி லிருந்து விடுதலையடைந்தவனாய் அந்த சிஷ்யன் ஸத்குருவின் பாதகமலத்தில் நன்கு நமஸ்கரித்து அவரால் அனுமதிக்கப் பட்டு புறப்பட்டுப்போனான். (1003)

गुरुः एष सदानन्दसिन्धौ निर्मग्नमानसः ।
पावयन् वसुधां सर्वां विचचार निरुत्तरः ॥ १००४ ॥

குருரேஷ ஸதாநந்த ஸிந்தௌ நிர்மக்ன மாநஸ: ।
பாவயன் வஸுதாம் ஸர்வாம் விசசார நிருத்தர: ॥

एष गुरुः-இந்த குரு, सदा-எப்பொழுதும், आनन्दसिन्धौ-ப்ரஹ்மாநந்த ஸமுத்ரத்தில், निर्मग्नमानसः-மூழ்கின மனமுள்ளவராய், वसुधां सर्वां-பூமி முழுவதையும், पावयन्-தூய்மைப்படுத்திக்கொண்டு, निरुत्तरः-பதில் பேசாமல், विचचार-ஸஞ்சரித்தார்.

இந்த குரு அழிவற்ற வாஸ்தவமான ப்ரஹ்மானந்த ஸமுத்ரத்தில் (எப்பொழுதும் ஆனந்த ஸமுத்ரத்தில்) மூழ்கின மனதுடையவராய் பூமி யாவற்றையும் பரிசுத்தம் செய்து கொண்டு யார் கேட்டாலும் ஒன்றும் பேசாமல் ஸஞ்சரித்துக் கொண்டிருந்தார். (1004)

(அ) இவ்விதம் உபாக்யானத்தை முடித்துவிட்டு இந்த கிரந்தத்தை ஸமாப்தி செய்யும்போது, ஆரம்பத்தில் 4-வது சுலோகத்தில் கண்ட விஷயம், அதிகாரி, ப்ரயோஜனம் என்கிற அம்சங்களை இங்கேயும் ஞாபகப்படுத்துகிறார்:—

**इत्याचार्यस्य शिष्यस्य संवादेन आत्मलक्षणम् ।**
**निरूपितं मुमुक्षूणां सुखबोधोपपत्तये ॥ १००५ ॥**

இத்யாசார்யஸ்ய சிஷ்யஸ்ய ஸம்வாதேநாத்மலக்ஷணம்।
நிருபிதம் முமுக்ஷூணும் ஸுக போதோபபத்தயே ॥

**इति**-இவ்வாறு, **आचार्यस्य**-குருவினுடையவும், **शिष्यस्य**-சிஷ்யனுடையவும், **संवादेन**-ஸம்பாஷணையால், **मुमुक्षूणां** மோக்ஷம் அடைய விரும்புபவர்களுக்கு, **सुखबोधोपपत्तये**-ஸுகமாக ஆத்மஞானம் ஏற்படுவதற்காக, **आत्मलक्षणं**-ஆத்மஸ்வரூபம், **निरूपितं**-விளக்கிக் கூறப்பட்டது.

இவ்விதமாக ஆசார்யருக்கும் சிஷ்யனுக்கும் நடந்த ஸம்வாத ரூபமாக முமுக்ஷுக்களுக்கு நன்கு ஸுகமாக (சிரமமன்னியில்) ப்ரஹ்மாத்மைக்ய ஞானம் ஏற்படுவதற்காக ஆத்மாவின் ஸ்வரூபம் நிருபிக்கப்பட்டது. (1005)

**सर्ववेदान्तसिद्धान्तसारसंग्रहनामकः ।**
**ग्रन्थोऽयं हृदयग्रन्थिविच्छित्त्यै रचितः सताम् ॥ १००६ ॥**

ஸர்வவேதாந்த ஸிந்தாந்த ஸார ஸங்க்ரஹநாமக:।
க்ரந்தோயம் ஹ்ருதய க்ரந்தி விச்சித்த்யை ரசித: ஸதாம் ॥

**सर्ववेदान्तसिद्धान्तसारसंग्रहनामकः**-ஸர்வ வேதாந்த ஸித்தாந்த ஸாரஸங்க்ரஹம் என்ற பெயருள்ள, **अयं ग्रन्थः**-இந்த கிரந்தம், **सतां**-ஸாதுக்களுக்கு, **हृदयग्रन्थिविच्छित्त्यै**-மனதிலுள்ள அக்ஞானம் என்னும் முடிச்சு அறுந்துபோவதற்காக, **रचितः**-செய்யப்பட்டது.

ஸர்வவேதாந்த ஸித்தாந்த ஸாரஸங்கிரஹம் என்ற பெயருடைய இந்த கிரந்தம் ஸாதுக்களுக்கு ஹ்ருதயத்தில் உள்ள (அவித்யா) முடிச்சு அறுபட வேண்டியதற்காகச் செய்யப்பட்டிருக்கிறது. (1006)

ஸர்வவேதாந்த ஸித்தாந்த ஸாரஸங்கிரஹம்
முற்றும்.

॥ श्रीः ॥

# ॥ ब्रह्मज्ञानावलीमाला ॥

## ப்ரஹ்மஞாவளீமாலா

[ப்ரஹ்மஞானனுபவமுள்ளவர்கள் தமது அனுபவத்தை ஒருவாறு வெளியிட்டுக் காட்டும் சொற்களின் வரிசை அடங்கியது ப்ரஹ்மஞானவளீமாலை என்னும் இந்நூல். இதில் ப்ரஹ்மத்தின் ஸ்வரூபமும் லக்ஷணங்களும் நன்கு வர்ணிக்கப்பட்டிருக்கிறது. ப்ரஹ்மத்தின் ஸ்வரூபத்தையும் லக்ஷணங்களையும் வர்ணித்து அதுவே நான் என்று கூறுவதன் மூலம் "அஹம் ப்ரஹ்மாஸ்மி" என்ற மஹாவாக்யத்தின் அர்த்தம் நன்கு விளக்கப்படுகிறது.]

सकृच्छ्रवणमात्रेण ब्रह्मज्ञानं यतो भवेत् ।
ब्रह्मज्ञानावलीमाला सर्वेषां मोक्षसिद्धये ॥ १ ॥

ஸக்ருத் ச்ரவண மாத்ரேண ப்ரஹ்ம ஞாநம் யதோ
பவேத் ।
ப்ரஹ்மஞாவளீ மாலா ஸர்வேஷாம் மோக்ஷஸித்தயே॥

सकृत्-ஒரு தடவை, श्रवणमात्रेण சிரவணம் செய்த மாத்ரத்தால், यतः-எதனால், ब्रह्मज्ञानं-ப்ரஹ்மஞானம், भवेत्-ஏற்படுமோ (அந்த), ब्रह्मज्ञानावलीमाला-ப்ரஹ்மஞாவளீமாலை என்ற நூல், सर्वेषां-எல்லோருக்கும், मोक्षसिद्धये மோக்ஷம் ஏற்படுவதற்கு உபயோகமாக ஆகிறது.

ஒருதடவை காதால் கேட்டமாத்ரத்தாலேயே எதிலிருந்து ப்ரஹ்மஞானம் ஏற்படுமோ, அந்த ப்ரஹ்மஞாநாவளீ மாலை, எல்லோருக்கும் மோக்ஷம் கிடைப்பதற்கு உபயோகமாக உள்ளது. (1)

असङ्गोऽहमसङ्गोऽहमसङ्गोऽहं पुनः पुनः ।
सच्चिदानन्दरूपोऽहमहमेवाहमव्ययः ॥ २ ॥

அஸங்கோஹ மஸங்கோஹ மஸங்கோஹம் புந: புந: ।
ஸச்சிதாநந்த ரூபோஹ மஹமேவாஹ மவ்யய: ॥

अहं-நான், असङ्गः பற்று இல்லாதவன். अहं-நான், असङ्गः-பற்று இல்லாதவன். पुनः पुनः-திரும்பத்திரும்ப, अहं நான், असङ्गः பற்றில்லாதவன், अहं-நான், सच्चिदानन्दरूपः-ஸத், ஞானம், ஆனந்தம், இவற்றை ஸ்வரூபமாகக்கொண்டவன். अहं-நான், अव्ययः-அழிவற்ற, अहमेव-நான் தான், (சுத்தமான ஆத்மஸ்வரூபமே).

நான் அஸங்கன் (ஒன்றிலும் ஸம்பந்தப்படாதவன்), நான் அஸங்கன், திருப்பித் திருப்பி நான் அஸங்கன், நான் ஸத் ஸ்வரூபமாயும் ஞான ஸ்வரூபமாயும் ஆனந்த ஸ்வரூபமாயுமிருப்பவன், நான் அழிவற்ற நான்தான், அஹம்பத லக்ஷ்யார்த்தமான சுத்த ஆத்மஸ்வரூபம்தான் நான், சரீராதிகள் நானில்லை. ஆகவே நான் ஸச்சிதாநந்த பரப்ரஹ்மமே. (2)

नित्यशुद्धविमुक्तोऽहं निराकारोऽहमव्ययः ।
भूमानन्दस्वरूपोऽहमहमेवाहमव्ययः ॥ ३ ॥

நித்யசுத்த விமுக்தோஹம் நிராகாரோஹ மவ்யய: ।
பூமாநந்த ஸ்வரூபோஹ மஹமேவாஹ மவ்யய: ॥

अहं நான், नित्यशुद्धविमुक्तः-நித்யனுயும் தோஷமற்றவனுயும் (எப்பொழுதும் சுத்தனுயும்) விடுபட்டவனுயும் இருக்கிறேன். अहं-நான், निराकारः-உருவமற்றவன். अव्ययः-குறைவில்லாதவன். अहं-நான், भूमानन्दस्वरूपः-மிகப்பெரிய ஆனந்தஸ்வரூபன். अहं-நான், अव्ययः-அழிவற்ற, अहमेव-நான்தான்.

நான் அழிவற்றவன், எப்பொழுதும் தோஷமற்றவன், விடுபட்டவன், நான் உருவமற்றவன், குறைவில்லாதவன், நான் மிக உயர்ந்த ஆனந்தஸ்வரூபன், நான் அழிவற்ற நானே (சுத்தமான ஆத்மாவே). (3)

नित्योऽहं निरवद्योऽहं निराकारोऽहमच्युतः ।
परमानन्दरूपोऽहमहमेवाहमव्ययः ॥ ४ ॥

நித்யோஹம் நிரவத்யோஹம் நிராகாரோஹமச்யுத: ।
பரமாநந்த ரூபோஹம் அஹமேவாஹமவ்யய: ॥

अहं- நான், नित्यः—நாசமில்லாதவன். अहं நான், निरवद्यः தோஷமில்லாதவன். अहं நான், निराकारः- வடிவமற்றவன். अच्युतः—நழுவாதவன். अहं நான், परमानन्दरूपः மேலான ஆனந்தஸ்வரூபன். अहं-நான், अव्ययः நாசமற்ற, अहमेव-நான்தான்.

நான் நாசமில்லாதவன், நான் தோஷமில்லாதவன், நான் உருவமில்லாதவன், நழுவாதவன், நான் மேலான ஆனந்த ஸ்வரூபன், நான் அழிவற்ற நானே (சுத்தமான ஆத்ம ஸ்வரூபமே) (4)

शुद्धचैतन्यरूपोऽहमात्मारामोऽहमेव च ।
अखण्डानन्दरूपोऽहमहमेवाहमव्ययः ॥ ५ ॥

சுத்தசைதன்ய ரூபோஹ மாத்மாராமோஹமேவ ச ।
அகண்டாநந்த ரூபோஹ மஹமேவாஹ மவ்யய: ॥

अहं-நான், शुद्धचैतन्यरूपः சுத்தமான (ஒன்றிலும் ஸம்பந்தப்படாத) சைதன்யஸ்வரூபன். अहं-நான், आत्माराम एव ஆத்மஸ்வரூபம் ஒன்றிலேயே இன்பமடைகிறவன். अहं நான், अखण्डानन्दरूपः- பிரிவற்ற பூர்ணமான ஆனந்தஸ்வரூபன். अहं-நான், अव्ययः—அழிவில்லாத, अहमेव-நான்தான்.

நான் பரிசுத்தமான சைதன்ய ஸ்வரூபன், நான் ஆத்ம ஸ்வரூபத்திலேயே இன்பமடைகிறவன் (வெளி விஷயங்களிலிருந்து இன்பமடையாதவன்), நான் பிரிவற்ற ஆனந்த ஸ்வரூபன், நான் அழிவற்ற நானே. (5)

प्रत्यक्चैतन्यरूपोऽहं शान्तोऽहं प्रकृतेः परः ।
शाश्वतानन्दरूपोऽहमहमेवाहमव्ययः ॥ ६ ॥

ப்ரத்யக் சைதன்ய ரூபோஹம் சாந்தோஹம் ப்ரக்ருதே: பர: ।
சாச்வதாநந்த ரூபோஹ மஹமேவாஹ மவ்யய: ॥

अहं-நான், प्रत्यक्चैतन्यरूप:-உள்ளே விளங்கும் ஆத்ம சைதன்யஸ்வரூபி, अहं-நான், शान्त:-சாந்தன். प्रकृते: पर:-ஜகத்காரணமான மாயைக்கு மேற்பட்டவன். अहं-நான், शाश्वतानन्दरूप:-சாச்வதமான (உத்பத்தி விநாச மில்லாமல் எப்பொழுதும் இருக்கிற) ஆநந்தஸ்வரூபன். अहं-நான், अव्यय: அழிவற்ற, अहमेव நான்தான்.

நான் எல்லாவற்றிற்கும் உள்ளே விளங்கும் சைதன்ய ஸ்வரூபன், நான் சாந்தன், ப்ரகிருதிக்கும் (மாயைக்கும்) மேற்பட்டவன், நான் எல்லாக் காலங்களிலும் இருக்கும் நித்ய மான ஆனந்த ஸ்வரூபன், நான் அழிவற்ற நானே. (6)

तत्वातीतः परात्माऽहं मध्यातीतः परः शिवः ।
मायातीतः परंज्योतिरहमेवाहमव्ययः ॥ ७ ॥

தத்வாதீத: பராத்மாஹம் மத்யாதீத: பர: சிவ: ।
மாயாதீத: பரம்ஜ்யோதி ரஹமேவாஹ மவ்யய: ॥

अहं-நான், तत्त्वातीत:-ப்ரக்ருதி முதலான தத்வங் களுக்கு மேல்பட்டவன். परात्मा மேலான ஆத்ம ஸ்வரூபம். मध्यातीत:-நடுவில் இருப்பவன் அல்ல (மேலே இருப்பவன்), पर: शिव:-மேலான மங்களஸ்வரூபம், मायातीत:-மாயையைக் கடந்தவன். परंज्योति: மேலான ப்ரகாசஸ்வரூபன். अहं-நான், अव्यय:-அழிவற்ற, अहमेव- நான்தான்.

நான் ஸாங்க்யர் முதலானவர்கள் சொல்லும் தத்வங்களில் அடங்கினவனல்ல, அவைகளுக்கு மேற்பட்டவன், அவைகள் உண்மையல்ல, நான் ஒருவனே ஸத்யமான வஸ்து, நான் பரமாத்மா, நான் நடுவில் இருப்பவனல்ல, நான் பரசிவம், மாயைக்கு மேற்பட்டவன், மேலான பிரகாச ஸ்வரூபன், நான் அழிவற்ற நானே.
(7)

नानारूपव्यतीतोहं चिदाकारोऽहमच्युतः ।
सुखरूपस्वरूपोऽहमहमेवाहमव्ययः ॥ ८ ॥

நாநா ரூப வ்யதீதோஹம் சிதாகாரோஹ மச்யுத: I
ஸுகரூப ஸ்வரூபோஹம் அஹமேவாஹ மவ்யய: II

अहं-நான், नानारूपव्यतीतः பற்பல உருவங்களை யெல்லாம் தாண்டினவன் (அல்லது, नामरूपव्यतीतः- நாமரூபங்களற்றவன்) ஆனாலும், अहं-நான், चिदाकारः- சைதன்யத்தையே வடிவமாகக்கொண்டவன். अच्युतः- நழுவாதவன், अहं-நான், सुखरूपस्वरूपः-ஸுகரூபத்தையே ஸ்வரூபமாகக்கொண்டவன், अहं-நான், अव्ययः-அழி வற்ற, अहमेव-நான்தான்.

நான் பல உருவங்கொண்ட வஸ்துக்களுக்கு மேற்பட்ட வன், சைதன்யத்தை உருவமாகக் கொண்டவன், நான் அச்யுதன், நான் ஸுகரூபத்தையே ஸ்வரூபமாகக் கொண்ட வன், நான் அழிவற்ற நானே ('நாமரூப வ்யதீதோஹம்' என்று பாடமிருக்கலாம். அப்பொழுது பெயரும் உருவமுமற்றவன் என்று பொருள்). (8)

मायातत्कार्यदेहादि मम नास्त्येव सर्वदा ।
स्वप्रकाशैकरूपोऽहमहमेवाहमव्ययः ॥ ९ ॥

மாயா தத்கார்ய தேஹாதி மம நாஸ்த்யேவ ஸர்வதா I
ஸ்வப்ரகாசைக ரூபோஹம் அஹமேவாஹ மவ்யய: II

मम-எனக்கு, सर्वदा-எப்பொழுதும், मायातत्कार्यदेहादि- மாயையும் அதன் கார்யமான தேஹம் முதலியவையும், नास्त्येव-கிடையவே கிடையாது. अहं-நான், स्वप्रकाशैकरूपः- தானே ப்ரகாசிக்கும் சைதன்யம் ஒன்றையே ஸ்வரூப மாகக் கொண்டவன். अहं-நான், अव्ययः- அழிவற்ற, अहमेव-நான்தான்.

மாயையும் அதன் காரியமான தேஹம் முதலியவையும் எனக்கு எப்பொழுதும் இல்லை, ஸ்வப்ரகாசம் (வேறொன்றை எதிர்பாராமல் தானே ப்ரகாசிப்பது) ஒன்றையே நான் ஸ்வரூப மாகக் கொண்டவன், நான் அழிவற்ற நானே. (9)

गुणत्रयव्यतीतोऽहं ब्रह्मादीनां च साक्ष्यहम् ।
अनन्तानन्दरूपोऽहमहमेवाहमव्ययः ॥ १० ॥

குணத்ரய வ்யதீதோஹம் ப்ரஹ்மாதீநாம் ச
ஸாக்ஷ்யஹம் I
அநந்தாநந்த ரூபோஹம் அஹமேவாஹ மவ்யய: II

अहं-நான், गुणत्रयव्यतीतः-ஸத்வம், ரஜஸ், தமஸ் என்னும் மூன்று குணங்களையும் தாண்டினவன் நிர்குணன், अहं நான், ब्रह्मादीनां च साक्षी ப்ரஹ்மா முதலானவர்களுக்கும் ஸாக்ஷி. अहं நான், अनन्तानन्दरूपः-எல்லையற்ற ஆனந்தஸ்வரூபி, अहं-நான் अव्ययः-அழிவற்ற अहमेव-நான் தான்.

நான் ஸத்வம், ரஜஸ், தமஸ் என்னும் முக்குணங்களுமற்றவன், நான் ப்ரஹ்மா முதலானவர்களுடைய ஹிருதயத்தில் ஸாக்ஷியாக விளங்குபவன் நான் எல்லையற்ற ஆனந்த ஸ்வரூபன், நான் அழிவற்ற நானே. (10)

अन्तर्यामिस्वरूपोऽहं कूटस्थः सर्वगोऽस्म्यहम् ।
परमात्मस्वरूपोऽहमहमेवाहमव्ययः ॥ ११ ॥

அந்தர்யாமி ஸ்வரூபோஹம் கூடஸ்த: ஸர்வகோ
ஸ்ம்யஹம் I
பரமாத்ம ஸ்வரூபோஹம் அஹமேவாஹமவ்யய: II

अहं-நான், अन्तर्यामिस्वरूपः-அந்தர்யாமி (உள்ளேயிருந்து நியமனம் செய்யும் ஆத்ம) ஸ்வரூபன், अहं-நான், कूटस्थः-விகாரமற்றவனும், सर्वगः-எங்குமுள்ளவனும், अस्मि-இருக்கிறேன். अहं-நான், परमात्मस्वरूपः-பரமாத்மஸ்வரூபன். अहं நான், अव्ययः-அழிவற்ற, अहमेव நான்தான்.

நான் அந்தர்யாமி ஸ்வரூபன் (எல்லாவற்றிலும் உள்ளேயிருந்து நியமனம் செய்பவன்), கூடஸ்தன் (எல்லாவற்றிற்கும் ஆதாரமாக இருந்துகொண்டு விகாரமடையாதவன்), எங்கும் உள்ளவன், நான் பரமாத்மஸ்வரூபன், நான் அழிவற்ற நானே. (11)

निष्कलोऽहं निष्क्रियोऽहं सर्वात्माऽऽद्यः सनातनः ।
अपरोक्षस्वरूपोऽहमहमेवाहमव्ययः ॥ १२ ॥

நிஷ்கலோஹம் நிஷ்க்ரியோஹம் ஸர்வாத்மாத்ய:
ஸநாதந: ।
அபரோக்ஷ ஸ்வரூபோஹம் அஹமேவாஹமவ்யய: ॥

अहं-நான், निष्कल:-அவயவமில்லாதவன். अहं நான், निष्क्रिय:-செய்கைகளற்றவன், सर्वात्मा-எல்லா ஸ்வருபமாயிருப்பவன், आद्य:-முதலில் இருப்பவன், सनातन:-எப்பொழுதும் இருப்பவன். अहं நான், अपरोक्षस्वरूप:-நேரில் காண்கிற ஸ்வருபமுள்ளவன். अहं நான், अव्यय:-அழிவற்ற, अहमेव-நான்தான்.

நான் அவயவம் அற்றவன், நான் செய்கைகளற்றவன், எல்லா வஸ்து ஸ்வருபமாயிருப்பவன், எல்லாவற்றிற்கும் முன்னுலிருப்பவன், எப்பொழுதும் இருப்பவன், பிரத்யக்ஷமாக விளங்கும் ஸ்வருபமுள்ளவன், நான் அழிவற்ற நானே. (12)

द्वन्द्वादिसाक्षिरूपोऽहमचलोऽहं सनातनः ।
सर्वसाक्षिस्वरूपोऽहमहमेवाहमव्ययः ॥ १३ ॥

த்வந்த்வாதி ஸாக்ஷி ரூபோஹம் அசலோஹம்
ஸநாதந: ।
ஸர்வஸாக்ஷி ஸ்வருபோஹம் அஹமேவாஹமவ்யய: ॥

अहं-நான், द्वन्द्वादिसाक्षिरूप:-சோகம், மோஹம், ஸுகம், துக்கம் முதலான த்வந்த்வம் முதலியவைகளை பிரகாசப்படுத்துகிற ஸாக்ஷிஸ்வருபன். अहं-நான், अचल:-அசைவற்றவன். सनातन:-எப்பொழுதுமிருப்பவன், अहं நான், सर्वसाक्षिस्वरूप:-எல்லாவற்றிற்கும் ஸாக்ஷியான ஸ்வருபமுள்ளவன். अहं நான், अव्यय:-அழிவற்ற, अहमेव-நான்தான்.

நான் ஸுக துக்கங்கள் முதலான த்வந்த்வம் முதலானவற்றிற்கு ஸாக்ஷியான ஸ்வருபம், நான் அசையாதவன், எப்

பொழுதும் இருப்பவன், நான் எல்லாவற்றையும் நேரில் பார்க்கும் ஸாக்ஷி ஸ்வரூபன், நான் அழிவற்ற நானே. (13)

प्रज्ञानघन एवाहं विज्ञानघन एव च ।
अकर्ताऽहमभोक्ताऽहमहमेवाहमव्ययः ॥ १४ ॥

ப்ரஜ்ஞாந கந ஏவாஹம் விஜ்ஞான கந ஏவ ச ।
அகர்த்தாஹ மபோக்தாஹம் அஹமேவாஹ மவ்யய: ॥

अहं-நான், प्रज्ञानघन एव கெட்டியான ப்ரஜ்ஞான ஸ்வரூபன் தான். विज्ञानघन एव-கெட்டியான விஜ்ஞான ஸ்வரூபன் தான். अहं-நான், अकर्ता-செய்கிறவனல்ல. अहं-நான், अभोक्ता-அனுபவிக்கிறவனல்ல. अहं நான், अव्ययः-அழியாத, अहमेव-நான் தான்.

நான் கற்கண்டுக் கட்டிபோல் கெட்டியான ப்ரஜ்ஞான ஸ்வரூபமே, கெட்டியான விஜ்ஞாந ஸ்வரூபமே. நான் கார்யத்தைச் செய்கிறவனல்ல, நான் பலனையனுபவிக்கிறவனல்ல, நான் அழிவற்ற நானே. (14)

निराधारस्वरूपोऽहं सर्वाधारोऽहमेव च ।
आप्तकामस्वरूपोऽहमहमेवाहमव्ययः ॥ १५ ॥

நிராதார ஸ்வரூபோஹம் ஸர்வாதாரோஹமேவ ச ।
ஆப்த காம ஸ்வரூபோஹம் அஹமேவாஹமவ்யய: ॥

अहं-நான், निराधारस्वरूपः-ஆதாரமில்லாத ஸ்வரூபம். अहं-நான், सर्वाधार एव च-எல்லாவற்றிற்கும் ஆதாரமாகவே இருப்பவன். अहं-நான், आप्तकामस्वरूपः-எல்லா விருப்பங்களையும் அடைந்த ஸ்வரூபம், अहं-நான், अव्ययः-அழிவற்ற, अहमेव-நான் தான்.

நான் ஆதாரமில்லாத ஸ்வரூபம். (எனக்கு ஆதாரமில்லை) நான் எல்லாவற்றிற்கும் ஆதாரம், எல்லா அபீஷ்டங்களையும் அடைந்த ஸ்வரூபம், நான் அழிவற்ற நானேதான். (15)

तापत्रयविनिर्मुक्तो देहत्रयविलक्षणः ।
अवस्थात्रयसाक्ष्यस्मि चाहमेवाहमव्ययः ॥ १६ ॥

தாப த்ரய விநிர்முக்தோ தேஹ த்ரய விலக்ஷண: I
அவஸ்தா த்ரய ஸாக்ஷ்யஸ்மி சாஹ மேவாஹமவ்யய: II

अहं-நான், तापत्रयविनिर्मुक्तः-மூன்று தாபங்களிலிருந்து விடுபட்டவன். देहत्रयविलक्षणः-மூன்று தேஹங்களைக் காட்டிலும் வேறுபட்டவன். अवस्थात्रयसाक्षी अस्मि- மூன்று அவஸ்தைகளுக்கும் ஸாக்ஷியாக இருக்கிறேன். (நான்) अव्ययः-அழிவற்ற, अहमेव-நான்தான்.

ஆத்யாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம் என்னும் மூன்றுவித தாபங்களிலிருந்தும் நான் விடுபட்டவன். ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம் என்னும் மூன்றுவித சரீரங்களிலிருந்தும் வேறுபட்ட தன்மையுள்ளவன், (நான் இந்த சரீரங்கள் அல்ல) ஜாகரம், ஸ்வப்னம், ஸுஷுப்தி என்னும் மூன்று அவஸ்தைகளையும் நேரில் பார்க்கும் ஸாக்ஷியாக இருக்கிறேன். இந்த அவஸ்தைகளோடும் இவைகளுடன் கூடிய சரீரங்களோடும் எனக்கு ஸம்பந்தமில்லை. நான் அழிவற்ற நானே. (16)

दृग्दृश्यौ द्वौ पदार्थौ स्तः परस्परविलक्षणौ ।
दृग्ब्रह्म दृश्यं मायेति सर्ववेदान्तडिण्डिमः ॥ १७ ॥

த்ருக் த்ருச்யௌ த்வௌ பதார்த்தௌ ஸ்த:
பரஸ்பர விலக்ஷணௌ I
த்ருக் ப்ரஹ்ம த்ருச்யம் மாயேதி ஸர்வ வேதாந்த
டிண்டிம: II

परस्परविलक्षणौ-ஒன்றுக்கொன்று வேறுபட்ட தன்மையுள்ள, दृग्दृश्यौ-த்ருக், த்ருச்யம் என்ற, द्वौ पदार्थौ-இரண்டு பதார்த்தங்கள், स्तः-உள்ளன (இவற்றில்), दृक्-அறிவு, ब्रह्म-ப்ரஹ்மம், दृश्यं-அறியப்படுவது, माया-மாயை, इति-என்பது, सर्ववेदान्तडिण्डिमः-எல்லா வேதாந்தங்களாகிற டிண்டிம வாத்யத்தின் கோஷம்.

த்ருக் (அறிவு) த்ருச்யம் (அறியப்படுவது) என்று வெவ்வேருன, மாறுபட்ட தன்மையுள்ள இரண்டு வஸ்துக்கள் உள்ளன. இவற்றில் ப்ரஹ்மம் த்ருக் (ஞானம்), மாயை த்ருச்யம் (அறியப்படுவது) என்று எல்லா வேதாந்தங்களாகிற டிண்டிமம் பறைசாற்றுகிறது. (17)

अहं साक्षीति यो विद्याद्विविच्यैवं पुनः पुनः ।
स एव मुक्तः सन् विद्वानिति वेदान्तडिण्डिमः ॥ १८ ॥

அஹம் ஸாக்ஷீதி யோ வித்யாத் விவிச்யைவம் புந: புந: ।
ஸ ஏவ முக்த: ஸன் வித்வானிதி வேதாந்த டிண்டிம: ॥

एवं இவ்வாறு, पुनः पुनः-அடிக்கடி, विविच्य-பிரித்து, अहं साक्षी-நான், ஸாக்ஷி, इति-என்று, यः-எவன், विद्यात्-அறிந்துகொள்கிருனே, सः-அந்த, सन् विद्वानेव-நல்ல ஞானிதான், मुक्तः-முக்தன், इति-என்பது, वेदान्तडिण्डिमः-வேதாந்தங்களாகிற டிண்டிம வாத்ய கோஷம்.

எவன் இவ்வாறு திருப்பித் திருப்பி விவேசனம் செய்து (பிரித்து) நான் ஸாக்ஷி என்று அறிந்துகொள்கிருனே, அந்த நல்ல வித்வான்தான் முக்தன் என்று வேதாந்த டிண்டிமம் கோஷிக்கிறது. (18)

घटकुड्यादिकं सर्वं मृत्तिकामात्रमेव च ।
तद्वद्ब्रह्म जगत्सर्वमिति वेदान्तडिण्डिमः ॥ १९ ॥

கட குட்யாதிகம் ஸர்வம் ம்ருத்திகாமாத்ரமேவ ச ।
தத்வத் ப்ரஹ்ம ஜகத் ஸர்வமிதி வேதாந்த டிண்டிம: ॥

घटकुड्यादिकं सर्वं-குடம், சுவர் முதலியவை எல்லாம், मृत्तिकामात्रमेव-மண்ணுகமட்டும்தான் உள்ளது. तद्वत्-அதுபோல், जगत् सर्वं-பிரபஞ்சம் எல்லாம், ब्रह्म-ப்ரஹ்மம், इति-என்பது, वेदान्तडिण्डिमः-வேதாந்தங்களாகிற டிண்டிம கோஷம்.

மண்ணால் ஆக்கப்பட்ட குடம், சுவர் முதலானவை எல்லாம் மண் மாத்திரம்தான். குடத்திலும் சுவற்றிலும் மண்ணைத் தவிற

வேறு ஒன்றுமில்லை. பெயரும் உருவமும்தான் மாறுபட்டுள்ளது ஆகவே காரணமேதான் காரியமாகத் தோற்றமளிக்கிறதே தவிற வாஸ்தவத்தில் காரணத்தைக் காட்டிலும் காரியம் வேறு அல்ல. இதுபோல் காரியமான பிரபஞ்சமெல்லாம் காரணமான ப்ரஹ்ம ஸ்வரூபம்தான். ப்ரஹ்மத்தைக் காட்டிலும் பிரபஞ்சம் வேறான பொருளல்ல என்று வேதாந்தமாகிற டிண்டிம வாத்யம் கோஷிக்கிறது. (19)

ब्रह्म सत्यं जगन्मिथ्या जीवो ब्रह्मैव नापरः ।
अनेन वेद्यं सच्छास्त्रमिति वेदान्तडिण्डिमः ॥ २० ॥

ப்ரஹ்ம ஸத்யம் ஜகன் மித்யா ஜீவோ
ப்ரஹ்மைவ நாபர: ।
அநேந வேத்யம் ஸத்சாஸ்த்ரம் இதி
வேதாந்த டிண்டிம: ॥

ब्रह्म ப்ரஹ்மம், सत्यं-வாஸ்தவமானது, जगत्-பிரபஞ்சம், मिथ्या-பொய்யானது. जीवः-ஜீவன், ब्रह्मैव-ப்ரஹ்மம்தான், नापरः-வேறு அல்ல. अनेन-இந்த ரீதியாக, सच्छास्त्रं நல்ல சாஸ்திரம், वेद्यं அறியத்தக்கது, इति-என்பது, वेदान्तडिण्डिमः-வேதாந்தங்களாகிற டிண்டிம கோஷம்.

ப்ரஹ்மம் உண்மையானது. பிரபஞ்சம் பொய்யானது. ஜீவன் ப்ரஹ்ம ஸ்வரூபமே, ப்ரஹ்மத்தைக் காட்டிலும் வேறானதல்ல. ஜடப்ரபஞ்சம் முழுவதையும் பொய்யாகவும், சேதன வர்க்கத்தில் ஜீவனை ப்ரஹ்ம ஸ்வரூபமாகவும் அறிந்துவிட்டால் அத்வைத தத்வம்தான் மிஞ்சுகிறது. இந்த அடிப்படையில் தான் நல்ல சாஸ்திரங்களின் கருத்துக்களைத் தெரிந்துகொள்ள வேண்டும். (20)

अन्तर्ज्योतिर्बहिर्ज्योतिः प्रत्यग्ज्योतिः परात्परः ।
ज्योतिर्ज्योतिः स्वयंज्योतिरात्मज्योतिः शिवोऽस्म्यहम् ॥

அந்தர்ஜ்யோதிர் பஹிர்ஜ்யோதி: ப்ரத்யக்ஜ்யோதி:
பராத்பர: ।
ஜ்யோதிர்ஜ்யோதி: ஸ்வயம் ஜ்யோதிராத்ம
ஜ்யோதி: சிவோ஽ஸ்ம்யஹம் ॥

अहं-நான், अन्तर्ज्योतिः-உள்ளே பிரகாசருபன், बहिर्ज्योतिः-வெளியிலும் பிரகாசருபன், प्रत्यग्ज्योतिः-எல்லாவற்றிற்கும் ஆந்தரமான ஜ்யோதி, परात्परः-மேலானதற்கும் மேலானவன், ज्योतिर्ज्योतिः-பிரகாசிக்கிற வஸ்துக்களுக்கும் பிரகாசம் கொடுப்பவன், स्वयंज्योतिः-தானே ப்ரகாசிக்கும் ஜ்யோதி, आत्मज्योतिः-பிரகாசிக்கும் ஆத்மா, शिवः अस्मि-மங்கள ருபனாக, இருக்கிறேன்.

நான் உள்ளே பிரகாச ஸ்வரூபமாகவும் வெளியிலும் ஜ்யோதி ஸ்வரூபமாகவும் எல்லாவற்றிற்கும் உள்ளே விளங்கும் ஜ்யோதி ஸ்வரூபமாகவும் மேலான வஸ்துவிற்கும் மேலானவனாயும், சூரியன் முதலான பிரகாச வஸ்துக்களுக்கும் ப்ரகாசத்தைக் கொடுக்கும் ஜ்யோதியாகவும் வேறொன்றையும் எதிர்பாராமல் தானாகவே பிரகாசிப்பவனாகவும், ஆத்ம ஜ்யோதியாகவும் சிவமாகவும் இருக்கிறேன். (21)

ப்ரஹ்மஞாநவளீ மாலை முற்றும்.

|| श्रीः ||

# || काशीपञ्चकम् ||

## காசீ பஞ்சகம்

[காசீ க்ஷேத்திரத்திற்கு யாத்திரையாகச் சென்று மணிகர்ணிகா கட்டத்தில் கங்கையில் ஸ்னானம் செய்வதும், காசீ க்ஷேத்ரத்தில் ஸாந்நித்யம் கொண்டுள்ள விச்வேச்வரர், பவானீ முதலான தேவதா மூர்த்திகளை தர்சனம் செய்வதும் கயை, ப்ரயாகை முதலான புண்ய ஸ்தலங்களுக்கு யாத்திரை செல்வதும் மிகுந்த புண்யத்தைக்கொடுத்து சித்த சுத்தியைத் தரும். ஆனால் ஞானிகளுக்கு இது அவசியமில்லை. அவனிடத்திலேயே இந்த தீர்த்தங்களும் க்ஷேத்திரங்களும் குடிகொண்டுள்ளன. ஆகையால் ஞானிக்கு தான் இருந்த இடத்திலேயே தீர்த்த யாத்திரா பலன் கிடைத்துவிடுகிறது. தன்னிடத்தில் புண்யதீர்த்த தேவதா அநுஸந்தான ப்ரகாரத்தை இதில் கூறுகிறார்].

मनोनिवृत्तिः परमोपशान्तिः सा तीर्थवर्या मणिकर्णिका च ।
ज्ञानप्रवाहा विमलादिगङ्गा सा काशिकाऽहं निजबोधरूपा ॥ १ ॥

மநோ நிவ்ருத்தி: பரமோபசாந்தி:
ஸா தீர்த்தவர்யா மணிகர்ணிகா ச ।
ஞாநப்ரவாஹா விமலாதிகங்கா
ஸா காசிகாஹம் நிஜ போதரூபா ॥

मनोनिवृत्तिः-உலக விஷயங்களிலிருந்து மனம் திரும்புவதும் (அதனால் ஏற்படும்), परमोपशान्तिः-மேலான சாந்தியும் (ராகத்வேஷாதிகளற்ற நிலையும்), सा-அந்த, तीर्थवर्या-தீர்த்தங்களில் சிறந்ததான, मणिकर्णिका-மணிகர்ணிகையாகும். विमलादिगङ्गा-நிர்மலமான ஆதிகங்கையானது, ज्ञानप्रवाहा நிதித்யாஸன காலத்தில் தொடர்ந்து தாரையாகவரும் ஆத்மாகாரமான விருத்தியை பிரவாஹமாக உடையது. अहं-நான், निजबोधरूपा-ஆத்மஞானரூபமான, सा-அந்த, काशिका-காசீ க்ஷேத்ரம்.

மனம் உலக விஷயங்களை நோக்கிச் செல்லாமல் அதி லிருந்து திரும்பிவிடுவது, ராகப், த்வேஷம் முதலான தோஷங் கள் எல்லாம் நீங்கி மனதில் எவ்வித விகாரமும் ஏற்படாமல் மேலான உபசாந்தி ஏற்படுவது. இதுதான் தீர்த்தங்களில் சிறந்த மணிகர்ணிகையாகும். காசிக்குப்போய் மணிகர்ணிகை யில் ஸ்நானம் செய்வதால் மனதில் சாந்தி ஏற்படவேணும். ஞானிக்கு மனம் சாந்தமாகிவிட்டபடியால் அவனிடத்தில் மணி கர்ணிகையிருப்பதாகக் கூறுகிறுர். மனோநிவிருத்திக்கும் உப சாந்திக்கும் மணிகர்ணிகை காரணமானபடியால் மனோ நிவிருத்தி உபசாந்திகளை மணிகர்ணிகையாகக் கூறுகிறுர். ஞானிகளுக்கு பிரவாஹம்போல் இடைவிடாமல் தொடர்ந்து தாரையாக ஏற்படும் ப்ரஹ்மாகார விருத்தி என்ற ஞான தாரை தான் பரிசுத்தமான ஆதிகங்கை உற்பத்தியாகுமிடத்தில் உள்ள கங்கா பிரவாஹம். என்னிடம் மணிகர்ணிகை இருப்பதால் ஆத்மஞான ரூபமான காசி நான்தான். காசிகா என்னும் சொல் காசீ க்ஷேத்ரத்தைக் குறிப்பிட்டாலும் அந்தச் சொல் லுக்கு பிரகாசம் என்பதுதான் பொருள். ஆத்மஞானம் ப்ரகாச ரூபமானதால் அதையே காசியாகக் கூறுகிறுர். (1)

यस्यामिदं कल्पितमिन्द्रजालं चराचरं भाति मनोविलासम् ।
सच्चित्सुखैका परमात्मरूपा सा काशिकाऽहं निजबोधरूपा ॥ २ ॥

யஸ்யாமிதம் கல்பிதமிந்த்ரஜாலம்
சராசரம் பாதி மநோ விலாஸம் ।
ஸச்சித் ஸுகைகா பரமாத்மரூபா
ஸா காசிகாஹம் நிஜ போதரூபா ॥

यस्यां-எதில், मनोविलासं-மனதின் தோற்றமும், इन्द्रजालं-இந்திரஜாலம்போல்பொய்யானதுமான, इदं இந்த, चराचरं-ஸ்தாவர ஜங்கம ரூபமான பிரபஞ்சம், कल्पितं-ஆரோபிக்கப்பட்டு, भाति-தோன்றுகிறதோ, सा-அந்த, सच्चित्सुखैका-ஸச்சிதானந்தம் ஒன்றையே ஸ்வரூபமாகக் கொண்டதும், परमात्मरूपा-பரமாத்ம ஸ்வரூபமானதும், निजबोधरूपा-ஆத்மஞான ரூபமானதுமான, काशिका-காசி, अहं-நான்.

(அ) காசியில் பவானிக்கு ஆலயம் உள்ளது. அங்கு அவள் ஸாந்நித்யம் கொண்டிருக்கிறுள். காசியில் விச்வேச்வர

பரமாத்மா என்ற ப்ரஹ்மம் ஸச்சிதாநந்தத்தையே ஸ்வரூபமாகக் கொண்டது. அதில் ஸ்தாவரமாயும் ஜங்கமமாயுமுள்ள பிரபஞ்சம் முழுவதும் கல்பிக்கப்பட்டுள்ளது. ஆகையால் இந்திரஜாலம் போல் பிரபஞ்சம் பொய்யானது. வாஸ்தவமல்ல. உள்ளே மனோராஜ்யம்போலும் ஸ்வப்னம் போலும் வெளி பிரபஞ்சமும் மனதின் தோற்றம்தான். ஆகவே பிரபஞ்சத்திற்கு அதிஷ்டானமான ஸச்சிதானந்த பரப்ரஹ்மஸ்வரூபமான சுத்த ஞான ஸ்வரூபனான பிரகாச வடிவமான அந்த காசி நான் (ப்ரஹ்மத்தையே காசியாக வர்ணித்து நானே அந்தக்காசி என்று ஜீவப்ரஹ்மைக்யத்தைக் கூறுகிறார்) (2)

(அ) காசியில் பவானிக்கு ஆலயம் உள்ளது. அங்கு அவள் ஸாந்நித்யம் கொண்டிருக்கிறாள். காசியில் விசுவேசுவர ஸந்நிதியும் உள்ளது. இவர்களையும் ஞானியின் சரீரத்தில் காட்டுகிறார் :—

कोशेषु पञ्चस्वधिराजमाना बुद्धिर्भवानी प्रतिदेहगेहम् ।
साक्षी शिवः सर्वगतोऽन्तरात्मा सा काशिकाऽहं निजबोधरूपा ॥ ३ ॥

கோசேஷு பஞ்சஸ்வதிராஜமாநா
புத்திர் பவானீ ப்ரதிதேஹ கேஹம் ।
ஸாக்ஷீ சிவ: ஸர்வகதோऽந்தராத்மா
ஸா காசிகாஹம் நிஜ போதரூபா ॥

प्रतिदेहगेहं ஒவ்வொரு சரீரமாகிற ஆலயத்திலும், पञ्चसु कोशेषु ஐந்து கோசங்களில், अधिराजमाना விளங்குகிற, बुद्धिः-அந்தஃகரணம், भवानी பவானீ தேவி. साक्षी-ஸம்பந்தப்படாமல் நேரில் பார்த்துக்கொண்டிருக்கும், अन्तरात्मा-உள்ளே விளங்கும் ஆத்மா, सर्वगतः-எங்குமுள்ள, शिवः-விச்வேச்வரர் (ஆகவே), निजबोधरूपा-ஆத்மஞான ரூபமான, सा-அந்த, काशिका-காசி, अहं-நான்.

ஒவ்வொரு தேஹமும் ஒவ்வொரு ஆலயம். ஒவ்வொரு தேஹத்திலுமுள்ள புத்திதான் பவானி. இந்த புத்தி அன்னமயம் முதலான ஐந்து கோசங்களிலும் பிரகாசித்துக்கொண்

டிருக்கிறது. இந்த கோசங்களை தான் என்று ஜீவன் பாவனை செய்யும்படி புத்தி செய்கிறது. புத்தியுடன் அக்ஞானத்தால் ஒன்றாகக் கலந்த ஆத்மா ஜீவன் ஐந்து கோசங்களுடன் ஒன்றாகக் கலந்து ஜீவன் ப்ரகாசிப்பதால் புத்தியும் அவற்றில் பிரகாசிப்பதாகக் கூறுகிறார். புத்தியாலேயே அநாத்மாவான கோசங்களை ஆத்மா என்று ஜீவன் எண்ணுவதால் புத்தியை மாயா சக்திரூபிணியான பவானியாகக் கூறினார். உள்ளே இருந்துகொண்டு எல்லாவற்றையும் நேரில் பார்த்துக்கொண் டிருக்கும் பிரத்யகாத்மா, எங்குமுள்ள சிவம் (பிரஹ்மம்). அவர் சுத்த ஞானஸ்வரூபமாக பிரகாசித்துக்கொண்டிருக்கிறார். நான்தான் சுத்த ஞானப்ரகாச வடிவ பரப்ரஹ்ம ரூபமான காசி. நான் கோசங்களுமல்ல மாயாகார்யமான புத்தியுமல்ல. நானே ப்ரஹ்மம்.

(3)

काश्यां हि काशते काशी काशी सर्वप्रकाशिका ।
सा काशी विदिता येन तेन प्राप्ता हि काशिका ॥ ४ ॥

காச்யாம் ஹி காசதே காசீ காசீ ஸர்வ ப்ரகாசிகா ।
ஸா காசீ விதிதா யேந தேந ப்ராப்தா ஹி காசிகா ॥

काश्यां-ஆத்மப்ரகாசத்துடன்கூடிய சரீரத்தில், काशी-பிரத்யகாத்மா, काशते-பிரகாசிக்கிறது. काशी-பிரத்யகாத்மா, सर्वप्रकाशिका-எல்லாவற்றையும் பிரகாசிக்கச் செய்யும் பரமாத்மா, सा-அந்த, काशी-ப்ரத்யகாத்ம ரூபமான பரமாத்மா, येन-எவரால், विदिता-அறியப் பட்டதோ, तेन-அவரால், काशिका-ப்ரஹ்ம காசீ, प्राप्ता-அடையப்பட்டது.

ஆத்ம ப்ரகாசம் உள்ளேயிருந்துகொண்டு சரீரத்திற்கும் பிரகாசத்தைக்கொடுப்பதால் சரீரமும் காசிதான். சரீரமாகிற காசியில் ஞானஸ்வரூபமான ஆத்மா தானாகவே பிரகாசித்துக் கொண்டிருக்கிறது. ஆகவே ஸ்வயம்பிரகாசமான ஆத்மா தான் வாஸ்தவமான காசி. சரீரம் முழுவதையும் பிரகாசிக்கச் செய்கிற ப்ரத்யகாத்மா என்ற காசி வாஸ்தவத்தில் எல்லா சரீரங்களையும் பிரபஞ்சமெல்லாவற்றையும் பிரகாசிக்கச்செய்கிற பரப்ரஹ்மமே. பரப்ரஹ்மரூபமான காசியை 'நான்தான்'

என்று அபிந்நமாக எவன் அறிகிருனே அவன் அந்த ப்ரஹ்ம காசியையடைந்துவிடுகிருன். ப்ரஹ்மமாக ஆய்விடுகிருன். இங்கு சரீரத்தை கௌணமாக காசி என்று கூறினர். காசி என்ற சொல் முக்ய வ்ருத்தியால் பிரத்யகாத்மாவையும், பரமாத்மாவையும் ப்ரஹ்மபாவம் என்ற மோக்ஷத்தையும் குறிப் பிடுகிறது. ஆகவே மூன்றும் ஒன்றுதான் வெவ்வேறு அல்ல என்று தாத்பர்யம். (4)

काशीक्षेत्रं शरीरं त्रिभुवनजननी व्यापिनी ज्ञानगङ्गा
भक्तिः श्रद्धा गयेयं निजगुरुचरणध्यानयोगः प्रयागः ।
विश्वेशोऽयं तुरीयः सकलजनमनःसाक्षिभूतोऽन्तरात्मा
देहे सर्वं मदीये यदि वसति पुनस्तीर्थमन्यत्किमस्ति ॥ ५ ॥

காசீக்ஷேத்ரம் சரீரம் த்ரிபுவந ஜநநீ வ்யாபிநீ
ஞாநகங்கா
பக்தி: ச்ரத்தா கயேயம் நிஜ குரு சரண
த்யாநயோக: ப்ரயாக: ।
விச்வேசோயம் துரீய: ஸகல ஜந மந:
ஸாக்ஷிபூதோந்தராத்மா
தேஹே ஸர்வம் மதீயே யதி வஸதி புந:
தீர்த்தமந்யத் கிமஸ்தி ॥

शरीरं-எனது சரீரம், काशीक्षेत्रं-காசீ க்ஷேத்ரம். ज्ञानगङ्गा-ஆத்மஞானம் என்னும் கங்கை, त्रिभुवनजननी-மூவுலகையும் போஷிக்கும் தாயாராக, व्यापिनी-எங்கும் பரவியுள்ளது. भक्तिः-பக்தியும், श्रद्धा-சிரத்தையும், इयं-இந்த, गया-கயா-க்ஷேத்ரம், निजगुरुचरणध्यानयोगः-தனது ஆசார்யரின் பாதாரவிந்தங்களை தியானம் செய்வதில் மனதைச் செலுத்துவது, प्रयागः-பிரயாக க்ஷேத்ரம், तुरीयः-துரீயமாகவும், सकलजनमनस्साक्षिभूतः-எல்லா ஜனங்களுடைய மனதிலும் ஸாக்ஷியாக இருப்பவருமான, अयं-இந்த, अन्तरात्मा-உள்ளே விளங்கும் பிரத்யகாத்மா, विश्वेशः-விச்வேச்வரர் (இவ்வாறு), मदीये देहे-என்

னுடையதான சரீரத்தில், सर्वं-எல்லாம், यदि वसति-வஸிக்குமானால், अन्यत्-வேறு, तीर्थं-தீர்த்தம், किमस्ति-என்ன இருக்கிறது?

ஆத்ம சைதன்ய பிரகாசத்துடன் கூடியிருப்பதால் நம் சரீரமே காசீ க்ஷேத்ரம். ஆத்மஞானம், மூவுலகங்களிலும் பரவி பிரவஹித்து எல்லோரையும் போஷிக்கும் மாதாவான கங்காதேவி. பக்தியும் சிரத்தையும் கயை, தனது ஆசார்யரின் பாதகமலங்களை த்யானம் செய்வதில் மனதைச் செலுத்துவது ப்ரயாகை. ஜாக்ரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி என்ற மூன்று அவஸ்தைகளையும் தாண்டி துரீயமாக விளங்குவதும் எல்லா ஜனங்களுடைய மனதிலும் ஸாக்ஷியாக இருப்பதுமான பிரத்யகாத்மா விச்வேச்வரர். இவ்வாறு என் சரீரத்திலேயே எல்லாம் (க்ஷேத்ரம், தீர்த்தம், தேவதை) வஸிக்கும்பொழுது எனக்கு வெளியில் வேறென்ன தீர்த்தம் இருக்கிறது? சரீரத்திலுள்ள இவைகளாலேயே உத்தம பலன் எனக்கு கிடைத்துவிட்டபடியால் நான் வெளியிலுள்ள தீர்த்தங்களுக்கு எதற்காகப் போகவேண்டும்? (5)

காசீ பஞ்சகம் முற்றும்.

# ॥ प्रश्नोत्तररत्नमालिका ॥

## ப்ரச்நோத்தர ரத்நமாலிகா

**कः खलु नालंक्रियते दृष्टादृष्टार्थसाधनपटीयान् ।**
**अमुया कण्ठस्थितया प्रश्नोत्तररत्नमालिकया ॥ १ ॥**

க: கலு நாலங்க்ரியதே
த்ருஷ்டாத்ருஷ்டார்த்த ஸாதந படீயான் ।
அமுயா கண்ட ஸ்திதயா
ப்ரச்நோத்தர ரத்ந மாலிகயா ॥

**दृष्टादृष्टार्थसाधनपटीयान्**-திருஷ்டமாயும் அதிருஷ்டமாயுமுள்ள விஷயங்களை ஸம்பாதிப்பதில் திறமையுள்ள, **कः खलु**-எவன்தான், **कण्ठस्थितया**-கழுத்தில் தரித்துள்ள, **अमुया** இந்த, **प्रश्नोत्तररत्नमालिकया**-பிரச்நோத்தர ரத்ன மாலையினால், **न अलंक्रियते**-அலங்கரிக்கப்படவில்லை.

இவ்வுலகிலுள்ள திருஷ்டமான (கண்ணால் காணக்கூடிய) ஸுகபோகங்களையும் பரலோகத்திலுள்ள அதிருஷ்டமான (இப்பொழுது காணமுடியாத) ஸுகபோகங்களையும் அடைவதற்கு வேண்டிய ஸாதனங்களை ஸம்பாதிப்பதில் ஒருவனுக்கு திறமையிருக்குமானால் கட்டாயம் அவன் இந்த ப்ரச்நோத்தர ரத்னமாலிகையை தன் கழுத்தில் தரித்துக்கொண்டு தன்னை அலங்கரித்துக்கொள்வான். கேள்வி-பதில் ரூபமாக அமைந்துள்ள இந்நூலில் ரத்னம்போன்ற பல கேள்விகளும் பதில்களும் இருப்பதால் பல ரத்னங்கள் கோர்க்கப்பட்ட மாலை இது. இதிலுள்ள சுலோகங்களை நெட்டுருப்பண்ணி இம்மாலையைக் கண்டஸ்தமாக வைத்துக்கொள்வதுடன் இதன் கருத்துக்களையும் நன்கு புரிந்துகொண்டு மனதில் தரித்துக் கொண்டால்தான் இம்மாலை இவனுக்கு அலங்காரமாகும். இங்கு காட்டிய பதிலில் கூறியபடி வாழ்க்கையை நடத்தி வந்தால் இஹலோக ஸுகத்தையும் பரலோக ஸுகத்தையும் அடையலாம்.

भगवन्किमुपादेयं गुरुवचनं हेयमपि च किमकार्यम् ।
को गुरुरधिगततत्त्वः शिष्यहितायोद्यतः सततम् ॥ २ ॥

பகவன் கிமுபாதேயம்
குருவசநம் ஹேயமபி ச கிமகார்யம் ।
கோ குரு: அதிகததத்வ:
சிஷ்ய ஹிதாய உத்யத: ஸததம் ॥

भगवन् किं उपादेयम्-பகவானே, எது ஏற்றுக்கொள்ளத் தக்கது ?

गुरुवचनम्-குருவின் வார்த்தை

हेयमपि च किम्-தள்ளத்தகுந்தது எது ?

अकार्यं செய்யத்தகாதது

को गुरुः ?-யார் குரு ?

अधिगततत्त्वः-உண்மையை அறிந்தவராயும்

सततं शिष्यहिताय उद्यतः-எப்பொழுதும் சிஷ்யர்களின் நன்மைக்காக முயற்சிப்பவராயும் இருப்பவர்.

நமக்கு நன்மை புரிபவர் ஆசார்யார். நம் நன்மையைக் கருதி நமக்கு அவர் உத்தரவு செய்வார். சிறிதும் ஆலோசியாமல் குரு சொன்ன வாக்யத்தை ஏற்றுக்கொண்டு அதன்படி நடக்கவேண்டும். அப்பொழுது நாம் நன்மையை அடையலாம்.

எதைச் செய்யக்கூடாது என்று சாஸ்திரங்களில் தடுக்கப்பட்டிருக்கிறதோ அதை இதுவரை தெரியாமல் செய்து வந்தாலும் விட்டுவிட வேண்டும். இனி செய்யக்கூடாது. அதனால் பின்னர் கட்டாயம் தீங்குகள் ஏற்படும்.

தான் உண்மையை நன்கு அறிந்து சிஷ்யன் நன்மையை அடைவதற்காக எப்பொழுதும் முயற்சிக்கிறவன்தான் குருவாக இருக்கத் தகுதியுள்ளவன். இத்தகுதியில்லாதவர் குருவாக ஆகமாட்டார்,

(2)

त्वरितं किं कर्तव्यं विदुषां संसारसन्ततिच्छेदः ।
किं मोक्षतरोर्बीजं सम्यग्ज्ञानं क्रियासिद्धम् ॥ ३ ॥

த்வரிதம் கிம் கர்தவ்யம்
விதுஷாம் ஸம்ஸார ஸந்ததிச்சேத: 1
கிம் மோக்ஷ தரோர் பீஜம்
ஸம்யக் ஞானம் க்ரியா ஸித்தம் 11

विदुषां त्वरितं किं कर्तव्यम्-வித்வான்களுக்கு சீக்கிரம் எது செய்யத்தக்கது?

संसारसन्ततिच्छेद:-ஸம்ஸாரம் தொடர்ந்து வருவதை அறுப்பது

मोक्षतरो: किं बीजम्-மோக்ஷம் என்னும் மரத்திற்கு விதை எது?

क्रियासिद्धं सम्यग्ज्ञानम्-ஸாதனனுஷ்டானத்தால் ஏற்படும் தத்வஞானம்

படித்தவன் பிறவி-மரணம் என்னும் ஸம்ஸாரம் தொடர்ந்து வருவதை வெகு சீக்கிரம் துண்டித்துவிடவேண்டும் மறுபடியும் தொடர்ந்து பிறவி மரணம் வராமலிருப்பதற்குத் தகுந்த காரியங்களை காலதாமதமில்லாமல் சீக்கிரம் செய்யவேண்டும்.

நிஷ்காம கர்மானுஷ்டானம், சிரவண மனன நிதித்யாஸனங்கள் முதலான ஸாதனங்களை அனுஷ்டித்து அதனால் ஏற்பட்ட நல்ல ஞானம் (உண்மையான ஆத்மஞானம்) மோக்ஷமென்னும் மரத்திற்கு விதையாகும். பூமியில் விதையை ஊன்றினால் மரம் முளைப்பதுபோல் தத்வ ஞானமிருந்தால் கட்டாயம் மோக்ஷம் கிடைக்கும். (3)

कः पथ्यतरो धर्मः कः शुचिरिह यस्य मानसं शुद्धम् ।
कः पण्डितो विवेकी किं विषमवधीरणा गुरुषु ॥ ४ ॥

க: பத்யதரோ தர்ம:
க: சுசிரிஹ யஸ்ய மாநஸம் சுத்தம் 1
க: பண்டிதோ விவேகீ
கிம் விஷம் அவதீரணா குருஷு 11

कः पथ्यतरः- மிகவும் ஹிதமானது எது ?

धर्मः-தர்மம்

इह शुचिः- कः-இங்கு சுத்தமானவன் யார் ?

यस्य मानसं शुद्धं எவனுடைய மனம் சுத்தமாயிருக்கிறதோ

पण्डितः कः ?- பண்டிதர் யார் ?

विवेकी பகுத்தறிவுள்ளவன்

किं विषम्-எது விஷம் ?

गुरुषु अवधीरणा-பெரியோர்களிடம் அவமதித்தல்

உலகில் நமக்கு மிகவும் ஹிதமானது தர்மம்தான். இது தான் நன்மையைத் தரும். அதர்மம் ப்ரியமாயிருந்தாலும் தீமையை விளைவிக்கும். எவனுக்குக் காம க்ரோதாதி தோஷங்கள் நீங்கி மனது தூய்மை பெற்றுள்ளதோ, அவன் தான் சுத்தன். சரீரம் சுத்தமாயிருந்தாலும் மனஸ் சுத்தமாக இல்லாவிட்டால் அவன் அசுத்தன். புறத்தூய்மையும் வேண்டியதுதான். ஆனாலும் அகத்தூய்மை முக்யமானது.

இது செய்யத்தகுந்தது, இது செய்யத்தகாதது என்ற விவேகமுள்ளவன்தான் பண்டிதன். விவேகமில்லாவிட்டால் படித்தும் பயனில்லை. குரு முதலான பெரியோர்களை அவமதிப்பதுதான் விஷம். அழிவைத் தரும் மற்ற விஷங்களைப் போக்கிவிடலாம். ஆனால் இதிலிருந்து தப்பமுடியாது. (4)

किं संसारे सारं बहुशोऽपि विचिन्त्यमानमिदमेव ।
किं मनुजेष्विष्टतमं स्वपरहितायोद्यतं जन्म ॥ ५ ॥

கிம் ஸம்ஸாரே ஸாரம்
பஹுசோபி விசிந்த்யமாநம் இதமேவ 1
கிம் மநுஜேஷு இஷ்டதமம்
ஸ்வ பர ஹிதாய உத்யதம் ஜந்ம 11

संसारे किं सारम्-ஸம்ஸாரத்தில் எது ஸாரம் ?

बहुशोऽपि विचिन्त्यमानं इदमेव-பலவாருக ஆராயப்படுவது என்ற இதுதான்

मनुजेषु किं इष्टतमं-மனிதர்களில் மிகவும் விரும்பத் தக்கது எது ?

स्वपरहिताय उद्यतं जन्म-தனக்கும் பிறருக்கும் நன்மைக் காக முயற்சிக்கும் பிறவி.

ஸம்ஸாரத்தில் ஸாரமானது, இதைப்பற்றி பலதடவை நன்கு சிந்திப்பதுதான். சிந்திக்கச்சிந்திக்க ப்ரபஞ்சத்தில் உள்ள தோஷங்களெல்லாம் நன்ருகத் தெரிந்து வைராக்யம் ஏற்படும். ஆலோசிக்காதவர்களுக்கு ஆசை வலுப்படும். தனக்கும் பிறருக்கும் நன்மை புரிவதில் ஈடுபடுவதுதான் பிறவியின் பயனுகும். இது எல்லாராலும் வேண்டத்தக்கது.

मदिरेव मोहजनकः कः स्नेहः के च दस्यवो विषयाः ।
का भववल्ली तृष्णा को वैरी यस्त्वनुद्योगः ॥ ६ ॥

மதிரேவ மோஹ ஜநக: க:
ஸ்நேஹ: கே ச தஸ்யவோ விஷயா: ।
கா பவவல்லீ த்ருஷ்ணு
கோ வைரீ யஸ்து அநுத்யோக: ॥

मदिरा इव मोहजनकः कः-மத்யத்தைப்போல் மதிமயக் கத்தை உண்டுபண்ணுவது எது ?

स्नेहः-அபிமானம்

दस्यवः के திருடர்கள் யார் ?

विषयाः விஷயங்கள்

भववल्ली का-பிறப்பைக் கொடுக்கும் கொடி எது ?

तृष्णा-ஆசை

वैरी कः?-எதிரி யார் ?

यस्तु अनुद्योगः-முயற்சியில்லாமை எதுவோ (அது)

கள்ளைப்போல மனதில் மயக்கத்தை உண்டுபண்ணுவது அபிமானம்தான். உலக விஷயங்கள் மனதை மயக்கி விவேகம் முதலான சிறந்த பொருள்களை அபஹரிப்பதால் திருடர்கள். ஆசைதான் பிறவியெனும் பலனைக்கொடுக்கும்

கொடி. ஆசையால்தான் பிறவி ஏற்படுகிறது. நல்ல காரி யங்களைச் செய்வதில் முயற்சிக்காமல் இருப்பதுதான் நம் மிடமே இருந்துகொண்டு நம்மை அழிக்கும் எதிரி. (6)

कस्माद्भयमिह मरणादन्धादिह को विशिष्यते रागी ।
कः शूरो यो ललनालोचनबाणैर्न च व्यथितः ॥ ७ ॥

கஸ்மாத் பயம் இஹ மரணாத்
அந்தாதிஹ கோ விசிஷ்யதே ராகீ ।
க: சூரோ யோ லலநா
லோசந பாணைர் ந ச வ்யதித: ॥

इह कस्मात् भयम्-இங்கு எதிலிருந்து பயம் ?

मरणात्-சாவிலிருந்து

इह अन्धात् कः विशिष्यते-இங்கு குருடனைக்காட்டிலும் எவன் மேற்பட்டவனாயிருக்கிறான் !

रागी-ஆசையுள்ளவன்

शूरः कः ?-சூரன் யார் ?

यः ललनालोचनबाणैः न च व्यथितः-எவன் பெண்களின் கடாக்ஷமாகிற அம்புகளால் அடிபடாதவனே

மரணத்திலிருந்துதான் எல்லோருக்கும் பயம் ஏற்படுகிறது. ஆசையுள்ளவனுக்கு விவேகம் என்னும் கண் பார்வை நீங்கி விடுகிறபடியால் இவனே பெரிய குருடன். அழகிய பெண் களின் கண்களாகிற பாணத்தால் துன்பப்படாதவன் சூரன். சரீரத்தில் வலுவிருந்தாலும் பெண்களின் பார்வைக்கு மயங்கி விட்டால் அவன் கோழை. (7)

पातुं कर्णाञ्जलिभिः किममृतमिह युज्यते सदुपदेशः ।
किं गुरुताया मूलं यदेतदप्रार्थनं नाम ॥ ८ ॥

பாதும் கர்ணாஞ்ஜலிபி: கிம்
அம்ருதமிஹ யுஜ்யதே ஸதுபதேச: ।
கிம் குருதாயா மூலம்
யதேததப்ரார்த்தநம் நாம ॥

**इह कर्णाञ्जलिभिः पातुं**-இங்கு அஞ்ஜலிபோன்ற காது களால் குடிப்பதற்கு

**किं अमृतं युज्यते**-எந்த அமிருதம் தகுதியுள்ளது ?

**सदुपदेशः**-நல்லோர்களின் உபதேசம்

**गुरुतायाः मूलं किम्**-பெருந்தன்மைக்கு மூல காரணம் எது ?

**यत् अप्रार्थनं नाम एतत्**-வேண்டாமலிருப்பது என்பது எதுவோ இது.

நல்லோர்களின் உபதேச வார்த்தை அமிருதம். அமிருதம் கிடைத்தால் இரு கைகளாலும் நிறையப் பருகுவதில் ப்ரீதியுடன் ஈடுபடுவதுபோல், இரு காதுகளாலும் ஸாதுக்களின் உபதேசத்தை நிறையக் கேட்கவேண்டும். போதுமென்ற எண்ணமே ஏற்படக்கூடாது. பிறரிடம் யாசிக்காமலிருப்பது தான் பெருந்தன்மைக்கு மூலகாரணம். (8)

किं गहनं स्त्रीचरितं कश्चतुरो यो न खण्डितस्तेन ।
किं दुःखमसंतोषः किं लाघवमधमतो याच्ञा ॥ ९ ॥

கிம் கஹநம் ஸ்த்ரீசரிதம்
கஸ்சதுரோ யோ ந கண்டிதஸ்தேந ।
கிம் து:கம் அஸந்தோஷ:
கிம் லாகவம் அதமதோ யாச்ஞா ॥

**गहनं किम्**-அறியமுடியாதது எது ?

**स्त्रीचरितम्**-பெண்களின் நடத்தை

**कः चतुरः**-எவன் திறமைசாலி ?

**यः तेन न खण्डितः**-எவன் அந்த ஸ்திரீகளின் நடத்தையால் பேதிக்கப்படவில்லையோ அவன்.

**दुःखं किम्**-துன்பம் எது ?

**असन्तोषः**-ஸந்தோஷமில்லாமை

**किं लाघवम्**-சிறுமைத்தனம் எது ?

**अधमतो याच्ञा**-தாழ்ந்தவனிடம் யாசிப்பது.

பெண்களின் நடத்தையை ஸுலபமாகப் புரிந்துகொள்ள முடியாது. பெண்களின் லீலாவிலாஸங்களால் எவன் மனம்

பேதிக்கவில்லையோ, அவனே திறமையுள்ளவன். மனதில் ஸந்தோஷம் (திருப்தி) இல்லாமைதான் துன்பம். தாழ்ந்தவர்களிடம் யாசிப்பது அல்பத்தனம். (9)

किं जीवितमनवद्यं किं जाड्यं पाठतोऽप्यनभ्यासः ।
को जागर्ति विवेकी का निद्रा मूढता जन्तोः ॥ १० ॥

கிம் ஜீவிதம் அநவத்யம்
கிம் ஜாட்யம் பாடதோऽப்யநப்யாஸ: ।
கோ ஜாகர்தி விவேகீ
கா நித்ரா மூடதா ஜந்தோ: ॥

किं जीवितम्–எது வாழ்க்கை?
अनवद्यम्–தோஷமில்லாமை
किं जाड्यं–ஜடத்தன்மை எது?
पाठतोपि अनभ्यासः–படிப்பதில் அப்யாஸம் செய்யாமை
को जागर्ति–எவன் விழித்துக்கொண்டிருக்கிறான்?
विवेकी–விவேகமுள்ளவன்
जन्तोः का निद्रा–பிராணிக்கு எது தூக்கம்?
मूढता–மூடத்தன்மை

குற்றமில்லாமல் நடப்பதுதான் சீரிய வாழ்க்கை. வித்யாப்யாஸம் செய்யாமலிருப்பது ஜாட்யம். விவேகமுள்ளவன் எப்பொழுதும் விழித்துக்கொண்டிருக்கிறான். தவறைச் செய்ய மாட்டான். முட்டாள்தனம் தான் தூக்கம். இவன் அறியாமையால் தவறைச் செய்துகொண்டேயிருப்பான். (10)

नलिनीदलगतजलवत्तरलं किं यौवनं धनं चायुः ।
कथय पुनः के शशिनः किरणसमाः सज्जना एव ॥ ११ ॥

நளிநீ தள கத ஜலவத்
தரளம் கிம் யௌவநம் தநம் சாயு: ।
கதய புந: கே சசிந:
கிரணஸமா: ஸஜ்ஜநா ஏவ ॥

नलिनीदलगत जलवत्-தாமரை இலையில் உள்ள ஜலம் போல

तरलं किम्-சஞ்சலமானது எது?

यौवनं धनं आयुश्च-வாலிபப் பருவமும், பணமும், ஆயுளும்

के पुनः शशिनः किरणसमाः कथय-சந்திரனுடைய கிரணத்திற்கு ஸமமானவர்கள் யார்? சொல்.

सज्जना एव-நல்ல மனிதர்கள்தான்.

வாலிபப்பருவம், பொருள், ஆயுள் இம்மூன்றும் நிலைத்து இருக்காது தாமரை இலையிலுள்ள தண்ணீர் உருண்டு ஓடி விடுவதுபோல் இம்மூன்றும் எந்த நிமிஷமும் நம்மைவிட்டு நீங்கிவிடும். சந்திரனுடைய குளிர்ந்த கிரணங்கள் சரீரத்தில் உள்ள தாபத்தைப் போக்கி மனதிற்கு ஆஹ்லாதத்தைக் கொடுப்பதுபோல் ஸாது ஜனங்கள் பிறர் துன்பங்களைப் போக்கி இன்பத்தை உண்டுபண்ணுவதால் இவர்கள் சந்திரனின் நிலவுக்கு ஒப்பானவர்கள். (11)

को नरकः परवशता किं सौख्यं सर्वसङ्गविरतिर्या ।
किं सत्यं भूतहितं प्रियं च किं प्राणिनामसवः ॥ १२ ॥

கோ நரக: பரவசதா
கிம் ஸௌக்யம் ஸர்வ ஸங்க விரதிர் யா ।
கிம் ஸத்யம் பூதஹிதம்
ப்ரியம் ச கிம் ப்ராணிநாம் அஸவ: ॥

नरकः कः-நரகம் எது?

परवशता-பிறருக்குக் கட்டுப்பட்டிருப்பது

सौख्यं किम्-ஸௌக்யம் எது?

या सर्वसङ्गविरतिः-எல்லாப் பற்றுதலையும் ஒழித்து விடுவது எதுவோ (அது)

किं सत्यम्-எது உண்மை?

भूतहितं-பிராணிகளுக்கு நன்மை பயப்பது

प्राणिनां च किं प्रियं-பிராணிகளுக்கு எது பிரியம்?

असवः பிராணன்கள்.

பிறருக்குக் கட்டுப்பட்டிருப்பது நரகம். எல்லாப்பொருள்களிலும் பற்றுக்கொள்ளாமல் வைராக்யத்துடன் இருப்பது ஸௌக்யத்தைக் கொடுக்கும். ப்ராணிகளுக்கு நன்மை பயக்கும் சொல்தான் ஸத்யமாகும். ப்ராணிகளுக்கு மிகவும் ப்ரியமானது ப்ராணன். (12)

कोऽनर्थफलो मानः का सुखदा साधुजनमैत्री ।
सर्वव्यसनविनाशे को दक्षः सर्वथा त्यागी ॥ १३ ॥

கோऽநர்த்த பலோ மாந:
    கா ஸுகதா ஸாது ஜந மைத்ரீ ।
ஸர்வ வ்யஸந விநாசே
    கோ தக்ஷ: ஸர்வதா த்யாகீ ॥

अनर्थफलः कः–துன்பத்தைப் பயனாக உடையது எது?
मानः–அஹங்காரம்
सुखदा का–ஸுகத்தைக் கொடுக்கக்கூடியது எது?
साधुजनमैत्री–ஸாது ஜனங்களின் நட்பு
सर्वव्यसनविनाशे को दक्षः–எல்லா துக்கங்களையும் போக்குவதில் எவன் ஸமர்த்தன்?
सर्वथा त्यागी–எல்லாவிதத்திலும் தியாகம்செய்கிறவன்

கர்வம் கொண்டால் அவனுக்குத் துன்பமேதான் வரும். நல்லோர்களுடன் நட்புக்கொள்வது ஸுகத்தைக் கொடுக்கும். தியாக உணர்ச்சியுள்ளவனுக்கு எல்லாத் துன்பங்களையும் போக்கிக்கொள்ளும் திறமை உண்டு. பற்றுள்ளவர்கள் வேண்டிய பொருள் நீங்கும்போதும் வேண்டாத பொருள் வந்தபோதும் துன்புறுவார்கள். தியாகி எது வந்தாலும் எது போனாலும் சிறிதும் துன்புறமாட்டான். (13)

किं मरणं मूर्खत्वं किं चानर्घं यदवसरे दत्तम् ।
आ मरणात्किं शल्यं प्रच्छन्नं यत्कृतं पापम् ॥ १४ ॥

கிம் மரணம் மூர்கத்வம்
    கிம் சாநர்கம் யதவஸரே தத்தம் ।
ஆமரணாத் கிம் சல்யம்
    ப்ரச்சந்நம் யத் க்ருதம் பாபம் ॥

किं मरणम्- எது மரணம்?
मूर्खत्वं- முட்டாள்தனம்
किं च अनर्घं-எது விலைமதிக்க முடியாதது?
यत् अवसरे दत्तं-தக்க சமயத்தில் எது கொடுக்கப் பட்டதோ அது
आमरणात् किं शल्यम्-சாவுவரை எது துன்புறுத்துவது
प्रच्छन्नं कृतं यत् पापं ரஹஸ்யமாகச் செய்யப்பட்ட பாபம் எதுவோ அது.

மூடத்தன்மையே மரணம். முட்டாளுக்கு அவமானத்தால் மரணம் போன்ற வேதனை எப்பொழுதும் ஏற்பட்டுக் கொண்டேயிருக்கும்.

தக்க சமயத்தில் பிறருக்கு உபயோகப்படும்படியாகக் கொடுக்கும் பொருள் விலை மதிப்பற்றது.

பிறருக்குத் தெரியாமல் ரஹஸ்யமாகச் செய்யும் பாபம் மரணம் வரை உடலில் பாய்ந்த அம்புபோல் மனதைத் துன்புறுத்திக்கொண்டேயிருக்கும். (14)

कुत्र विधेयो यत्नो विद्याभ्यासे सदौषधे दाने ।
अवधीरणा क्व कार्या खलपरयोषित्परधनेषु ॥ १५ ॥

குத்ர விதேயோ யத்ந:
வித்யாப்யாஸே ஸதௌஷதே தாநே l
அவதீரணா க்வ கார்யா
கல பர யோஷித் பரதநேஷு ll

कुत्र यत्नो विधेयः-எதில் முயற்சி செய்யத்தக்கது
विद्याभ्यासे सदौषधे दाने-கல்வி கற்பதிலும், நல்ல மருந்துகளை ஸேவிப்பதிலும், கொடுப்பதிலும்
क्व अवधीरणा कार्या-எதில் அலக்ஷ்யம் செய்யத்தக்கது?
खलपरयोषित्परधनेषु-துஷ்டன், பிறர் மனைவி, பிறர் பொருள் இவைகளில்.

கல்வி கற்பதிலும் நல்ல மருந்துகளை ஸேவிப்பதிலும் பிறருக்குப் பொருள் கொடுப்பதிலும் எப்பொழுதும் முயற்சித்துக்கொண்டே இருக்கவேண்டும்.

துஷ்டன், பிறர் மனைவி, பிறர் பொருள் இவற்றில் மனதைச் செலுத்தக்கூடாது. இவர்களிடம் அலக்ஷ்யமாக உதாஸீனமாக இருக்கவேண்டும். (15)

काऽहर्निशमनुचिन्त्या संसारासारता न तु प्रमदा ।
का प्रेयसी विधेया करुणा दीनेषु सज्जने मैत्री ॥ १६ ॥

காऽஹர்நிசமநுசிந்த்யா
ஸம்ஸாராஸாரதா ந து ப்ரமதா ।
கா ப்ரேயஸீ விதேயா
கருணா தீநேஷு ஸஜ்ஜநேஷு மைத்ரீ ॥

का अहर्निशं अनुचिन्त्या-இரவு பகலாக எது சிந்திக்கத் தக்கது?

संसारासारता-ஸம்ஸாரத்தின் ஸாரமற்ற தன்மை

न तु प्रमदा-ஸ்திரீ எண்ணத்தக்கதல்ல

का प्रेयसी विधेया-மிகவும் பிரியமுள்ளதாகச் செய்யத் தக்கது எது?

दीनेषु करुणा सज्जने मैत्री-ஏழைகளிடம் இரக்கமும், ஸாது ஜனங்களிடம் நட்பும்.

இரவும் பகலும் எப்பொழுதும் இந்த ஸம்ஸாரத்தின் ஸாரமற்ற தன்மையைப்பற்றிச் சிந்தித்துக்கொண்டிருக்க வேண்டும். பெண்களை மனதால் நினைக்கவே கூடாது.

மிகவும் ப்ரியமுள்ளதாகச் செய்யத்தக்கது ஏழைகளிடம் இரக்கம் காட்டுவதும் ஸாது ஜனங்களிடம் நட்புக்கொள்வதும்.

कण्ठगतैरप्यसुभिः कस्य ह्यात्मा न शक्यते जेतुम् ।
मूर्खस्य शङ्कितस्य च विषादिनो वा कृतघ्नस्य ॥ १७ ॥

கண்டகதைரப்யஸுபி:
கஸ்ய ஹ்யாத்மா ந சக்யதே ஜேதும் ।
மூர்க்கஸ்ய சங்கிதஸ்ய ச
விஷாதிநோ வா க்ருதக்நஸ்ய ॥

कण्ठगतैः असुभिरपि-கழுத்தில் வந்துள்ள பிராணன் களாலும்

कस्य आत्मा जेतुं न शक्यते-எவனுடைய ஆத்மா ஜயிப் பதற்கு முடியாது?

विषादिनो वा-விஷத்தைச் சாப்பிட்டவனைப்போல்

मूर्खस्य शंकितस्य कृतघ्नस्य च-முட்டாளுடையவும், ஸந்தே ஹிக்கிறவனுடையவும் நன்றி மறந்தவனுடையவும்.

கழுத்தில் ப்ராணன் வரும்படி எவ்வளவு முயற்சித்த போதிலும் விஷம் சாப்பிட்டவனைப் பிழைக்கும்படிச் செய்ய முடியாததுபோல் முட்டாளையும் ஸந்தேஹப்ரக்ருதியுள்ளவனை யும் நன்றி மறந்தவனையும் நல்வழியில் திருப்பிக் காப்பாற்ற முடியாது. (17)

कः साधुः सद्वृत्तः कमधममाचक्षते त्वसद्वृत्तम् ।
केन जितं जगदेतत्सत्यतितिक्षावता पुंसा ॥ १८ ॥

க: ஸாது: ஸத்வ்ருத்த:
கமதமம் ஆசக்ஷதே த்வஸத்வ்ருத்தம் ॥
கேந ஜிதம் ஜகதேதத்
ஸத்யதிதிக்ஷாவதா பும்ஸா ॥

कः साधुः-யார் ஸாது?

सद्वृत्तः-நல்ல நடத்தையுள்ளவன்

कं अधमं आचक्षते-யாரை அதமனைச் சொல்கிறார்கள்?

असद्वृत्तं-கெட்ட நடத்தையுள்ளவனை

केन एतत् जगत् जितम्-எவனால் இவ்வுலகம் ஜயிக்கப் பட்டது?

सत्यतितिक्षावता पुंसा-உண்மையும் பொறுமையுமுள்ள மனிதனால்

நல்ல நடத்தை உள்ளவன் ஸாது. கெட்ட நடத்தை உள்ளவன் அதமன். உண்மையும் பொறுமையுமுள்ள புருஷன் இவ்வுலகத்தை ஜயித்தவன். (18)

कस्मै नमांसि देवाः कुर्वन्ति दयाप्रधानाय ।
कस्मादुद्वेगः स्यात्संसारारण्यतः सुधियः ॥ १९ ॥

கஸ்மை நமாம்ஸி தேவா:
குர்வந்தி தயாப்ரதாநாய ।
கஸ்மாத் உத்வேக: ஸ்யாத்
ஸம்ஸாராரண்யத: ஸுதிய: ॥

कस्मै देवाः नमांसि कुर्वन्ति-எவனுக்கு தேவர்கள் நமஸ்காரங்களைச் செய்கிறார்கள்?

दयाप्रधानाय-இரக்கத்தை முக்யமாக கொண்டவனுக்கு

सुधियः कस्मात् उद्वेगः स्यात्-நல்ல புத்தியுள்ளவனுக்கு எதிலிருந்து பயம் ஏற்படும்?

संसारारण्यतः-ஸம்ஸாரம் என்னும் காட்டிலிருந்து

இரக்கத்தை ப்ரதானமாகக் கொண்டவனை தேவர்கள் வணங்குகிறார்கள் நற்புத்தி உள்ளவனுக்கு பிறவி மரணமாகிற ஸம்ஸாரம் என்னும் காட்டிலிருந்து தான் பயம். வேறு ஒன்றிலும் அவனுக்குப் பயம் கிடையாது. (19)

कस्य वशे प्राणिगणः सत्यप्रियभाषिणो विनीतस्य ।
क्व स्थातव्यं न्याय्ये पथि दृष्टादृष्टलाभाढ्ये ॥ २० ॥

கஸ்ய வசே ப்ராணிகண:
ஸத்ய ப்ரிய பாஷிணோ விநீதஸ்ய ।
க்வ ஸ்தாதவ்யம் ந்யாய்யே
பதி த்ருஷ்டாத்ருஷ்ட லாபாட்யே ॥

कस्य वशे प्राणिगणः-பிராணிகளின் கூட்டம் யாருக்குக் கட்டுப்பட்டுள்ளது?

सत्यप्रिय भाषिणो विनीतस्य-உண்மையான ப்ரிய வார்த்தையைப் பேசுகிற வணக்கமுள்ளவனுக்கு

क्व स्थातव्यं-எங்கு நிலைபெற்றிருக்கவேண்டும்?

दृष्टादृष्टलाभाढ्ये திருஷ்டமாயும் அதிருஷ்டமாயுமுள்ள பல லாபம் நிறைந்த

न्याय्ये पथि நியாயமான வழியில்.

உண்மையாகவும் பிறருக்கு ப்ரியமாகவும் உள்ள வார்த்தைகளைப் பேசுகிறவனுக்கு எல்லா ஜனங்களும் கட்டுப் பட்டிருப்பார்கள். நியாயமான வழியில் செல்கிறவனுக்கு இவ் வுலகிலும் மேலுலகிலும் நல்ல பலன்கள் நிறையக் கிடைக்கும். ஆகவே நியாயமான வழியை விட்டு விலகிச் செல்லக்கூடாது.

कोऽन्धो योऽकार्यरतः को बधिरो यो हितानि न श्रृणोति ।
को मूको यः काले प्रियाणि वक्तुं न जानाति ॥ २१ ॥

கோऽந்தோ யோऽகார்யரத:
கோ பதிரோ யோ ஹிதானி ந ச்ருணோதி ।
கோ மூகோ ய: காலே
ப்ரியாணி வக்தும் ந ஜாநாதி ॥

कः अन्धः-எவன் குருடன்?
यः अकार्यरतः-எவன் செய்யத்தகாத காரியத்தில் ஈடு பட்டவனோ (அவன்).
को बधिरः-எவன் செவிடன்?
यः हितानि न श्रृणोति-எவன் நன்மை தரும் வார்த்தை களைக் கேட்கவில்லையோ (அவன்)
को मूकः-எவன் ஊமை?
यः काले प्रियाणि वक्तुं न जानाति-எவன் தக்க ஸமயத்தில் ப்ரியத்தைப் பேசத்தெரிந்துகொள்ள வில்லையோ (அவன்).

செய்யத்தகாத காரியத்தைச் செய்வதில் ஈடுபட்டவன் குருடன். ஹிதமான வார்த்தைகளைப் பிறர் சொன்னாலும் கேட்காதவன் செவிடன். தக்க சமயத்தில் ப்ரியமான வார்த்தைகளைப் பேசத்தெரியாதவன் ஊமை. (21)

किं दानमनाकाङ्क्षं किं मित्रं यो निवारयति पापात् ।
कोऽलङ्कारः शीलं किं वाचां मण्डनं सत्यम् ॥ २२ ॥

கிம் தாநமநாகாங்க்ஷம்
கிம் மித்ரம் யோ நிவாரயதி பாபாத் ।
கோऽலங்கார: சீலம்
கிம் வாசாம் மண்டனம் ஸத்யம் ॥

किं दानं எது தானம் ?
अनाकाङ्क्षं ஒன்றையும் விரும்பாமல் (கொடுப்பது.)
किं मित्रं யார் நண்பன் ?
यः पापात् निवारयति-எவன் பாபச்செய்கையிலிருந்து தடுக்கிறானோ (அவன்)
अलङ्कारः कः எது அணிகலன் ?
शीलम्- நல்ல ஸ்வபாவம்
वाचां मण्डनं किम्-வார்த்தைகளுக்கு அலங்காரம் எது?
सत्यम्-உண்மை.

ப்ரதிபலனை எதிர்பாராமல் கொடுப்பதுதான் தானமாகும். பாபச்செய்கையிலிருந்து தன்னைத் தடுப்பவன் தான் நண்பன். நல்ல ஸ்வபாவம்தான் அலங்காரம். உண்மைதான் வாக்குக்கு அணிகலன். (22)

विद्युद्विलसितचपलं किं दुर्जनसंगतिर्युवतयश्च ।
कुलशीलनिष्प्रकम्पाः के कलिकालेऽपि सज्जना एव ॥ २३ ॥

வித்யுத் விலஸித சபலம் கிம்
துர்ஜந ஸங்கதிர் யுவதயஸ்ச ।
குல சீல நிஷ்ப்ரகம்பா: கே
கலி காலேபி ஸஜ்ஜநா ஏவ ॥

विद्युद्विलसितचपलं किम्-மின்னல்போல் சஞ்சலமானது எது ?
दुर्जनसंगतिः युवतयश्च கெட்ட ஜனங்களின் சேர்க்கையும் யுவதிகளும்
कलिकालेपि-கலிகாலத்திலும்
कुलशीलनिष्प्रकम्पाः के-தன் குலதர்மத்திலும் நல்ல ஸ்வபாவத்திலும் மாறுதவர்கள் யார் ?
सज्जना एव-நல்ல ஜனங்கள்தான்.

கெட்ட ஜனங்களின் நட்பு நிலைத்திருக்காது. மின்னல் ஒளிபோல் திடீரென்று நட்பு பகையாக மாறிவிடும். இதுபோல் தான் பெண்களும் சஞ்சல ஸ்வபாவமுள்ளவர்கள். பெண்களின் மனது ஒன்றிலும் நிலைத்திருக்காது. மாறிக்கொண்டேயிருக்கும்.

கலிகாலத்திலும் ஸாதுக்கள் தம் குலம் ஸ்வபாவம் இவை களுக்குத் தக்கபடிதான் நடப்பார்கள். இதிலிருந்து மாற மாட்டார்கள். (23)

चिन्तामणिरिव दुर्लभमिह किं कथयामि तच्चतुर्भद्रम् ।
किं तद्वदन्ति भूयो विधूततमसो विशेषेण ॥ २४ ॥

दानं प्रियवाक्सहितं ज्ञानमगर्वं क्षमान्वितं शौर्यम् ।
वित्तं त्यागसमेतं दुर्लभमेतच्चतुर्भद्रम् ॥ २५ ॥

சிந்தாமணிரிவ துர்லபமிஹ கிம்
கதயாமி தத் சதுர்பத்ரம் ।
கிம் தத் வதந்தி பூயோ
விதூத தமஸோ விசேஷேண ॥

தாநம் ப்ரிய வாக் ஸஹிதம்
ஞானமகர்வம் க்ஷமாந்விதம் சௌர்யம் ।
வித்தம் த்யாக ஸமேதம்
துர்லபமேதத் சதுர்பத்ரம் ॥

चिन्तामणिरिव- நினைத்ததைக் கொடுக்கும் சிந்தாமணி போல்
इह दुर्लभं किम्- இங்கு அடையமுடியாதது எது?
कथयामि-சொல்கிறேன்.
तत् चतुर्भद्रम्- அது (அடையமுடியாதது) சதுர்பத்ரம்.
विधूततमसः- அக்ஞானமில்லாத அறிவாளிகள்
भूयः विशेषेण वदन्ति- திருப்பித்திருப்பி சிறப்பித்துக் கூறுகிறார்களே
किं तत्- அது எது?
प्रियवाक्सहितं दानं- ப்ரியமாகப் பேசி தானம் செய்வது
अगर्वं ज्ञानं- அஹங்காரமில்லாத அறிவு.
क्षमान्वितं शौर्यं- பொறுமையுடன் கூடிய பராக்ரமம்
त्यागसमेतं वित्तं- கொடையுடன் கூடிய பொருள்.
एतत् चतुर्भद्रं दुर्लभं- இந்த நான்கு நன்மை தரும் கார்யங்கள் அடையமுடியாதவை,

நினைத்ததையெல்லாம் கொடுக்கும் சிந்தாமணி ரத்னத்தைப்போல சுலபமாக அடையமுடியாதது 'சதுர்பத்ரம்' (நன்மையைத் தரும் நான்கு காரியங்கள்) பிரியமான வார்த்தை சொல்லி தானம் செய்வது, அஹங்காரமில்லாத அறிவு, பொறுமையோடு கூடின வீர்யம், தியாகத்துடன் கூடிய பணம் இந்நான்கையும் சதுர் பத்ரமென்று அறிவாளிகள் மிகச் சிறப்பித்துக் கூறுகிறார்கள் கடுமையாகப் பேசிக்கொடுக்கும் தானமும், கர்வத்துடன் கூடிய அறிவும், பொறுமையில்லாத வீர்யமும், பிறருக்குக் கொடுக்காமல் வைத்திருக்கும் பணமும் நன்மையைத் தராது தீமையைக் கொடுக்கும். (24–25)

किं शोच्यं कार्पण्यं सति विभवे किं प्रशस्तमौदार्यम् ।
कः पूज्यो विद्वद्भिः स्वभावतः सर्वदा विनीतो यः ॥ २६ ॥

கிம் சோச்யம் கார்பண்யம்
ஸதி விபவே கிம் ப்ரசஸ்தமௌதார்யம் ।
க: பூஜ்யோ வித்வத்பி:
ஸ்வபாவத: ஸர்வதா விநீதோ ய: ॥

किं शोच्यं–எது வருந்தத்தக்கது ?
विभवे सति कार्पण्यं–பணம் இருக்கும்பொழுது கஞ்சத்தனம்
किं प्रशस्तं–எது சிறப்புள்ளது ?
औदार्यं–கொடுக்கும் ஸ்வபாவம்
विद्वद्भिः पूज्यः कः–அறிவாளிகளால் கொண்டாடத் தக்கவன் யார் ?
यः स्वभावतः सर्वदा विनीतः–எவன் இயற்கையாகவே எப்பொழுதும் விநயமுள்ளவனே

கார்பண்யம் (பிறருக்குச் சிறிதும் கொடுக்க மனம் வராமல் இருப்பது) மிகவும் வருந்தத்தக்கது. பணம் இருக்கும்பொழுது உதாரமனதுடன் பிறருக்கு கொடுப்பதுதான் சிலாக்யமானது. இயற்கையாகவே எப்பொழுதும் வணக்கத்துடன் கூடியவன் அறிவாளிகளால் கொண்டாடப்படுகிறான். (26)

कः कुलकमलदिनेशः सति गुणविभवेऽपि यो नम्रः ।
कस्य वशे जगदेतत्प्रियहितवचनस्य धर्मनिरतस्य ॥ २७ ॥

கஃ குல கமல திநேசஃ
ஸதி குண விபவேபி யோ நம்ரஃ ।
கஸ்ய வசே ஜகதேதத்
ப்ரிய ஹித வசநஸ்ய தர்ம நிரதஸ்ய ॥

कुलकमलदिनेशः कः-வம்சமாகிற தாமரையை மலர வைக்கும் சூரியன் யார் ?

गुणविभवे सत्यपि यः नम्रः-நற்குணங்களால் பெருமை யுற்றபோதிலும் எவன் வணக்கமுள்ளவனோ

एतत् जगत्-இந்த உலகம்

कस्य वशे-எவனுக்கு அதீனமாக உள்ளது ?

प्रियहितवचनस्य-பிரியமாயும் ஹிதமாயும் உள்ள வார்த்தை பேசுகின்ற

धर्मनिरतस्य-தர்மத்தில் ஈடுபட்டவனுக்கு.

நற்குணங்களின் நிறைவினால் பெருமையுள்ளபோதிலும் கர்வம் கொள்ளாமல் விநயமுள்ளவன், ஸூரியன் தாமரையை மலரச்செய்வதுபோல் தன் வம்சத்தை மலரச்செய்கிறான் (சிறப்பிக்கிறான்) மனதுக்கு பிரியமாயும் நன்மை பயக்கிறதாயு முள்ள வார்த்தையைப் பேசிக்கொண்டு தர்மத்திலேயே ஈடு பட்டவனுக்கு இவ்வுலகம் கட்டுப்பட்டிருக்கும். (27)

विद्वन्मनोहरा का सत्कविता बोधवनिता च ।
कं न स्पृशति विपत्तिः प्रवृद्धवचनानुवर्तिनं दान्तम् ॥ २८ ॥

வித்வன் மநோஹரா கா
ஸத்கவிதா போத வநிதா ச ।
கம் ந ஸ்ப்ருசதி விபத்திஃ
ப்ரவ்ருத்த வசநாநுவர்த்தினம் தாந்தம் ॥

विद्वन्मनोहरा का-அறிவாளிகளின் மனதை வசீகரிப்பது எது ?

सत्कविता बोधवनिता च-நல்ல கவிதையும், ஞானம் என்னும் பெண்ணும்

विपत्तिः कं न स्पृशति-ஆபத்து யாரைத் தொடாது ?

प्रवृद्धवचनानुवर्तिनं दान्तं-பெரியோர்களின் வார்த்தைப் படி நடக்கிற அடக்கமுள்ளவனை.

நல்ல கவிதையும் அறிவு என்னும் பெண்ணும் வித்வான்களின் மனதைக் கவரக்கூடியது பெரியோர்களின் வார்த்தையின்படி நடக்கும் அடக்கமுள்ளவனுக்கு ஆபத்துக்கள் வராது. (28)

कस्मै स्पृहयति कमला त्वनलसचित्ताय नीतिवृत्ताय ।
त्यजति च कं सहसा द्विजगुरुसुरनिन्दाकरं च सालस्यम् ॥

கஸ்மை ஸ்ப்ருஹயதி கமலா
த்வநலஸ சித்தாய நீதிவ்ருத்தாய ।
த்யஜதி ச கம் ஸஹஸா
த்விஜ குரு ஸுர நிந்தாகரம் ச ஸாலஸ்யம் ॥

कमला कस्मै स्पृहयति-லக்ஷ்மி யார்பொருட்டு ஆசைப் படுகிறுள் ?

अनलसचित्ताय नीतिवृत्ताय-சோம்பலில்லாத மனமுள்ள, நியாயமான நடத்தையுள்ளவன் பொருட்டு

सहसा कं च त्यजति-(லக்ஷ்மீ) திடீரென்று எவனை விட்டுவிடுகிறுள் ?

द्विजगुरुसुरनिन्दाकरं-பிராமணர், ஆசார்யர் (பெரியோர்) தேவதை இவர்களை தூஷணைசெய்கிறவனையும்

सालस्यं च-சோம்பலுடன் கூடியவனையும்

மனதில் சோம்பலில்லாமல் நியாயமான வழியில் செல்கிறவனிடம் லக்ஷ்மீ ஆசையுடன் வாஸம் செய்வாள். பிராமணர், ஆசார்யர் (பெரியோர்), தேவதை இவர்களை தூஷிக்கிறவனிடமும் சோம்பலுள்ளவனிடமும் லக்ஷ்மீ தங்கமாட்டாள். ஐசுவர்யம் போய்விடும். (29)

कुत्र विधेयो वासः सज्जननिकटेऽथवा काश्याम् ।
कः परिहार्यो देशः पिशुनयुतो लुब्धभूपश्च ॥ ३० ॥

குத்ர விதேயோ வாஸ:
ஸஜ்ஜந நிகடேZதவா காச்யாம் ।
க: பரிஹார்யோ தேச:
பிசுநயுதோ லுப்த பூபஸ்ச ॥

कुत्र वासः विधेयः-எங்கே வாஸம் செய்யவேண்டும்?
सज्जननिकटे अथवा काश्यां நல்ல ஜனங்களின் அருகில் அல்லது காசி க்ஷேத்ரத்தில்
कः देशः परिहार्यः-எந்த தேசம் விலக்கத்தக்கது ?
पिशुनयुतः लुब्धभूपश्च-கோள் சொல்பவர்களுடன் கூடியதும் லோபியான அரசனையுடையதும்

ஸாது ஜனங்களின் அருகில் அல்லது காசியில் வாஸம் செய்யவேண்டும். கோள் சொல்பவர்களும் ஔதார்யமில்லாத பேராசை கொண்ட அரசனும் இருக்கும் நாட்டில் வஸிக்கக் கூடாது. அதைவிட்டு வெளியேறிவிடவேண்டும். (30)

केनाशोच्यः पुरुषः प्रणतकलत्रेण धीरविभवेन ।
इह भुवने कः शोच्यः सत्यपि विभवे न यो दाता ॥ ३१ ॥

கேநாசோச்ய: புருஷ:
ப்ரணத களத்ரேண தீரவிபவேந ।
இஹ புவநே க: சோச்ய:
ஸத்யபி விபவே ந யோ தாதா ॥

केन पुरुषः अशोच्यः-எதனுல் மனிதன் வருந்தத் தகாதவனுகிறுன் ?
प्रणतकलत्रेण धीरविभवेन-அடக்கமுள்ள மனைவியாலும் தீரத்தன்மையாலும்
इह भुवने कः शोच्यः-இவ்வுலகில் எவன் வருந்தத் தக்கவன் ?
विभवे सत्यपि यो न दाता பணம் இருந்தும் எவன் கொடுக்கிறதில்லையோ.

அடக்கமுள்ள மனைவியும், தைர்யமுமிருந்தால் அவன் வருந்தத்தக்கவனல்ல. ஐச்வர்யமிருந்தும் கொடுக்காதவன் வருந்தத்தக்கவன். (31)

किं लघुताया मूलं प्राकृतपुरुषेषु या याच्ञा ।
रामादपि कः शूरः स्मरशरनिहतो न यश्चलति ॥ ३२ ॥

கிம் லகுதாயா மூலம்
ப்ராக்ருத புருஷேஷு யா யாச்ஞா ।
ராமாதபி க: சூர:
ஸ்மர சர நிஹதோ ந யஸ்சலதி ॥

लघुतायाः मूलं किं-சிறுமைத் தனத்திற்கு காரணம் எது?
प्राकृतपुरुषेषु या याच्ञा-பாமர ஜனங்களிடம் யாசிப்பது
रामादपि शूरः कः-ராமனைக்காட்டிலும் சூரன் யார்?
यः स्मरशरनिहतः न चलति-எவன் காம பாணத்தால் அடிபட்டு சலிக்கிறதில்லையோ.

பாமரர்களிடம் யாசிப்பது சிறுமைக்கு மூலகாரணம். காமனின் அம்பால் அடிபட்டு மனம் சலிக்காதவன் ராமனைக் காட்டிலும் சூரன். (32)

किमहर्निशमनुचिन्त्यं भगवच्चरणं न संसारः ।
चक्षुष्मन्तोऽप्यन्धाः के स्युर्ये नास्तिका मनुजाः ॥ ३३ ॥

கிமஹர்நிசமநுசிந்த்யம்
பகவச்சரணம் ந ஸம்ஸார: ।
சக்ஷுஷ்மந்தோபி அந்தா: கே
ஸ்யுர் யே நாஸ்திகா மநுஜா: ॥

अहर्निशं किं अनुचिन्त्यं-இரவும் பகலும் எது நினைக்கத் தக்கது?
भगवच्चरणं, न संसारः-பகவானின் திருவடி; ஸம்ஸாரம் அல்ல.
चक्षुष्मन्तोपि के अन्धाः स्युः-கண்ணுடன் கூடியவர்களாயிருந்தும் எவர்கள் குருடர்களாயிருப்பார்கள்?
ये नास्तिका मनुजाः-எவர்கள் நாஸ்திகர்களான மனிதர்களோ

இரவும் பகலும் பகவானுடைய திருவடியை நினைக்க வேண்டும். பிரபஞ்சத்தை நினைக்கக்கூடாது. பரலோகம் இல்லை கடவுள் இல்லை என்று நாஸ்திகவாதம் பேசும் மனிதர்கள் கண் இருந்தும் குருடர்கள். (33)

कः पङ्गुरिह प्रथितो व्रजति च यो वार्धके तीर्थम् ।
किं तीर्थमपि च मुख्यं चित्तमलं यन्निवर्तयति ॥ ३४ ॥

க: பங்குரிஹ ப்ரதிதோ
வ்ரஜதி ச யோ வார்த்தகே தீர்த்தம் ।
கிம் தீர்த்தமபி ச முக்யம்
சித்தமலம் யத் நிவர்தயதி ॥

इह प्रथितः पंगुः कः-இங்கு ப்ரசித்தமான நொண்டி யார்?
यः च वार्धके तीर्थं व्रजति-எவன் கிழத்தனத்தில் புண்ய தீர்த்தம் செல்கிறானோ.

मुख्यमपि च तीर्थं किं-முக்யமான தீர்த்தம் எது ?
यत् चित्तमलं निवर्तयति-எது மனதின் அழுக்கைப் போக்குகிறதோ.

வயதானபிறகு சரீரம் தளர்ந்து பலம் குன்றி கஷ்டப்படும் கிழப்பருவத்தில் தீர்த்த யாத்திரை செல்பவன் கால் இருந்தும் நொண்டி. மனதின் அழுக்குகளை (காமம், கோபம் முதலானதை) எது போக்குகிறதோ அதுதான் முக்யமான புண்ய தீர்த்தம்.

किं स्मर्तव्यं पुरुषैर्हरिनाम सदा न यावनी भाषा ।
को हि न वाच्यः सुधिया परदोषश्चानृतं तद्वत् ॥ ३५ ॥

கிம் ஸ்மர்தவ்யம் புருஷை:
ஹரிநாம ஸதா ந யாவநீ பாஷா ।
கோ ஹி ந வாச்ய: ஸுதியா
பரதோஷஸ் சாந்ருதம் தத்வத் ॥

पुरुषैः किं स्मर्तव्यं-மனிதர்களால் எது நினைக்கத்தக்கது?
सदा हरिनाम-எப்பொழுதும் பகவந்நாம
न यावनी भाषा-யவந பாஷை அல்ல.
सुधिया को हि न वाच्यः-நல்ல புத்தியுள்ளவனால் எது சொல்லத்தக்கது அல்ல ?
परदोषः तद्वत् अनृतं च-பிறரின் குற்றமும் அதுபோல் பொய்யும்.

எப்பொழுதும் பகவந்நாமாவை ஸ்மரிக்கவேண்டுமே தவிற யவன பாஷையை ஸ்மரிக்கக் கூடாது. நல்ல புத்தியுள்ளவன் பிறர் குற்றங்களையும் பொய்யையும் சொல்லக்கூடாது. (35)

किं संपाद्यं मनुजैर्विद्या वित्तं बलं यशः पुण्यम् ।
कः सर्वगुणविनाशी लोभः शत्रुश्च कः कामः ॥ ३६ ॥

கிம் ஸம்பாத்யம் மநுஜைர்
 வித்யா வித்தம் பலம் யச: புண்யம் ।
க: ஸர்வகுண விநாசீ
 லோப: சத்ருஸ்ச க: காம: ॥

मनुजः किं संपाद्यं-மனிதர்களால் எது ஸம்பாதிக்கத் தக்கது?
विद्या वित्तं बलं यशः पुण्यं- கல்வி, பொருள், பலம், புகழ், புண்யம் (இவை).
सर्वगुणविनाशी कः-எல்லா குணங்களையும் போக்கி விடுவது எது?
लोभः பேராசை
शत्रुश्च कः-எதிரி யார்?
काम -காமம்.

கல்வி, பணம், பலம், புகழ், புண்யம் இவைகளை மனிதர்கள் ஸம்பாதித்துக்கொள்ளவேண்டும். பேராசை எல்லா நற்குணங்களையும் போக்கிவிடும். காமம்தான் முக்கிய எதிரி. (36)

का च सभा परिहार्या हीना या वृद्धसचिवेन ।
इह कुत्रावहितः स्यान्मनुजः किल राजसेवायाम् ॥ ३७ ॥

கா ச ஸபா பரிஹார்யா
 ஹீநா யா வ்ருத்த ஸசிவேந ।
இஹ குத்ராவஹித: ஸ்யாத்
 மநுஜ: கில ராஜஸேவாயாம் ॥

का च सभा परिहार्या-எந்த ஸபை விலக்கத்தக்கது?
या वृद्धसचिवेन हीना வயதான மந்திரி இல்லாதது

इह मनुजः कुत्र अवहित स्यात्-இங்கு மனிதன் எதில் கவனமாக இருக்கவேண்டும்?

राजसेवायां किल-அரசனுக்கு ஸேவை செய்வதில்.

விருத்தனை அநுபவ அறிவுள்ள மந்திரி இல்லாத ராஜ ஸபைக்குச் செல்லக்கூடாது ராஜ ஸேவையில் ஈடுபட்டவன் மிகவும் கவனமாகவும் ஜாக்ரதையாகவும் இருக்கவேண்டும். சிறிது கவனக் குறைவாக இருந்தாலும் ராஜகோபத்தால் பெரிய அநர்த்தம் ஏற்படும். (37)

प्राणादपि को रम्यः कुलधर्मः साधुसङ्गश्च ।
का संरक्ष्या कीर्तिः पतिव्रता नैजबुद्धिश्च ॥ ३८ ॥

ப்ராணாதபி கோ ரம்ய:
குலதர்ம: ஸாது ஸங்கஸ்ச ।
கா ஸம்ரக்ஷ்யா கீர்த்தி:
பதிவ்ரதா நைஜபுத்திஸ்ச ॥

कः प्राणादपि रम्यः-எது பிராணனைக்காட்டிலும் சிறப்பானது?

कुलधर्मः साधुसङ्गश्च-குலதர்மமும் ஸாதுக்களோடு சேர்க்கையும்

का संरक्ष्या-எது காப்பாற்றத்தக்கது?

कीर्तिः पतिव्रता नैजबुद्धिश्च-புகழும், பதிவ்ரதையும், தன் புத்தியும்.

தன் வம்சபரம்பரையாக பெரியோர்கள் அனுஷ்டித்துவரும் தர்மமும் ஸாதுக்களின் சேர்க்கையும் பிராணனைக்காட்டிலும் மிகவும் சிறப்பானவை. இவைகளை ஒருபொழுதும் கைவிடக் கூடாது. புகழையும், பதிவ்ரதா ஸ்திரீயையும் தன் சொந்த புத்தியையும் எப்பொழுதும் காப்பாற்ற வேண்டும். (38)

का कल्पलता लोके सच्छिष्यायार्पिता विद्या ।
कोऽक्षयवटवृक्षः स्याद्विधिवत्सत्पात्रदत्तदानं यत् ॥ ३९ ॥

கா கல்பலதா லோகே
ஸச்சிஷ்யாயார்பிதா வித்யா ।

கோக்ஷயவடவ்ருக்ஷ: ஸ்யாத்
விதிவத் ஸத்பாத்ர தத்த தாநம் யத் ll

लोके कल्पलता का-இவ்வுலகில் இஷ்டத்தைக் கொடுக்கும் கல்பகக்கொடி எது ?

सच्छिष्याय अर्पिता विद्या-நல்ல சிஷ்யனுக்குக் கற்றுக் கொடுக்கப்பட்ட கல்வி

कः अक्षयवटवृक्षः स्यात्-எது அழியாத ஆலமரம் ?

यत् विधिवत् सत्पात्रदत्तदानं-சாஸ்திர விதிப்படி நல்ல பாத்திரத்தில் கொடுக்கப்பட்ட தானம் எதுவோ (அது).

நல்ல சிஷ்யனுக்குக் கற்றுக்கொடுக்கப்பட்ட கல்வி தேவ லோகத்துக் கல்பகக்கொடிபோல் நல்ல பலனைக் கொடுக்கும். சாஸ்திர முறைப்படி நற்குணங்கள் நிறைந்த, தகுதிபெற்றவர் களுக்குக் கொடுக்கும் தானம் அக்ஷயவட விருக்ஷம் (ஆலமரம்) போல் அழியாத பலனைக்கொடுக்கும். (39)

किं शस्त्रं सर्वेषां युक्तिर्माता च का धेनुः ।
किं नु बलं यद्धैर्यं को मृत्युर्यदवधानरहितत्वम् ॥ ४० ॥

கிம் சஸ்த்ரம் ஸர்வேஷாம்
யுக்திர் மாதா ச கா தேநு: 1
கிம் நு பலம் யத் தைர்யம்
கோ ம்ருத்யுர் யதவதான ரஹிதத்வம் ll

सर्वेषां किं शस्त्रं-எல்லோருக்கும் எது சஸ்திரம் ?

युक्तिः-யுக்தி

माता च का-தாயார் யார் ?

धेनुः-பசு

किं नु बलं-எது பலம் ?

यत् धैर्यं-எது தைர்யமோ (அது)

को मृत्युः-யார் ம்ருத்யு ?

यत् अवधानरहितत्वं-கவனமில்லாமலிருப்பது

யுக்திதான் எல்லோருக்கும் ஆயுதம். தக்க யுக்திகளைக் கூறி வாதத்தில் யாரையும் வென்றுவிடலாம். தாய்மாதிரி பசு

நமக்குப் பாலைக் கொடுத்து போஷிக்கிறது. மனோதைர்யம் தான் நமக்கு சொந்த பலம். கவனக் குறைவாயிருப்பது யமன். இதனால் அழிவு ஏற்படும். (40)

कुत्र विषं दुष्टजने किमिहाशौचं भवेदृणं नृणाम् ।
किमभयमिह वैराग्यं भयमपि किं वित्तमेव सर्वेषाम् ॥ ४१ ॥

குத்ர விஷம் துஷ்டஜநே
கிமிஹாசௌசம் பவேத் ருணம் ந்ருணாம் ॥
கிமபயமிஹ வைராக்யம்
பயமபி கிம் வித்தமேவ ஸர்வேஷாம் ॥

कुत्र विषं-எங்கு விஷம் உள்ளது?
दुष्टजने-துஷ்ட மனிதரிடம்
इह नृणां किं आशौचं भवेत्-இங்குமனிதர்களுக்கு எது தீட்டு ஆகும்?
ऋणं கடன்
इह अभयं किम्-இங்கு பயமில்லாதது எது?
वैराग्यं பற்றின்மை
सर्वेषां भयमपि किं-எல்லோருக்கும் பயம் எது?
वित्तमेव-பணம்தான்

துஷ்ட ஜனங்களிடம் விஷம் உள்ளது. மனிதர்களுக்கு கடன் பெரிய தீட்டு. வைராக்யமுள்ளவனுக்கு யாரிடமும் பயம் இருக்காது. பணமுள்ளவன் எப்பொழுதும் பயந்துகொண்டே இருக்கவேண்டும். (41)

का दुर्लभा नराणां हरिभक्तिः पातकं च किं हिंसा ।
को हि भगवत्प्रियः स्याद्योऽन्यं नोद्वेजयेदनुद्विग्नः ॥ ४२ ॥

கா துர்லபா நராணாம்
ஹரிபக்தி: பாதகம் ச கிம் ஹிம்ஸா ।
கோ ஹி பகவத் ப்ரிய: ஸ்யாத்
யோऽந்யம் நோத்வேஜயேதநுத்விக்ந: ॥

नराणां दुर्लभा का-மனிதர்களுக்கு அடையமுடியாதது எது?

हरिभक्तिः-ஹரிபக்தி
पातकं च किं-பாதகம் எது?
हिंसा-ஹிம்ஸை
को हि भगवत्प्रियः स्यात्-எவன் பகவானுக்கு பிரியமான வனாக இருப்பான்?
यः अनुद्विग्नः अन्यं नोद्वेजयेत्-எவன் தான் பயமடையாமல் பிறரை பயமடையும்படி செய்யவில்லையோ (அவன்).

ஹரிபக்தி எல்லோருக்கும் ஸுலபமாக ஏற்படாது. பிறருக்கு ஹிம்ஸை செய்வது பாதகம். எவன் பிறரிடமிருந்து தான் பயப்படாமல் பிறருக்கு பயத்தை உண்டுபண்ணாமலுமிருக்கிறானோ அவன் பகவானுக்கு பிரியமானவன். (42)

कस्मात्सिद्धिस्तपसो बुद्धिः क्व नु भूसुरे कुतो बुद्धिः ।
वृद्धोपसेवया के वृद्धा ये धर्मतत्त्वज्ञाः ॥ ४३ ॥

கஸ்மாத் ஸித்திஸ் தபஸோ
புத்தி: க்வ நு பூஸுரே குதோ புத்தி: ।
வ்ருத்தோபஸேவயா கே
வ்ருத்தா யே தர்ம தத்வஜ்ஞா: ॥

कस्मात् सिद्धिः-எதிலிருந்து ஸித்தி ஏற்படும்?
तपसः-தவத்திலிருந்து
बुद्धिः क्व नु-அறிவு எங்கே இருக்கிறது?
भूसुरे-அந்தணரிடத்தில்
कुतः बुद्धिः-எதனால் புத்தி ஏற்படுகிறது?
वृद्धोपसेवया-பெரியோர்களை ஸேவிப்பதால்
के वृद्धाः பெரியோர்கள் யார்?
ये धर्मतत्त्वज्ञाः-எவர்கள் தர்மத்தின் ஸ்வரூபத்தை அறிந்தவர்களோ (அவர்கள்).

தவத்தால் ஸித்திகள் கிடைக்கும். அந்தணனிடம் புத்தித் திறமை இருக்கும். பெரியோர்களை ஸேவிப்பதால் புத்தி ஏற்படுகிறது. தர்மத்தின் ஸூக்ஷ்மத்தை அறிந்தவர்கள் பெரியோர்கள். (43)

संभावितस्य मरणादधिकं किं दुर्यशो भवति ।
लोके सुखी भवेत्को धनवान्धनमपि च किं यतश्चेष्टम् ॥

ஸம்பாவிதஸ்ய மரணாத்
அதிகம் கிம் துர்யசோ பவதி ।
லோகே ஸுகீ பவேத்கோ
தநவான் தனமபி ச கிம் யதஸ்சேஷ்டம் ॥

संभावितस्य मरणात् अधिकं - கொண்டாடப்பட்டவனுக்கு மரணத்தைக்காட்டிலும் அதிகமாக
किं भवति – எது ஆகிறது ?
दुर्यशः - அபகீர்த்தி
लोके कः सुखी भवेत् – உலகில் எவன் ஸுகமுள்ளவனாக இருக்கிறான் ?
धनवान् – பணமுள்ளவன்
धनमपि च किं - எது பணம் ?
यतश्च इष्टं – எதனால் இஷ்டம் நிறைவேறுகிறதோ அது

உலகத்தோரால் கொண்டாடப்பட்டவனுக்கு அபகீர்த்தி மரணத்தைக் காட்டிலும் அதிகமான துன்பத்தைக் கொடுக்கும். உலகில் பணமுள்ளவன் ஸுகமாக வாழ்வான். எதனால் தன் விருப்பம் நிறைவேறுகிறதோ அது அவனுக்கு தனம். (44)

सर्वसुखानां बीजं किं पुण्यं दुःखमपि कुतः पापात् ।
कस्यैश्वर्यं यः किल शङ्करमाराधयेद्भक्त्या ॥ ४५ ॥

ஸர்வ ஸுகாநாம் பீஜம் கிம்
புண்யம் துக்கமபி குதः பாபாத் ।
கஸ்யைச்வர்யம் யः கில
சங்கரமாராதயேத் பக்த்யா ॥

सर्वसुखानां किं बीजं - எல்லா ஸுகங்களுக்கும் எது காரணம் ?
पुण्यं - புண்யம்
दुःखमपि कुतः – எதிலிருந்து துக்கம் ஏற்படுகிறது?

पापात्-பாபத்திலிருந்து
कस्य ऐश्वर्यम्-எவனுக்கு ஐசுவர்யம் ஏற்படுகிறது?
यः किल भक्त्या शंकरं आराधयेत्-எவன் பக்தியுடன் சங்கரனை பூஜிப்பானோ (அவன்)

எல்லா ஸுகங்களுக்கும் புண்யம் மூலகாரணம். பாபத்தால் துன்பம் ஏற்படும். பக்தியோடு சங்கரனை ஆராதிப்பவனுக்கு ஐசுவர்யம் கிடைக்கும். (45)

को वर्धते विनीतः को वा हीयेत यो दृप्तः ।
को न प्रत्येतव्यो ब्रूते यश्चानृतं शश्वत् ॥ ४६ ॥

கோ வர்ததே விநீத:
கோ வா ஹீயேத யோ த்ருப்த: ।
கோ ந ப்ரத்யேதவ்யோ
ப்ரூதே யஸ்சாந்ருதம் சச்வத் ॥

को वर्धते-எவன் உயர்நிலையடைகிறான்?
विनीत:-வணக்கமுள்ளவன்
को वा हीयेत-எவன் தாழ்வு அடைவான்?
यः दृप्तः-எவன் கர்வமுள்ளவனோ
को न प्रत्येतव्य.-எவன் நம்பத்தகுந்தவனல்ல?
यश्च शश्वत् अनृतं ब्रूते-எவன் அடிக்கடி பொய் சொல்கிறானோ

வணக்கமுள்ளவன் உயர்நிலையை அடைவான். கர்வம் உள்ளவன் தாழ்ந்தநிலையையடைவான். எப்பொழுதும் பொய் பேசுபவனை நம்பக்கூடாது. (46)

कुत्रानृतेऽप्यपापं यच्चोक्तं धर्मरक्षार्थम् ।
को धर्मोऽभिमतो यः शिष्टानां निजकुलीनानाम् ॥ ४७ ॥

குத்ராந்ருதேப்யபாபம்
யச்சோக்தம் தர்ம ரக்ஷார்த்தம் ।
கோ தர்மோऽபிமதோ
ய: சிஷ்டாநாம் நிஜ குலீநாநாம் ॥

कुत्र अनृतेपि अपापं-எந்தக் காரியத்தில் பொய் சொன்னாலும் பாபமில்லை?

धर्मरक्षार्थं यच्च उक्तं-தர்மத்தைக் காப்பாற்றுவதற்காக எது சொல்லப்பட்டதோ

को धर्मः-எது தர்மம்?

निजकुलीनानां शिष्टानां-தன் வம்சத்தைச் சேர்ந்த சிஷ்டர்களுக்கு

यः अभिमतः-எது ஸம்மதமோ.

தர்மத்தைக் காப்பாற்றுவதற்காகச் சொல்லும் பொய் பாபமாகாது. தன் வம்சத்தைச் சேர்ந்த சிஷ்டர்களுக்கு ஸம்மதமானது தர்மமாகும். (47)

साधुबलं किं दैवं कः साधुः सर्वदा तुष्टः ।
दैवं किं यत्सुकृतं कः सुकृती श्लाघ्यते च यः सद्भिः ॥ ४८ ॥

ஸாது பலம் கிம் தைவம்
க: ஸாது: ஸர்வதா துஷ்ட: ।
தைவம் கிம் யத் ஸுக்ருதம்
க: ஸுக்ருதீ ச்லாக்யதே ச ய: ஸத்பி: ॥

किं साधुबलं-எது ஸாதுக்களுக்கு பலம்?

दैवं-தைவம்

कः साधुः-ஸாது யார்?

सर्वदा तुष्टः-எப்பொழுதும் ஸந்தோஷப்படுகிறவன்

किं दैवं-எது தைவம்?

यत् सुकृतं-எது புண்யமோ (அது)

कः सुकृती-எவன் புண்யசாலி?

यश्च सद्भिः श्लाघ्यते-எவன் ஸாதுக்களால் கொண்டாடப்படுகிறானோ

ஸாதுக்களுக்கு தைவம்தான் பலம். எப்பொழுதும் ஸந்தோஷமாக இருப்பவன் ஸாது. புண்யம்தான் தைவம் என்பது. ஸாதுக்களால் கொண்டாடப்படுகிறவன் புண்யசாலி.

गृहमेधिनश्च मित्रं किं भार्या को गृही च यो यजते ।
को यज्ञो यः श्रुत्या विहितः श्रेयस्करो नृणाम् ॥ ४९ ॥

க்ருஹமேதிநஸ்ச மித்ரம் கிம்
பார்யா கோ க்ருஹீ ச யோ யஜதே I
கோ யஜ்ஞோ ய: ச்ருத்யா
விஹித: ச்ரேயஸ்கரோ ந்ருணாம் II

गृहमेधिनश्च किं मित्रं-கிருஹஸ்தனுக்கு நண்பன் யார்?
भार्या-மனைவி
कश्च गृही-யார் கிருஹஸ்தன்?
यो यजते-எவன் யாகம் செய்கிருனோ (அவன்)
कः यज्ञः-எது யஜ்ஞம்?

यः श्रुत्या विहितः नृणां श्रेयस्करः-எது மனிதர்களுக்கு சிரேயஸ்ஸைக் கொடுக்கிறதாக வேதத்தால் விதிக்கப் பட்டதோ

கிருஹஸ்தனுக்கு நட்புக்கு உரியவள் மனைவி. யாகம் செய்கிறவன் கிருஹஸ்தன். மனிதர்களுக்கு சிரேயஸ்ஸைத் தருவதாக வேதத்தில் விதிக்கப்பட்டது (செய்யும்படி உபதேசிக்கப்பட்டது) யஜ்ஞம் (வேதத்தில் சொல்லியிருந்தாலும் அபிசாரகர்மா சிரேயஸ்கரமில்லாததால் யஜ்ஞமாகாது. நன்மையைத் தருவதாயிருந்தாலும் வேதத்தில் விஹிதமல்லாததும் யஜ்ஞமாகாது) (49)

कस्य क्रिया हि सफला यः पुनराचारवाञ्छिष्टः ।
कः शिष्टो यो वेदप्रमाणवान्को हतः क्रियाभ्रष्टः ॥ ५० ॥

கஸ்ய க்ரியா ஹி ஸபலா
ய: புநராசாரவான் சிஷ்ட: I
க: சிஷ்டோ யோ வேத-
ப்ரமாணவான் கோ ஹத: க்ரியாப்ரஷ்ட: II

कस्य क्रिया हि सफला-எவனுடைய காரியம் பலனுள்ளது
यः पुनः आचारवान् शिष्टः-எவர் ஆசாரத்துடன் கூடிய சிஷ்டராயிருக்கிருரோ

कः शिष्टः-சிஷ்டர் யார் ?
यो वेदप्रमाणवान्-எவன் வேதத்தை பிரமாணமாகக் கொண்டிருக்கிறரோ
को हतः-எவன் கெட்டுப்போனவன் ?
क्रियाभ्रष्टः-தர்மகாரியத்திலிருந்து நழுவினவன்

நல்ல ஆசாரங்களை அனுஷ்டிக்கும் சிஷ்டர் செய்யும் காரியம் பலனைத் தரும். வேதத்தை பிரமாணமாக நம்புகிறவர் சிஷ்டர். ஸ்வதர்மத்திலிருந்து நழுவினவன் கெட்டுப்போனவன். நல்ல நிலையை இவன் அடையமுடியாது. (50)

को धन्यः संन्यासी को मान्यः पण्डितः साधुः ।
कः सेव्यो यो दाता को दाता योऽर्थितृप्तिमातनुते ॥ ५१ ॥

கோ தந்ய: ஸந்யாஸீ
கோ மாந்ய: பண்டித: ஸாது: ।
க: ஸேவ்யோ யோ தாதா
கோ தாதா யோऽர்த்தித்ருப்திமாதநுதே ॥

को धन्यः-எவன் பாக்யசாலி ?
संन्यासी-ஸந்யாஸி
को मान्यः-எவன் ஸத்கரிக்கத் தகுந்தவன் ?
साधुः पण्डितः-ஸாதுவான பண்டிதன்
कः सेव्यः-எவன் ஸேவிக்கத்தக்கவன் ?
यो दाता எவன் கொடுக்கிறனே (அவன்)
को दाता-எவன் கொடுக்கிறவன் ?
यः अर्थितृप्तिमातनुते எவன் யாசகனுக்கு திருப்தியை உண்டுபண்ணுகிறனே.

ஸந்யாஸி பாக்யசாலி. ஸாதுவான வித்வான் கௌரவிக்கத் தக்கவன். கொடுக்கிறவனை ஸேவிக்கவேண்டும். யாசகர்களின் மனதில் திருப்தி உண்டுபண்ணுகிறவன் கொடையாளி.

किं भाग्यं देहवतामारोग्यं कः फली कृषिकृत् ।
कस्य न पापं जपतः कः पूर्णो यः प्रजावान्स्यात् ॥ ५२ ॥

கிம் பாக்யம் தேஹவதாம்
ஆரோக்யம் க: பலீ க்ருஷிக்ருத் ।
கஸ்ய ந பாபம் ஜபத:
க: பூர்ணோ ய: ப்ரஜாவான் ஸ்யாத் ॥

देहवतां किं भाग्यं சரீரமுள்ளவர்களுக்கு எது பாக்யம்?
आरोग्यं-பிணியில்லாமை
कः फली-எவன் பலனையடைபவன்?
कृषिकृत्- பயிர்த்தொழில் செய்கிறவன்.
कस्य पापं न எவனுக்குப் பாபம் இல்லை?
जपतः- ஜபம் செய்கிறவனுக்கு
कः पूर्णः-எவன் நிறைவு பெற்றவன்?
यः प्रजावान् स्यात्-எவன் புத்திரனோடு கூடியவனோ

பிணியில்லாமலிருப்பது தேஹமுள்ளவர்களுக்கு பாக்யமாகும். பயிர்த்தொழில் செய்கிறவன் பலனைப்பெறுவான். மந்திரத்தை ஜபிக்கிறவனிடம் பாபம் இருக்காது. குழந்தையுள்ளவன் நிறைவுபெற்றவன். (52)

किं दुष्करं नराणां यन्मनसो निग्रहः सततम् ।
को ब्रह्मचर्यवान्स्याद्यश्चास्खलितोर्ध्वरेतस्कः ॥ ५३ ॥

கிம் துஷ்கரம் நராணாம்
யன் மநஸோ நிக்ரஹ: ஸததம் ।
கோ ப்ரஹ்மசர்யவான் ஸ்யாத்
யஸ்சாஸ்கலிதோர்த்வரேதஸ்க: ॥

नराणां किं दुष्करं-மனிதர்களுக்கு செய்யமுடியாதது எது
यत् सततं मनसो निग्रहः-எப்பொழுதும் மனஸை யடக்குவது
कः ब्रह्मचर्यवान् स्यात्-எவன் ப்ரஹ்மசர்யத்தோடு கூடியவனாக இருப்பான்?
यश्च अस्खलितोर्ध्वरेतस्कः-எவன் கீழே நழுவாத, மேல் நோக்கிய சுக்லமுள்ளவனோ.

எப்பொழுதும் மனதையடக்குவது மனிதர்களுக்குச் செய்ய முடியாத காரியமாகும். சுக்லத்தை நழுவவிடாமல் நிறுத்தி வைத்திருப்பவன் ப்ரஹ்மசர்யமுள்ளவன். (53)

का च परदेवतोक्ता चिच्छक्तिः को जगद्भर्ता ।
सूर्यः सर्वेषां को जीवनहेतुः स पर्जन्यः ॥ ५४ ॥

கா ச பரதேவதோக்தா
சிச்சக்தி: கோ ஜகத்பர்த்தா ।
ஸூர்ய: ஸர்வேஷாம் கோ
ஜீவன ஹேது: ஸ பர்ஜன்ய: ॥

का च परदेवता उक्ता-எவள் பரதேவதையாகச் சொல்லப்பட்டிருக்கிருள்?

चिच्छक्तिः-சித்ரூபிணியான பராசக்தி

को जगद्भर्ता-உலகை போஷிக்கிறவன் யார்?

सूर्यः-ஸூரியன்

सर्वेषां जीवनहेतुः कः-எல்லோருக்கும் ஜீவிப்பதற்குக் காரணம் எது?

सः पर्जन्यः அது மேகம்.

சித்ரூபிணியான பராசக்தி பரதேவதை. உலகைப் போஷிக்கிறவன் ஸூரியன். எல்லோரும் ஜீவிப்பதற்கு முக்ய காரணம் மேகம். (54)

कः शूरो यो भीतत्राता त्राता च कः स गुरुः ।
को हि जगद्गुरुरुक्तः शंभुर्ज्ञानं कुतः शिवादेव ॥ ५५ ॥

க: சூரோ யோ பீதத்ராதா
த்ராதா ச க: ஸ குரு: ।
கோ ஹி ஜகத்குருருக்த:
சம்புர் ஞானம் குத: சிவாதேவ ॥

कः शूरः-எவன் சூரன்?

यो भीतत्राता-எவன் பயந்தவர்களைக் காப்பாற்று கிறவனே (அவன்)

त्राता च कः-(ஸம்ஸார பயத்திலிருந்து) காப்பாற்று கிறவன் யார்?

सः गुरुः-(அக்ஞானத்தைப் போக்கும்) அவர் குரு

को हि जगद्गुरुः उक्तः-எவர் ஜகத்குருவாகச் சொல்லப் பட்டவர்?

शंभुः-பரமேச்வரன்

कुतः ज्ञानं யாரிடமிருந்து ஞானம் கிடைக்கும்?

शिवादेव-பரமசிவனிடமிருந்துதான்.

பயந்தவனைக் காப்பாற்றுகிறவன் சூரன் (ஸம்ஸார பயத்திலிருந்து) காப்பாற்றுகிறவர் குரு. பரமேசுவரன் எல்லா ஜகத்துக்கும் குரு. பரமசிவனிடமிருந்துதான் ஞானம் கிடைக்கும். (55)

मुक्तिं लभेत कस्मान्मुकुन्दभक्तेर्मुकुन्दः कः ।
यस्तारयेदविद्यां का चाविद्या यदात्मनोऽस्फूर्तिः ॥ ५६ ॥

முக்திம் லபேத கஸ்மாத்
முகுந்த பக்தேர் முகுந்த: க: ।
யஸ்தாரயேதவித்யாம்
கா சாவித்யா யதாத்மநோऽஸ்பூர்தி: ॥

कस्मात् मुक्तिं लभेत-எதனால் முக்தியையடைவான்?

मुकुन्दभक्तेः-முகுந்த பக்தியால்

कः मुकुन्दः-முகுந்தர் யார்?

यः अविद्यां तारयेत्-எவர் அவித்யையைத் தாண்டும் படிச் செய்வாரோ

का च अविद्या-அவித்யை எது?

यत् आत्मनः अस्फूर्तिः-ஆத்மஸ்வரூபம் தெரியாமல் இருப்பது.

முகுந்தனிடம் பக்தியுள்ளவனுக்கு மோக்ஷம் கிடைக்கும். அவித்யையைத் தாண்டும்படி செய்பவர் முகுந்தர் ஆத்ம ஸ்வரூபம் தெரியாமலிருப்பதுதான் அவித்யை (இவ்விரு சுலோகங்களிலும் குருவே ஈசுவரன், ஈசுவரனே குரு என்பதைக் காட்டுகிறார்) (56)

कस्य न शोको यः स्यादक्रोधः किं सुखं तुष्टिः ।
को राजा रञ्जनकृत् कश्च श्वा नीचसेवको यः स्यात् ॥ ५७ ॥

கஸ்ய ந சோகோ ய: ஸ்யாத்
அக்ரோத: கிம் ஸுகம் துஷ்டி: ।
கோ ராஜா ரஞ்ஜநக்ருத்
கஸ்ச ச்வா நீசஸேவகோ ய: ஸ்யாத் ॥

कस्य शोको न-எவனுக்கு சோகம் இல்லை?
यः अक्रोधः स्यात्-எவன் கோபமில்லாதவனுக இருப்பானே
किं सुखं-எது ஸுகம்?
तुष्टिः-ஸந்தோஷம்
को राजा-எவன் ராஜா?
रञ्जनकृत्-ஸந்தோஷப்படுத்துகிறவன்
कश्च श्वा-யார் நாய்?
यः नीचसेवकः स्यात्-எவன் தாழ்ந்தவனுக்கு ஸேவகனுக இருப்பானே.

எவனிடம் கோபமில்லையோ, அவனுக்கு சோகம் ஏற்படாது ஸந்தோஷமே ஸுகம். ஜனங்களை ஸந்தோஷப்படுத்துகிறவன் ராஜா. தாழ்ந்தவனிடம் ஸேவை புரிபவன் நாய்க்கு ஸமமானவன். (57)

को मायी परमेशः क इन्द्रजालायते प्रपञ्चोऽयम् ।
कः स्वप्ननिभो जाग्रद्व्यवहारः सत्यमपि च किं ब्रह्म ॥ ५८ ॥

கோ மாயீ பரமேச:
க இந்த்ரஜாலாயதே ப்ரபஞ்சோயம் ।
க: ஸ்வப்ந நிபோ ஜாக்ரத்
வ்யவஹார: ஸத்யமபி ச கிம் ப்ரஹ்ம ॥

को मायी-மாயையோடு கூடியவன் யார்?
परमेशः-பரமேசுவரன்
कः इन्द्रजालायते-இந்திர ஜாலம்போல் பொய்யானது எது?

अयं प्रपञ्चः-இந்த ப்ரபஞ்சம்
स्वप्नविभः कः-ஸ்வப்னம்போன்றது எது?
जाग्रद्व्यवहारः-விழிப்பு நிலையில் நடக்கும் வியவஹாரம்
सत्यमपि च किं-உண்மையானது எது?
ब्रह्म-பரப்ரஹ்மம்

பரமேசுவரர் மாயாவி இந்த பிரபஞ்சம் இந்திரஜாலம்போல் பொய்யானது விழிப்பு நிலையில் நாம் செய்யும் வியவஹாரமும் ஸ்வப்னம் போன்றதே ப்ரஹ்மம் ஒன்றே உண்மைப் பொருள்.

किं मिथ्या यद्विद्यानाश्यं तुच्छं तु शशविषाणादि ।
का चानिर्वचनीया माया किं कल्पितं द्वैतम् ॥ ५९ ॥

கிம் மித்யா யத் வித்யா
நாச்யம் துச்சம் து சசவிஷாணுதி ।
கா சாநிர்வசநீயா
மாயா கிம் கல்பிதம் த்வைதம் ॥

किं मिथ्या-எது பொய்?
यत् विद्यानाश्यं-எது அக்ஞானத்தால் நாசமடைகிறதோ (அது)
शशविषाणादि तु-முயல் கொம்பு முதலானவையோ வென்றல்
तुच्छं-அஸத்து (இல்லாதது)
अनिर्वचनीया च का-இன்னவிதமென்று சொல்ல முடியாதது எது?
माया-மாயை
कल्पितं किं-கல்பிக்கப்பட்டது எது?
द्वैतम्-த்வைதம் (இரண்டாகத் தோன்றுவது).

ஞானத்தால் எது அழிந்துபோகிறதோ அது பொய் முயற் கொம்பு முதலானவை துச்சம் (அத்யந்தம் அஸத்) இன்னவித மென்று சொல்லமுடியாதது மாயை. த்வைதம் (இரண்டாகத் தோன்றும் பிரபஞ்சம் எல்லாம் அக்ஞானத்தால்) கல்பிக்கப் பட்டது. (59)

किं पारमार्थिकं स्यादद्वैतं चाज्ञता कुतोऽनादिः ।
वपुषश्च पोषकं किं प्रारब्धं चान्नदायि किं चायुः ॥ ६० ॥

கிம் பாரமார்த்திகம் ஸ்யாத்
அத்வைதம் சாஜ்ஞதா குதோऽநாதி: I
வபுஷஸ்ச போஷகம் கிம்
ப்ராரப்தம் சாந்நதாயி கிம் சாயு: II

किं पारमार्थिकं स्यात्-உண்மையானது எது ?
अद्वैतं-இரண்டற்ற (ஒன்ருன) பரம்பொருள்
कुतः च अज्ञता-எப்பொழுது அக்ஞானம் ஏற்பட்டது ?
अनादिः-அநாதி (ஆதியில்லாதது)
वपुषश्च पोषकं किं-சரீரத்தைப் போஷிக்கிறது எது ?
प्रारब्धं-பிராரப்தம் (பலனைக் கொடுக்க ஆரம்பித்த
பூர்வ கர்மா).
अन्नदायि च किं-உணவைக் கொடுக்கிறது எது ?
आयुः-ஆயுள்

இரண்டற்ற பரம்பொருள் ஒன்றே உண்மையானது. அக்ஞானம் அநாதிகாலமாக இருக்கிறது. சரீரத்தை வளர்ப்பது பிராரப்தகர்மா. அன்னத்தைக் கொடுப்பது ஆயுள். (60)

को ब्राह्मणैरुपास्यो गायत्र्यर्काग्निगोचरः शंभुः ।
गायत्र्यामादित्ये चाग्नौ शंभौ च किं नु तत्त्वम् ॥ ६१ ॥

கோ ப்ராஹ்மணைருபாஸ்யோ
காயத்ர்யர்க்காக்நி கோசர: சம்பு: I
காயத்ர்யாம் ஆதித்யே சாக்நௌ
சம்பௌ ச கிம் நு தத் தத்வம் II

ब्राह्मणैः उपास्यः कः-அந்தணர்களால் தியானம் செய்யத்
தக்கது எது ?
गायत्र्यर्काग्निगोचरः शंभुः-காயத்ரி, சூரியமண்டலம்,
அக்னி இவற்றிலுள்ள பரமேசுவரன்.

गायत्र्यां आदित्ये अग्नौ च शंभौ च किं नु-காயத்ரி, சூரியன், அக்னி, பரமசிவன் இவற்றில் உள்ளது எது?

तत् तत्वं-அது உண்மைப் பொருள்.

காயத்ரி, ஸௌரியமண்டலம், அக்னி இவைகளில் பரமேசுவரனை பிராமணர்கள் தியானிக்கவேண்டும். காயத்ரியிலும், ஸௌரியனிடத்திலும், அக்னியிலும், சம்புவிடமும் உண்மைப் பொருளான பரப்ரஹ்மத்தின் பிரகாசமுள்ளது. (61)

प्रत्यक्षदेवता का माता पूज्यो गुरुश्च कस्तातः ।
कः सर्वदेवतात्मा विद्याकर्मान्वितो विप्रः ॥ ६२ ॥

ப்ரத்யக்ஷ தேவதா கா
மாதா பூஜ்யோ குருஸ்ச கஸ்தாத: ।
க: ஸர்வ தேவதாத்மா
வித்யா கர்மாந்விதோ விப்ர: ॥

प्रत्यक्षदेवता का-நேரில் காணும் தெய்வம் யார்?
माता-தாயார்.
पूज्यश्च गुरु कः பூஜிக்கத்தக்க பெரியவர் யார்?
तातः-தகப்பனார்.
सर्वदेवतात्मा कः-எல்லா தேவதைகளின் உருவம் கொண்டவர் யார்?
विद्याकर्मान्वितो विप्रः-அறிவு, அனுஷ்டானம் இவற்றுடன் கூடிய பிராமணர்.

நேரில் பார்க்கும் கண் கண்ட தெய்வம் தாயார். பூஜிக்கத்தக்க குரு தந்தை. ஞானம், அனுஷ்டானம் இரண்டும் நிறைந்த அந்தணர் எல்லா தேவதைகளின் உருவமாய் இருக்கிறார். (62)

कश्च कुलक्षयहेतुः सन्तापः सज्जनेषु योऽकारि ।
केषाममोघवचनं ये च पुनः सत्यमौनशमशीलाः ॥ ६३ ॥

கஸ்ச குலக்ஷய ஹேது:
ஸந்தாப: ஸஜ்ஜநேஷு யோऽகாரி ।

கேஷாமமோக வசநம்

யே ச புந: ஸத்ய மௌந சமசீலா: ॥

कुलक्षयहेतुश्च कः-வம்சத்தின் அழிவிற்கு காரணம் எது?

सज्जनेषु यः संतापः अकारि-ஸாதுஜனங்களிடம் எந்த ஸந்தாபம் செய்யப்பட்டதோ (அது).

केषां अमोघवचनं-எவர்களுக்கு வீணாகாத வார்த்தை உள்ளது?

ये च पुनः सत्यमौनशमशीलाः-எவர்கள் எப்பொழுதும் உண்மை, மௌனம், அடக்கம் இவற்றை ஸ்வபாவமாகக் கொண்டவர்களோ.

ஸாது ஜனங்களின் மனதில் தாபத்தை உண்டுபண்ணினால் அது வம்சத்தை நிர்மூலமாக அழித்துவிடும். உண்மை, மௌனம், அடக்கம் இவைகளை ஸ்வபாவமாகக் கொண்டவர்கள் சொல்லும் வார்த்தை வீணாகாது. கட்டாயம் பலனைக் கொடுக்கும். (63)

किं जन्म विषयसङ्गः किमुत्तरं जन्म पुत्रः स्यात् ।
कोऽपरिहार्यो मृत्युः कुत्र पदं विन्यसेच्च दृक्पूते ॥ ६४ ॥

கிம் ஜந்ம விஷயஸங்க:
கிமுத்தரம் ஜந்ம புத்ர: ஸ்யாத் ।
கோऽபரிஹார்யோ ம்ருத்யு:
குத்ர பதம் விந்யஸேச்ச த்ருக்பூதே ॥

किं जन्म-எது பிறப்பு?

विषयसङ्गः-விஷயங்களில் பற்றுதல்.

किं उत्तरं जन्म स्यात्-எது பின் பிறவி ஆகும்?

पुत्रः-புத்திரன்.

कः अपरिहार्यः-தடுக்க முடியாதது எது?

मृत्युः மரணம்.

कुत्र पदं विन्यसेत्-எங்கே காலை வைக்கவேணும்?

दृक्पूते கண்களால் பார்த்து பரிசுத்தமான இடத்தில்,

விஷயங்களில் பற்றுக்கொள்வது பிறவிக்குக் காரணம் நம்முடைய புத்திரன் நம் மறுபிறவியாவான். மரணத்தை யாரும் விலக்கமுடியாது. கண்ணால் பார்த்து பரிசுத்தமான இடம் என்று தெரிந்தபின் அங்கு காலை வைக்கவேண்டும். (64)

पात्रं किमन्नदाने क्षुधितं कोऽर्च्यो हि भगवदवतारः ।
कश्च भगवान्महेशः शंकरनारायणात्मैकः ॥ ६५ ॥

பாத்ரம் கிம் அந்நதாநே
க்ஷுதிதம் கோऽர்ச்யோ ஹி பகவதவதார: ॥
கஸ்ச பகவான் மஹேச:
சங்கர நாராயணாத்மைக: ॥

अन्नदाने पात्रं किम्-அன்னத்தைக் கொடுப்பதில் பாத்ரம் (பெற்றுக்கொள்ள தகுதியுள்ளவன்) யார்?
क्षुधितं-பசியுள்ளவன்.
कः अर्च्यः-எவர் பூஜிக்கத்தக்கவர்?
भगवदवतारः-பகவானுடைய அவதாரம்.
भगवान् महेशः कः பகவானான மஹேசுவரன் யார்?
शङ्करनारायणात्मा एकः-சிவனும் விஷ்ணுவும் சேர்ந்த ஒரே உருவமான சங்கரநாராயணர்.

அன்னதானம் பெறுவதற்கு நல்ல பாத்ரம் (தகுதியுள்ளவன்) பசித்தவன். பகவானுடைய அவதாரமூர்த்திகளை பூஜிக்கவேண்டும். சங்கரரும் நாராயணரும் சேர்ந்து ஒரே வடிவமாயுள்ள சங்கரநாராயணர்தான் பகவானான மஹேசர்.

फलमपि भगवद्भक्तेः किं तल्लोकस्वरूपसाक्षात्त्वम् ।
मोक्षश्च को ह्यविद्यास्तमयः कः सर्ववेदभूरथ चोम् ॥ ६६ ॥

பலமபி ச பகவத்பக்தே: கிம்
தல்லோக ஸ்வரூப ஸாக்ஷாத்த்வம் ।
மோக்ஷஸ்ச கோ ஹ்யவித்யாஸ்தமய:
க: ஸர்வ வேத பூரத சோம் ॥

भगवद्भक्तेरपि किं फलं-பகவத்பக்திக்கு பலன் எது?

तल्लोकस्वरूपसाक्षात्त्वम्-அவருடைய லோகத்தையும் ஸ்வரூபத்தையும் நேரில் காண்பது.

मोक्षश्च कः-மோக்ஷம் எது?

अविद्यास्तमयः-அக்ஞான நாசம்.

अथ च सर्ववेदभूः कः-எல்லா வேதங்களுக்கும் காரணம் எது?

ओम् ஓம் என்னும் பிரணவம்.

பகவானுடைய லோகத்தையும், ஸ்வரூபத்தையும் நேரில் அறிந்துகொள்வது பகவத் பக்தியின் பலன். அவித்யை அடியோடு நீங்குவது மோக்ஷம். எல்லாவேதங்களுக்கும் மூலம் 'ஓம்' என்ற பிரணவம். (66)

इत्येषा कण्ठस्था प्रश्नोत्तररत्नमालिका येषाम् ।
ते मुक्ताभरणा इव विमलाश्चाभान्ति सत्समाजेषु ॥ ६७ ॥

இத்யேஷா கண்டஸ்தா
ப்ரச்நோத்தர ரத்ந மாலிகா யேஷாம் ।
தே முக்தாபரணா இவ
விமலாஸ்சாபாந்தி ஸத்ஸமாஜேஷு ॥

इति என்ற, एषा-இந்த, प्रश्नोत्तररत्नमालिका-பிரச்நோத்தர ரத்நமாலையானது, येषां-எவர்களுடைய, कण्ठस्था-கழுத்தில் உள்ளதோ, ते-அவர்கள், मुक्ताभरणा इव-நல் முத்து மாலை யணிந்தவர்கள்போல், सत्समाजेषु-ஸாதுக்களின் கூட்டங்களில் विमलाश्च-பரிசுத்தர்களாக, आभान्ति-விளங்குகிறார்கள்.

இந்த பிரச்நோத்தர ரத்னமாலிகை எவர்களுடைய கழுத்தில் விளங்குகிறதோ (இதை நெட்டுருப்பண்ணி கண்டஸ்தமாக்கி இதன் கருத்துக்களையும் மனதில் தரிக்கிறார்களோ) அவர்கள் நல்முத்துமாலை ஆபரணம் அணிந்தவர்கள் போல் ஸாதுக்களுடைய கூட்டங்களில் பரிசுத்தர்களாக விளங்குகிறார்கள் (67)

ப்ரச்நோத்தர ரத்னமாலிகா

முற்றும்.